

நீங்கள் உங்கள் பற்களை
இன்று மக்ளீன் செய்தீர்களா?
நெடுங்காலமாக நான் மக்ளீன்ஸ் மீது நம்பிக்கை வைத்திருக்கிறேன். ஒவ்வொரு தினத்தையும் அது எனக்கு ஒழுங்காக ஆரம்பித்துக் கொடுக்கிறது.
வாயைச் சுத்திகரித்து மூச்சின் நாற்றத்தை போக்குகிறது
உமிழ்நீர் கெடுதலைத் தடுத்து ஈறுகளைப் பாதுகாக்கிறது.
மேலே உள்ள கறைகளை அகற்றி பற்களுக்கு வெண்மை தருகிறது
மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை யாரும் காப்பியடிக்க முடியாத பிரத்யேக முறையில் தயாரித்தது மிகவும் சுத்தமாயிருப்பதால் உலகமுழுவதும் பரவியுள்ளது, கறைகளைப் போக்கி வாயைச் சுத்தப்படுத்தி, உபயோகிப்பதற்கு மணமும் சுவையும் உள்ளதாக விளங்குகிறது
ல்க்ஷக்கணக்கான மக்கள் பிரதி தினமும் காலையில் மக்ளீன்ஸ் மூலம் தம் பற்களைச் சுத்தம் பண்ணுவதைப் பழக்கப்படுத்திக் கொண்டுள்ளனர்.
இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!
MACLEANS
PEROXIDE
TOOTH PASTE
MTX-2-Tm

Govt. Regd. No. 816

# பரிசு ரூ 6000 பிக்கு ஸே



## 2-வது பரிசு 2000 முதற் பரிசு ரூ 3000 3-வது பரிசு 1000

பரிசுகள் நிபந்தனைப்படி கியாரண்டியானவை.

இப்போட்டியின் சீலிட்ட விடை சென்னை ப்ரீமியர் பாங்க் ஆப் இந்தியாவில் டிபாசிட் செய்யப்பட்டுள்ளது.

★ பிரவேசக்கட்டணம் கூப்பன் ஒவ்வொன்றுக்கும் அணா நான்கு மட்டுமே ★

## முடிவு தேதி 10—11—50

| | | விடைகள் 1 | 2 |
|---|---|---|---|
| 1 | கடவுள் பக்தி உள்ளவர்கள் இது உடையவர்களாயிருப்பார்களென எதிர் பார்க்கலாம். | அன்பு | நோன்பு |
| 2 | இது எப்போதுமே நிர்மலமாயிருக்குமென்று சொல்வதற்கில்லை. | மனம் | வானம் |
| 3 | இது வந்துவிட்டால் நிலையே தெரியாது சிலருக்கு. | யோகம் | கோபம் |
| 4 | இவனுக்குக் கணக்குத் தெரியாமலிருக்குமா ? | வணிகன் | கணிகன் |
| 5 | நீண்ட வர்ணனைகளுடன் கூடிய ஒரு பெரிய கதையை முழுதும் படிக்க, போதிய இது இருக்கவேண்டும். | பொழுது | பொறுமை |
| 6 | உடம்பு சுகமில்லாதிருக்கும்போது இதுவும் சரியாக இராது. | பசி | ருசி |
| 7 | இவனுடன் யாராவது சகவாசம் வைத்துக்கொள்ளுவார்களா ? | கள்ளன் | குள்ளன் |
| 8 | முன் காலத்திலிருந்த பிரதானம் இப்போது இதற்கில்லை. | சத்திரம் | சாத்திரம் |
| 9 | குழந்தைகள் தவறு செய்யும்போதெல்லாமும் இது செய்வது நல்லதல்ல. | தண்டித்தல் | மன்னித்தல் |
| 10 | பெண் இப்படிப்பட்டவள் என்றால் எந்த வரன்தான் விரும்பமாட்டான். | சுமதி | சிமதி |

மேலே உள்ள கட்டத்தில் பத்து குறிப்புகளும் அவை ஒவ்வொன்றுக்கும் இரண்டு இரண்டு விடைகளும் தரப்பட்டுள்ளன. அதில் குறிப்புக்கு மிகப்பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடைகளைச் சாதா காகிதத்திலும் எழுதலாம். அச்சுக கூப்பன்களும் தேவையானவர்களுக்கு அனுப்பப்படும். விடைகளை அப்படியே வார்த்தைகளாகவும் எழுதலாம். வார்த்தைகளுக்குப் பதிலாக 1, 2, என்ற எண்களை உபயோகித்தும் எழுதலாம். 'பர்முடேஷன்' (Permutation) முறையும் அனுமதிக்கப்படும்.

கட்டணத்தை மணியார்டர் மூலமேதான் அனுப்பவேண்டும். ம. ஆ ரசீதும் கண்டிப்பாய் கூப்பன்களுடன் சேர்த்து அனுப்பவேண்டும். ம. ஆ பாரத்தின் அடிக் கூப்பனிலும் அனுப்புபவரின் முழு விலாசம் எழுதவேண்டும். சரியான விடை கார்த்திகைக் காவேரியில் வெளியாகும். மானேஜரின் தீர்ப்பும் எமது நிபந்தனைகளுமே முடிவானதும் சட்டப்படிக் கட்டுப்படுத்துவதுமாகும் நிபந்தனைகள் வேண்டுவோர் எழுதவும்.

கூப்பனும் கட்டணமும் அனுப்பவேண்டிய விலாசம் :-

## மானேஜர், வரலக்ஷ்மி கம்பெனி

"ஸ்ரீவாஸ்" பல்மநேர் P. O. (சித்தூர் ஜில்லா)

போட்டி 7-ன் சரியான விடை :—

(1) மடந்தை (2) கட்டடம் (3) பழிமொழி (4) வாசனை (5) மானி (6) கலை (7) புத்தி (8) பயிற்சி (9) மனம் (10) பழமை.
2 2 2 1 1 1 1 1 2 2

(பரிசு விவரமும் ஜாபிதாவும் கார்த்திகை காவேரியில்)

தேவை :- வரலெக்ஷ்மிப் போட்டிகளுக்குக் கூப்பன்களையும், கட்டணமும் வசூலித்து அனுப்ப, எங்கும் டிபாஸிட் கட்டக்கூடிய கலக்டர்கள் தேவை. விவரங்களுக்கு உடனேயே எழுதவும்.

**வரலெக்ஷ்மிப் போட்டி-6-முடிவு.**

வரலக்ஷ்மிப் போட்டி நெ...6..

*சரியான விடை*

1.. தாளம் ..........
2.....வேலைக்கிடைத்த.....
3...திரளை.........
4...கிலாபம்.........
5 உடன்.........
6 ..திரை.........
7.....திடமானம்.........

We hereby certify that the above is the Solution in original deposited with us, by VARALAKSHMI COMPANY on 25th July 1950 in a sealed cover which was opened in our presence today and that a copy of the above solution has been lodged with the bank.

For PREMIER BANK OF INDIA LTD.

V. Ramaswamy
Agent. 16.9.50
Madras

**முதற் பரிசு (சரியான விடைக்கு)**

தலைக்கு

## ரூ. 30—10—0 வீதமும்

**2வது பரிசு (ஒரு தப்புள்ள விடைக்கு)**

தலைக்கு

## ரூ. 1—2—0 வீதமும்

பிரித்து வழங்கப்பட்டன.

பரிசுத்தொகைகள் 22—9—50 அன்று அனுப்பப்பட்டன.

பரிசு பெற்றவர்களின் சுருக்கமான ஜாபிதா.

டி. எஸ். வெங்கடேசப் பிள்ளை குளக்கரைவீதி புதுதிருப்பாசூர் திருவள்ளூர் தாலுகா. டி. ஆர். கிருஷ்ணமூர்த்தி ஐயர் பெருமாள்கோயில் மேற்கு வடம்போகித்தெரு, மதுரை. எம். ராமராஜ் சின்ன ஒபளாபுரம், மதுரை ஜில்லா, ஏ. ஏ. பரமசிவம் போடிநாயக்கனூர். ஜி. ஆர். மோதிலால் குர்ஸாடிலேன பாலஸ் ரோடு, மதுரை. எ. கே. விஸ்வநாதன் திண்டுக்கல். ஆர். விஸ்வபதி 43. பக்தபுரித்தெரு, கும்பகோணம். டி. ராஜகோபாலன் கே இ. எஸ். வி, லிமிடெட், கும்பகோணம். எஸ். கோபாலகிருஷ்ணன் போர்டு ஹைஸ்கூல் கொடவாசல் டி. கே. வேணுகோபாலன் மஹாதானத்தெரு மாயவரம். ஆர், குப்புஸ்வாமி பாண்டுகுடி, தஞ்சை ஜில்லா. பி. வாஷிங்டன் ஐ. எ, எப். ஆவடி. ஏ. தேவநாதன ஐ. எ. எப். ஆவடி. ஜி. நாகப்யா மயிலாப்பூர், சென்னை. மு. கோபாலன் கீழ்ப்பாக்கம், சென்னை. பி, வி. ஸரஸ்வதி ஆதம்பாக்கம், பரங்கிமலை. ஜெ. ஜெ. செல்லையா பாலம்குள்ளம், திருநெல்வேலி. ஏ. கோபாலன திருவனந்தபுரம். கே. ஏ. நடேச முதலியார் கே, வி. குப்பம், குடியாத்தம், பி. சரோஜா கன்னுட் ப்லேஸ். புதுடில்லி. ஆர். முத்துஸ்வாமி ஐயர் நாகபுரி. (மற்றும் பலர்)

[இடநெருக்கடி காரணமாக முழு ஜாபிதாவையும் பிரசுரிக்க இயலாமைக்கு வருந்துகிறோம். பரிசுபெற்றவர்கள் எல்லோருக்கும் விவரம் தபால் மூலம் அறிவிக்கப்பட்டது. மானேஜர்]

# மாதவிடாய் :

சகோதரிகளே! எமது "**சும்பகி—ரேசனி**" என்ற மருந்தை உபயோகித்தால், மாதவெளியீட்டை ஒழுங்குபடுத்துவதுடன் எவ்வளவு நாட்பட்ட தொந்தரவாக இருப்பினும் நிவர்த்திசெய்யும். இங்கற்றது. 100-க்கு 100 பலன் நிச்சயம்.

விலை ரூ. 6/- தபாற்செலவு ரூ. 0-14-0.

# கர்ப்பத்தடை :

"**தம்பதி—சகா**" நீங்கள் விரும்புகிறபடி கர்ப்பத்தடைக்கு உதவுகிறது. தீமை கிடையாது. 30 வருடங்களாக எல்லோராலும் உபயோகிக்கப்படுகிறது. பலர் நன்மை அடைந்திருக்கின்றனர்.

பூரண கர்ப்பத் தடைக்கு. ரூ. 6–0–0

6 மாத காலத் தடைக்கு ரூ. 3–0–0

(தபாற் செலவு ரூ. 0–14–0)

# வீரியம், யௌவனம் :

உடல், மனம் இரண்டிற்கும் "**மதன விலாஸ ரஸாயனம்**" சிறந்த டானிக். மயக்கம், சோர்வு, நரம்புத் தளர்ச்சி, மறதி, அஜீரணம் முதலியவைகளுக்குக் கைகண்ட மருந்து, சோர்வடைந்த மாணவர்கள், மூளை வேலையில் ஈடுபடும் கவிஞர்கள், மணவாழ்க்கை தொடங்கிய காதலர்கள் இவர்களுக்கு இந்த டானிக் ஓர் வரப் பிரஸாதம்.

விலை ரூ. 3–0–0

# விரைவாதம்

குடல் இறக்கம், யானைக்கால், கீல்வாதம், வீக்கம் வலியுடன் கூடிய தாயினும், எத்தனை நாட்பட்டதாயினும் ஒரு வாரத்தில் நிச்சயம் குணமளிக்கும் எமது ஆயுர்வேத முறைப்படி தயார்செய்த "**ஸம்ஸநதி**". ஓர் முறை உபயோகித்துப் பாருங்கள்!

விலை ரூ. 4–8–0 தபாற்செலவு ரூ. 0–14–0

KAVIRAJ M· KAVYATIRTHA (C. M.)
**70, Cornwallis Street, CALCUTTA-6.**

List of Prize Winners in Contest No. 35:— (1) S. S. Singh Reyat, Jamshedpur, (2) T. K. Menon, Tirupanilluiah, (3) G. Choudhary, Bangalore, (4) S. R. Prasad, Basti, (5) P. Raman, Mayavaram, (6) L. V. Rao, Chitaldrug, (7) Velayutham, Kumbakonam. (8) M. Syed, Bihar. (9) H. R. Srivatsva, Kanpur. (10) N. Sivanayam, Travancore. (11) M. S. Hode, Champaran. (12) S. S. Bahadur, Poona. (13) P. S. Rao, Vajayavada. (14) S. R. Chopra, Meerut. (15) A. V. N. Reddy, Hyderabad Dn. (16) S. R. Factory, S. Travancore. (17) S. K. Singh, Saharanpur. (18) Dwaraknath, Kasmere, (19) Md. Afague, Darbhanga. (20) V. R. T. Singh, Ludhiana. (21) J. S. Narayana, Lucknow (22) P. A. Swamy, Bezwada. (23) B. Lal, Pathankot. (24) Baboobai, Bilapur. (25) Kapur, Madras-16 and 42 others in addition to these 3 persons 2nd prize 42 persons 3rd prize and 8 persons 5th prize. Full details will be published in the Rainbow dated 10—10—50.

# ரூபாய் 25,000 பரிசு

**ரிஜிஸ்டர் நெ. 249** **போட்டி நெ. 37**

**M/S. Premier Bank of India Ltd..ல் ஸீல் செய்து வைக்கப்பட்டுள்ள சரியான விடை அவர்கள் அங்கீகாரத்தின் பேரில் பிரசுரிக்கப்படும். முற்றிலும் சரியான விடை அனுப்புபவர்களுக்கு முதல் பரிசு ரூ. 12,000. முதல் இரண்டு வரிசை சரியான விடைக்கு, இரண்டாம் பரிசு ரூ. 7000. முதல் ஒரு வரிசை சரியான விடைக்கு மூன்றும் பரிசு ரூ. 3000. முதல் மூன்று நம்பர் சரியான விடைக்கு நான்காம் பரிசு ரூ. 2000/- முதல் இரண்டு நம்பர்கள் சரியான விடைக்கு 5-ம் பரிசு ரூ. 1,000-ம் அளிக்கப்படும். எங்கள் ஸீல் வைத்த விடைகள்படி எல்லாம் சரியாக இருக்கவேண்டும்.**

RAINBOW COMPETITIONS

KEY 8 NO. 35 46 to 61 = 214

| | | | |
|---|---|---|---|
| 49 | 54 | 50 | 61. |
| 59 | 52 | 56 | 47 |
| 60 | 51 | 55 | 48 |
| 46 | 57 | 53 | 58 |

We hereby certify that the above is the solution in original deposited with us by Rainbow Competitions No 35 on 25/8/50 in a sealed cover which was opened in our presence to-day and that a copy of the above solution has been lodged with the Bank.

For The Premier Bank of India Ltd

Agent, Madras

## முடிவு தேதி 27--10--50 விடை 11--11--50

**பிரவேசக்கட்டணம்:- கூபன் 1-க்கு ரூ. 1/-**

**6 கூபன் கொண்ட ஸெட் 1-க்கு ரூ. 5/-**

222

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |
| | | | |

**விடைகள் கண்டுபிடிக்கும் விதம்:-** 48 முதல் 63 வரையுள்ள எண்களைக் கொடுக்கப்பட்டிருக்கும் கட்டங்களில், மேலிருந்து கீழும், இடமிருந்து வலமும், குறுக்காகவும், எப்படிக் கூட்டினாலும் 222 வரும்படியாக அமைக்கவேண்டும். ஒரு எண்ணை ஒரே தடவைதான் உபயோகிக்கவேண்டும். **விதிகள்:-** தனி வெள்ளைக் காகிதத்தில் தேவையான கட்டணத்துடன் எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் எழுதி அனுப்பலாம். ஒவ்வொரு கூப்பனிலும பெயர், விலாசம், எண்கள் எல்லாம் ஆங்கிலத்தில் விளக்கமாக எழுதப்படவேண்டும்; பிரவேசக்கட்டணத்தை கிராஸ் செய்த போஸ்டல் ஆர்டர் மூலமாகவோ அலலது மணியார்டர மூலமாகவோ அனுப்பலாம். மணியார்டர் செய்த ரசீதை கூபன்களுடன் சேர்த்து அனுப்பவேண்டும. வசூலுக்குத் தகுந்தபடி, பரிசு பகிர்ந்து அளிக்கப்படும். போட்டி சம்பந்தமாக மானேஜர் தீர்ப்பே முடிவானது; சட்டபூர்வமாய்க் கட்டுப்படுவதுமாகும். போட்டி முடிவு RAINBOW மாதமிருமுறை பத்திரிகையில் பிரசுரிக்கப்படும். அல்லது 4 அணா ஸ்டாம்பு அனுப்பினால் விடை அனுப்பப்படும்.

கூபன்கள் அனுப்பவேண்டிய விலாசம்:-

**THE RAINBOW COMPETITIONS No. 37, 306 (6), Mint Street, MADRAS-1.**

---

**ரிஜிஸ்டர் நெ. 249** **ரூபாய் 25,000 பரிசு** **போட்டி நெ. 38**

சரியான விடை Premier Bank of India Ltd. Madras-ல் ஸீல் செய்துவைக்கப்பட்டுள்ளது. (மற்றவை மேலே கூறப்பட்டுள்ளது போல்). முடிவு தேதி 13—11—50 — விடை: 27—11—50

பிரவேசகட்டணம் கூபன் 1க்கு ரூ. 1/- — 6 கூபன் கொண்ட ஸெட் 1க்கு ரூ. 5/-

226

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |
| | | | |

**விடைகள் கண்டுபிடிக்கும் விதம்:—** 49 முதல் 64 வரையுள்ள எண்களை கொடுக்கப்பட்டுள்ள கட்டங்களில் எப்படிக் கூட்டினாலும் 226 வரும்படி அமைக்கவேண்டும். ஒரு எண்ணை ஒரே தடவைதான உபயோகிக்க வேண்டும். மற்ற விபரங்கள் மேற்கூறியதுபோல்.

கூபன்கள் அனுப்பவேண்டிய விலாசம்:-

The Rainbow Competitions, No. 38,

306, (6) Mint Street, Madras-1






குழந்தைப்பருவத்தில்

முக்கியமான சுகத்தைத் தரும்

வுட்வார்ட் வைத்தியனின்

"கிரைப் வாட்டர்"

என்னும் மருந்துத் திராவகம்

குழந்தைக்கு

ஆரோக்கியத்தைத் தரும்

# WOODWARD'S
# GRIPE WATER

**W. WOODWARD LTD. LONDON. ENGLAND**

Agent:— T. T. KRISHNAMACHARI & Co.
12 A, Lingha Chetty Street, — G. T. MADRAS.

# காவேரி

## பொருளடக்கம்


| விக்ருதி மலர் 10 | | ஐப்பசி இதழ் 3 |
|---|---|---|




குறிப்பு :

'காவேரி'யில் வெளியாகும் கட்டுரைகளிலுள்ள பெயர்கள் கற்பனைப் பெயர்கள். அவைகளில் அடங்கிய அபிப்பிராயங்களும் அவற்றை எழுதியவர்களுடையனவே. அவைகளுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளியல்ல.

# காவேரி

விக்ருதி மலர் 10

''சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்—''பாரதியார்

ஐப்பசி இதழ் 3

## விடுமுறை

### ஸ்ரீதரம் குருஸ்வாமி

ஆகாயவிமானத் தாக்குதல் இங்கிலாந்தில் மும்முரமாக இருந்தகாலம். அதில் ஆகஸ்ட் பாங்க் விடுமுறை. லண்டனிலிருந்து திரள்திரளாக ஜனங்கள் வெளியேறும் வழக்கம் அதற்காக நின்றுவிடவில்லை. வெகு நாளாக இதற்கென்று சேமித்து வைத்துக்கொண்டிருக்கும் பெட்ரோலை ஊற்றிக்கொண்டு கார்கள் புறப்படுகின்றன. மேலே குண்டுமாரி எப்போது பெய்ய ஆரம்பிக்குமோ தெரியாது. அபாயச்சங்கு எந்த நிமிஷமும் அலற ஆயத்தமாக இருக்கிறது. கூட்டத்தில் இடித்துத்தள்ளி மேலே புகுந்து போகும் ஜனங்களுக்கு அதையெல்லாம் பற்றி அன்றைக்கு அக்கறை இல்லை. தினமும் வேலை செய்யும் வட்டாரத்தை விட்டு வெகுதூரம் வெளியே போய்விட வேண்டும் ஏன்பதே அவர்கள் குறி. எந்தக் காரியம் தடைப்பட்டாலும் விடுமுறை தடைப்படலாமா? அவர்களுள் தமாஷ் பேர்வழிகளும் உண்டல்லவா? ஊர்வலங்களில் பிரசாரக்கொடி அல்லது விளம்பரக்கொடிகளைப் பிடித்துச் செல்வதைப்போல், இதிலும் தங்கள் கருத்துக்களை வெளியிட அவர்களுக்கு இடமிருக்கிறது. காரில்போனால் மாத்திரம் சீக்கிரமாகப் போய்விடமுடியுமா? சந்தடி நிறைந்த இடங்களில் ஆமையைவிட மெதுவாகத்தான் நகரமுடியும். அந்தக் கார்களில் ஒன்றில் ஏதோ எழுதியிருக்கிறது. நம்பர் பிளேட்டைப்போல ஒரு தகடு. குறுக்கே நெடுக்கப் போகும் ஜனங்கள் அதைக் கவனிக்கிறார்கள். அதில் என்ன எழுதியிருக்கிறது? "ஹிட்லரே அரைக்கணம் பொறும்!" (Half a mo,' Hitler!) அதாவது, "உம்முடைய ஸாம்ராஜ்ய விஸ்தரிப்புத் திட்டத்திற்கு எவ்வளவோ அவகாசம் இருக்கிறது, ஹிட்லரே! என்னுடைய விடுமுறை அப்படியில்லை. இதை நான் உடனே முடித்துக்கொள்வதற்கு உம் அனுமதி தாரும்!" என்று அர்த்தம். இவ்வளவு நகைச்சுவை உள்ள நாட்டினரையா ஹிட்லர் வெல்ல முடியும்?

சனிக்கிழமை பிற்பகல் நகர எல்லைக்குள் உள்ள அத்தனை உழைப்பாளிகளும் புறப்பட்டுவிடுகிறார்கள். குறித்த ஓரிடம் வரை ரெயில் வண்டி அல்லது பஸ். அதற்கப்புறம் கால்நடை. எங்கே போனாலும் தங்குவதற்கு விடுதி; உணவு, படுக்கை. ஞாயிற்றுக்கிழமை மாலை வரை வீட்டு நினைவோ தொழிற்சாலை நினைவோ வராது. ஞாயிற்றுக் கிழமை இரவு இந்தப் பிரவாஹம் நகரத்தை நோக்கி, நான்கு பக்கத்திலிருந்தும் திரும்பும். களைத்துப் படுத்ததும், பொழுது விடிவதுதான் தெரியும். அலுப்பு அத்தனையும் தீர்ந்துவிடும். அடுத்த ஐந்தரை நாள் அஸுரர்கள்போல் உழைக்கலாம்.

வெகு தூரம் இப்படிக் கும்பலோடு கும்பலாகப் போக மனம் இல்லையா? இரண்டொருவர் சேர்ந்து கொள்ளலாம். ஒரு சிறு கூடையில் சிற்றுண்டியும் பானங்களும் எடுத்துக்கொள்ளலாம். காலையில் புறப்பட்டுக் கால் கடுக்கும் வரை நடக்கலாம். ஓரிடத்தில் தங்கி, சிற்றுண்டி அருந்தி இளைப்பாறிப் பிறகு

வீடு திரும்பலாம். உழைப்பினால் உடல் சோர்ந்து விழும்போது மனம் தெளிவடைகிறது. மனமும் உடலும் வண்டியில் பூட்டிய காளை ஜோடி. மனதிற்கு மாத்திரம் வேலை கொடுக்கிறோம்; தாற்றுக்குச்சி போட்டு அதை விரட்டுகிறோம். அதே அளவிற்குப் பிறகு உடலையும் அடித்துத் துரத்தினால் தேக ஆரோக்கியம் என்னும் வண்டி ஸமமாக முன்னேறும்.

வருஷம் முழுவதும் வயிற்றைக் கட்டி வாயைக் கட்டிப் பணம் சேர்த்து, ஒரு பத்து நாள் விடுமுறையில் அத்தனை பணத்தையும் வாரியிறைப்பது நல்லதாகுமா? என்னும் இந்தக் கேள்விக்கு J. B. ப்ரீஸ்ட்லி பதில் சொல்கிறார்: “அப்படிச் செலவழியும் அந்தப் பணமும் காலமும் என்னுடையதல்ல! இருந்தாலும், சொல்கிறேன். தினசரி வாழ்க்கையில் கொஞ்சம் அதிகப்படி பணம் செலவிட்டால் வாழ்க்கை எவ்வளவோ செவ்வையாக இருக்கும். அப்போது ஆகஸ்டில் செலவிடப் பணம் இல்லாவிட்டாலும், ஸெப்டம்பர் முதல் ஜூலை வரை இன்னும் அதிக மகிழ்ச்சியோடிருக்கலாம். அது மாத்திரமல்ல, பத்துநாள் விடுமுறை காலத்திற்காகப் பெரும்பாலோர் போகும் இடங்களில் தங்கும் இடத்திற்கு வாடகை அதிகம், வாங்கும் பண்டங்கள் விலை கிராக்கி. ஆகையால் செலவிடும் பணத்திற்குத்தகுந்த மதிப்புக் கிடைப்பதில்லை. ஜனங்கள் இந்த வகையில் ஏமாந்தே போகிறார்கள். ப்லாக்பூல் (Blackpool) போன்ற இடங்களில் வரும் ஜனக்கூட்டம் ஏதோ ஓரளவு குஷியாகத்தான் இருக்கிறது. ஆனால் அதே பணத்தை அவர்கள் தங்கள் சொந்த வீட்டில், சொந்த ஊரில் செலவிட்டால் அதே தொகைக்கு அவர்கள் அதிக நன்மை பெறலாம். மனோதத்துவ சாஸ்திரப்படி இதைப் போன்ற விடுமுறை எப்போது தேவை, யாருக்குத் தேவை? ஒருவருடைய சொந்த வாழ்க்கை வறண்டு சோபையற்று இருந்தால், வறுமையால் சூன்யமாகத் தோன்றினால், அதற்கு மாற்று எது? ஒரு பத்து நாள் தாம் வேற்று மனிதர் போலவும், பணத்தை லக்ஷியமில்லாமல் செலவிடக் கூடியவர்போலவும், நடிப்பதுதான்......”

பிறருக்குப் பணிவிடை செய்தே வயிறு வளர்க்கும் ஒருவர், நாலுபேர் தமக்குப் பணிவிடை செய்யவும் தாம் அவர்களுக்குக் கூலியும் வெகுமதியும் தரவும் ஸந்தர்ப்பம் கிடைக்கும்போது, அதனால் தம் உள்ளத்தில் முன்பு உண்டாகியிருக்கும் ஏக்கம் நீங்குவதைப் பார்க்கிறார். இந்தவிதத்தில், விடுமுறைக் காலத்தில் அவர் பணத்தை அள்ளி வீசுவது அவருக்கு உண்மையிலேயே ஒரு தேவையைப் பூர்த்திசெய்வதாக ஆகிறது என்கிறார் ப்ரீஸ்ட்லி.

விடுமுறைக் காலத்தில் கடற்கரைப் பட்டினங்கள் போன்ற ஸுகவாசஸ்தலங்களுக்குப் போய், ஹோட்டல்களில் தங்கி, இரவெல்லாம் நடன சாலைகளில் கழித்து, மதுபானம் போன்ற வகைகளில் பணத்தைக் கரைத்துப் பிறகு வீடு திரும்பும் பெரும்பான்மையோரைக் குறித்தது இந்த விவரம். மேனாட்டுப் பண்பாடு இந்த முறையை அங்கே வளர்த்திருக்கிறது. நம் நாட்டில்?

மன்னார்குடியில் தெப்பம், திருவீழிமிழலையில் ரிஷபவாஹனம், ஸ்ரீரங்கத்தில் சித்திரைத்தேர் என்று அங்கங்கே ஐந்து மைல் பத்துமைல் வட்டாரத்தில் உள்ள சிவவிஷ்ணு ஆலய உற்சவங்களும் கிராம தேவதை கோயில்களில் காப்புக்கட்டி நடத்தும் தீமிதி, நாடகம், பூச்சொரியல் போன்ற வைபவங்களும் ஜனங்களை ஆகர்ஷித்தவண்ணம் இருக்கும். தொழிற்சாலையில் விடும் விடுமுறையைப் பொறுத்ததல்ல கிராமவாசிகளுக்குக் கிடைக்கும் இவ்வகை உல்லாஸப் பிரயாணம். நினைத்தால் அங்கங்கே நாலுபேர், பத்துப்பேர் சேர்ந்து புறப்படுவார்கள். நிலாவில் பட்டாணிக் கடலையையும், கரும்பையும் சுவைத்துக்கொண்டு கதை பேசிக்கொண்டு நடந்தால் வழி வளர்வது தெரியாமல் இரவிலேயே வீடு திரும்பலாம்.

மஹாளயபக்ஷ அமாவாஸைக்கு ராமேசுவரம் போவது என்றால் எத்தனை நாளைக்கு முந்தியே ஏற்பாடு! இரட்டைமாட்டு வண்டிகளில் சமையல் சாமான் பாத்திரங்களையும் சிறு குழந்தைகளையும் ஏற்றிவிட்டுப் பின்னால் பஜனை செய்துகொண்டும் பாட்டுப் பாடிக்கொண்டும் போகும் ஜனங்களுக்கு எவ்வளவு ஆனந்தம்! அங்கங்கே கிளைச்சாலைகள் வரும்போது நம்முடன் சேர்ந்துகொள்ளச் சாரிசாரியாக எத்தனை வண்டிகள்! மண்டபம் போகுமுன் ஜேஜே என்று கூட்டம். வழி நெடுகி

லும் பத்து மைலுக்கு ஒரு சத்திரம். ஒவ்வொரு குடும்பத்திலும் ஒருவர் முன்பாக நடந்துபோய்ச் சத்திரத்தில் ஒரு அடுப்பை மெழுகி இடத்தை 'ரிசர்வ்' செய்து கொள்வார். பால் தயிர், காய்கறி, சுற்றுப் பக்கத்துக் கிராமங்களிலிருந்து விற்பனைக்குத் தயாராக வந்திருக்கும். நடுப் பகலில் போஜனம் முடித்துச் சற்று இளைப்பாறியதும், மறுபடி வண்டிகளில் பண்டங்களை ஏற்றிப் புறப்படவேண்டியது தான். இரவு படுக்க வேறு ஊர் போய் விடலாம். பெரியவர்களுக்கு அந்த ஒரே வேளை போஜனம். மிஞ்சியது குழந்தைகளுக்கு இரவில் சாப்பாட்டிற்கு ஆகும். ஸமுத்திர ஸ்நானம், ஸ்வாமி தரிசனம், எல்லாம் ஆனதும் மறுபடி கடலைத் தாண்டி, வண்டிகளைப் பூட்டிக் கொண்டு நவராத்திரிக்கு மதுரை. ஒரு இடத்தில் பிரிந்த கூட்டம் வேறொரு இடத்தில் ஸந்திக்கலாம். பரஸ்பரம் யோக க்ஷேமம், ஸத்விஷயங்கள், புண்ய கதைகள்—இவைபோன்ற பேச்சு. மதுரையிலிருந்து பிரிந்து முன்போல ஊர் வந்து சேர்ந்த பிறகு இந்தத் திக் விஜயத்தின் பெருமையும் ஆரோக்கியமும் பக்தி பரவசமும் எத்தனை நாளைக்குத்தான் தாங்கா?

ஆபதோத்தாரண தேசிகரும் ஸம்பூர்ணத்தம்மாளும் க்ஷேத்திர யாத்திரை செய்தார்கள். இரண்டொரு 'அடுக்கு'களும் கொஞ்சம் அரிசி பருப்பும் ஒரு துணியில் முடிந்து தலைமேல் சிறு மூட்டையாக இருக்கும். எந்தப் பதார்த்தமும் போகுமிடங்களில் சிறு அளவில் வாங்கிக் கொள்ளலாம். ப்ராதஸ்நானம், அநுஷ்டானம், முதலிய நியமம் தவறாது. பிறகு ஆலய தரிசனம், அப்புறம் சமையல், சாப்பாடு. கையில் உள்ள தேவாரம் ஓரளவிற்கு உதவியேதவிர, பெரும்பாலும் பதிகங்கள் எல்லாம் மனப்பாடம். பண் தவறாமல் பாடலாம். அந்தந்த க்ஷேத்திரத்தில் உள்ள பெரியவர்களோடு க்ஷேத்திர மகிமையைப்பற்றிய ஸல்லாபம். மறுபடி வழிநடை. இரவு ஸ்வாமி தரிசனம் அடுத்த க்ஷேத்திரத்தில். இப்படிச் சிவாலயங்களையும் திருப்பதிகளையும் சுற்றி வருவோருக்கு உடல், மனம், ஆத்மா, மூன்றும் நலம் பெறவில்லையா?

திருவாசலுக்குத் திருவரங்கம் போவதென்றால், இன்றைக்கு அது எப்படி நடைபெறுகிறது? ரெயில் அல்லது பஸ்ஸில் போய்க் காலையில் இறங்கலாம். காவேரியில் நீராடினாலும் உடனே ஹோட்டலில் காப்பி அருந்தவேண்டும். கேரவிலை வலம் வரும்போதும் சிந்தனை லௌகிக விஷயங்களில். பெயரளவில் தீர்த்தம், திருத்துழாய்ப் பிரஸாதம் பெற்றுத் திரும்பியதும், ஹோட்டல் சாப்பாடு. மாலையில் சினிமா. அப்புறம் ரெயில் அல்லது பஸ். நாமும் அரங்கனைக் கண்குளிரச் சேவித்துவிட்டோம் என்ற பெருமை! இதில் நீடித்த நன்மை யாருக்கு? போக்கு வரவு ஸாதனங்களுக்கும் உணவு விடுதிகளுக்கும்தான்.

எந்தத் தொழிலாயிருந்தாலும் அதில் ஓய்வு நேரம் உண்டு; விடுமுறையும் உண்டு. டாக்டர் செய்னி என்பவர் இவ்வாறு கணக்கிடுகிறார்: ஒருநாளுக்கு எட்டு மணி வீதம் வாரத்தில் ஆறு நாள் வேலை செய்தாலும், மொத்தம் நாற்பத்தெட்டு மணிநேரம் வேலை. தூக்கம், 56 மணி; ஆடை அணிய, பிரயாணம் செய்ய, சாப்பிட, 30 மணி; இவ்வளவும் போனாலும் 34 மணி மிச்சம் உண்டு. வருஷத்தில் ஏறக்குறைய 2000 மணி. இந்த 2000 மணியை நாம் எப்படிச் செலவழிக்கலாம்?

களைத்துச் சோர்ந்து விழும்படியான வேலை எதுவும் நாம் செய்வதில்லை. அதனால் இளைப்பாறுவதற்கென்றே இந் நேரத்தை முழுவதும் பயன்படுத்தப் போவதில்லை. விளையாட்டு, சினிமா போன்ற பொழுது போக்குகளைத் தேடலாம். அல்லது, நம் வாழ்க்கை அரைகுறையாக இருப்பதைப் பூர்த்திசெய்து அதில் நிதானத்தை அடைய வழிதேடலாம். நிதானம் நிறைந்த வாழ்க்கைதான் ஆனந்தத்தின் ரஹஸ்யம் என்பதே ஆதி முதல் இன்றுவரை அறிவாளிகள் செய்துள்ள முடிவு.

நாம் வேலைசெய்த நேரம்போக, மீதியுள்ள நேரத்தில் நம் குடும்பத்தாரையும், நம்முடைய சமூகத்தையும்கூட, ஓரளவு நாம் கவனிக்கலாம். அப்போது வாழ்க்கை வறண்டுபோகாமல் வளமை மிகுந்ததாக ஆகும்.

எண்ணங்கள், உணர்ச்சிகள் செய்கைகள்—மூன்றும் இருந்தால்தான் வாழ்க்கை

பூரணமாகும். எண்ணங்களும் திட்டங்களும் நிறைந்த தொழிலாக நம்முடையது இருந்தால், ஓய்வு நேரத்தில் உணர்ச்சிகளை வளர்த்துச் செய்கைகளில் ஈடுபட்டு வாழ்க்கையில் நிறைவு தேடவேண்டும். இங்கிலாந்தின் பழைய பிரதம மந்திரி சர்ச்சில் துரை சித்திரம் எழுதவும் கொத்து வேலை செய்யவும் முனைவதால்தான் அவர் மூளைக்குக் கொடுக்கும் வேலைக்குத் தகுந்த ஈடு செய்யமுடிகிறது. டாக்டர், வியாபாரி போன்றவர்கள் மற்ற மனிதர்களோடு அதிகம் பழகுகிறார்கள். அவர்களும் சரி, கையினால் வேலை செய்பவர்களும் சரி, இலக்கியம், ஸங்கீதம் முதலிய துறைகளில் மனதைச் செலுத்தவேண்டும்.

காரியாலயங்களில் வேலை செய்பவர்கள் திறந்த வெளியையும், கூட்டத்தில் வேலை செய்பவர்கள் தனிமையையும், கை கொண்டு உழைப்பவர்கள் சும்மா இருந்து கொண்டு அனுபவிக்கக்கூடிய பொழுது போக்குகளையும் நாடவேண்டும்.

எவ்வளவுக்கெவ்வளவு வெவ்வேறு துறைகளில் நம் அறிவை நாம் செலுத்துகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நம் வாழ்க்கை இனிமையும் செழுமையும் நிறைந்துவிளங்கும். உலகத்திலுள்ள எல்லாவகை ஜனங்களோடும் கலந்து அவர்கள் மனதை அறியவும், நம்முடைய தொழிலை அதற்குரிய மதிப்பு மாத்திரம் கொடுத்து ரஸிக்கவும் நாம் தெரிந்து கொள்வோம். குறுகிய நோக்கங்கள் அகலும். நம் ஓய்வு நேரத்தையும் விடுமுறைக்காலத்தையும் செலவிடும் விதத்தைப் பொறுத்தது நம் வாழ்க்கையின் வெற்றி. இதற்காகப் பணம் அதிகம் தேவையில்லை. பணக்காரர்களில் பலர் எவ்வளவு குறுகிய வாழ்க்கை நடத்துகிறார்கள் என்று பார்த்தோமானால் இது நன்றாகத் தெரியும், நாம் பணக்காரர்களானால் என்னென்ன செய்வோம் என்று முதலில் மனக்கோட்டை கட்டிப் பார்ப்போம். உலக யாத்திரைபோன்ற இரண்டொரு காரியங்களைத்தவிர, வேறு எந்தக் காரியத்தையும் நாம் பணமில்லாமலேயே செய்யலாம் என்று அப்புறம் நமக்குப் புலப்படும்! அதை இப்போதே செய்ய முற்படுவோம்; வாழ்க்கையில் ஆனந்தத்தை வளர்ப்போம்!

## வாசகர்களுக்கு

தீபாவளியை முன்னிட்டு அடுத்த இதழ் தீபாவளி அன்று அரிய கட்டுரைகள், கதைகளுடன் வெளி வரும். ஸ்ரீ மாயாவி அவர்கள் எழுதிய புதிய தொடர் கதை ஒன்று அதில் ஆரம்பமாகிறது. — ஆசிரியர்.

# மடல்பெரிது

என். சுப்பிரமணியன்



பூக்காரன், "தாழம்பூ அம்மா தாழம்பூ" என்று வாசலில் நின்று குரல் கொடுத்தான். சோபாவில் வெதும்பி புஷ்பம்போல் வாடிக்கொண்டிருந்த ஜானகி, "தாழம்பூ இல்லாததுதான் குறைச்சல் போ" என்று எரிந்து விழுந்தாள்.

ஜானகியின் குரல் கேட்டும் பூக்காரன் அசையவில்லை. மீண்டும் "தாழம்பூ அம்மா" என்று உரக்கக் கத்தினான்.

"வேண்டாம் என்கிறேனே, காதில் விழவில்லை" என்று எரிச்சலாகச் சொன்னாள்.

"வீட்டுக்கார அம்மா கொண்டுவரச் சொன்னாங்க" என்று அதே ஸ்தாயியில் எதிரொலி செய்தான். அவள் நெஞ்சில் முள் தைப்பது போலிருந்தது. வீட்டுக்கார அம்மாள், தன்னை விட உயர்ந்தவள், வீட்டுக்கு வந்தவள் உயர்ந்தவள், அப்படியானால் வீட்டில் பிறந்தவள் மட்டம். அவளுக்குச் சோகமும் கோபமும் பொத்துக்கொண்டு வந்தன. தன் மதனியாருக்குள்ள கௌரவம் தனக்கில்லையென்பதைப் பூக்காரன் சொல்லும் நிலைக்கு வந்துவிட்டதா?

அவள் சிந்தனையில் கொள்ளியைச் செருகிய மாதிரி "அம்மா வோவ்" என்று இரைந்தான். பூக்காரன் குரலைவிட, அதன் மணம் வந்து தட்டியெழுப்பவே, தூங்கிக்கொண்டிருந்த சண்பகம், "அடடே பூக்காரனா? தூங்கிவிட்டேன் இதோ வருகிறேன்" என்று மாடியிலிருந்து இறங்கி வந்தாள். மாடியிலிருந்து இறங்கும்போது சோபாவில் விக்கி விக்கி அழும் ஜானகியைப் பார்த்தாள்.

"ஏன் ஜானகி நீ இருந்துமா பூக்காரன் கூச்சல் போடுகிறான்? இரண்டு மூன்று பூ வாங்கலாமே" என்றாள். நாத்தியின் மனசிற்குள்ளே சிறிக்கிடக்கும் கோபப் பாம்பின் விம்மலை எங்கே கண்டாள்?

நான் சொன்னால் கேட்பானு? வீட்டம்மாள் வரவேண்டுமென்கிருன்." என்று இடக்காகப் பதில் சொன்னுள். ஜானகியின் மனப்பண்பை உணர்ந்துகொண்டாலும் தெரியாதவள்போல நடித்துக்கொண்டாள் சண்பகம்.

"என்னம்மா, நீங்க சொன்னீங்களே தாழம்பு வேணுமின்னு. அதனுலே ரொம்ப கஷ்டப்பட்டு மூணு பூ கொண்டுவந்தேன். என்னடான்னு, அந்த அம்மணி வேண்டாம் போன்னு சொல்லுது" என்று பூக்காரன் பல்லவி பாட ஆரம்பித்தான்,

மஞ்சள் நிறத்துத் தாழம்பூவின் மணமும் பசுமையும் தலையைக் கிறுக்க வைத்தது. சண்பகத்திற்குத் தாழம்பூ உயிரென்ருல், தாழம்பூ சூடிக்கொண்ட சண்பகத்தின் பேரில் புண்ணிய கோடிக்கு உயிருக்குயிர்.

"வேண்டாம் என்ருல் போகவேண்டியது தானே" என்று கட்சிகட்ட ஆரம்பித்தாள் ஜானகி.

"இல்லே ஜானகி. நேற்று நான்தான் கொண்டுவரச்சொன்னேன். மல்லிகையும் முல்லையும் என்னதான் வாசனையாய் இருந்தாலும் தினம் தினம் என்ருல் அலுத்துத் தானே போகிறது. நானே கொண்டு வரச்சொன்னேன். இப்போ வேண்டாமென்ருல் அவன் போவானு?" என்று பேசிக் கொண்டே ஜானகியின் மேல்பேச்சைக் காதில் வாங்காது வாசல் பக்கம் வந்தாள்.

தன்னையும் வெளியே தாழம்பூ வாங்க மதனி அழைப்பாள் என எதிர்பார்த்து ஜானகி ஏமாந்து உட்கார்ந்துவிட்டாள். தன் மீது அலட்சியம் வந்துவிட்டது. தன்னை ஒரு மனுஷியாக இந்த மதனி எண்ணவில்லை—இப்படி ஆழ்ந்துவிட்டாள்.

சண்பகம் பூக்காரனிடம் தாழம்பூ மூன்றையும் வாங்கிக்கொண்டு வீட்டுக்குள் வந்தவள் "ரொம்ப நல்ல பூ ஜானகி, என்ன நிறம், எத்தனை பசுமை, வா உனக்கு ஜடையில் வைத்துவிடுகிறேன்" என்று சொன்னுள்.

"எனக்குப் பூ ஒன்றுதான் குறைச்சல்," என்று முகங்கொடுக்காமல் பேசினுள். அவள் பேச்சிலே வாதனையும் வருத்தமும் இருந்தன.

"உனக்காகத்தான் மூன்று பூ வாங்கினேன் இல்லாவிட்டால்........."

"ஏன், இரண்டு பூவைப் பூக்காரனிடமே திருப்பிக்கொடுத்துவிடு. நான் ஒன்றும் வாங்கச் சொல்லவில்லையே" என்று எரிந்து வீழுந்தாள்.

மகள் பேசும் தோரணையைச் செவி மடுத்துக் கொண்டே வந்த தாயார் "ஏன் தாழம்பூ வாங்கிருல் என்ன?" என்று சமாதானம் சொன்னுள்.

"எனக்கு வேண்டாம்."

"சரி எனக்காவது பின்னிவிடு" என்று சண்பகம் அவள் கையைப் பிடித்தபோது திமிறி விட்டாள்.

"அவள் மனம் சரியாக இல்லையோ என்னமோ. நான் வாரிவிடுகிறேன் வா சண்பகம்?" என்று மருமகளுக்குத் தலைவாரி, தாழம்பூவை அடுக்கடுக்காகத் தைக்க உட்கார்ந்தாள். ஜானகியின் மனம் இன்னும் கொதிக்க ஆரம்பித்தது, நறுமணமுள்ள கூந்தல் தைலத்தின் வாசனை அவளுக்கு உயிரை வதைக்கும், விஷப் புகையாகப்பட்டது. பசுமையான அந்த மஞ்சள் நிற இதழ்கள் கருநாகப் பாம்பின் சட்டைபோலத் தோற்றம் தந்தன. சண்பகம், சீவி சிங்காரித்துக்கொள்வதில் அவளுக்குப் பொருமையில்லை, கசப்பு இருந்தது,

அவள் அந்த இனிய மணத்தையும் இன்பக் கோலத்தையும் சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை. மிகவும் நொந்த மனத்தோடு, விறுவிறென மாடிப்படியில் ஏறிப்போய், கட்டிலில் விழுந்து பொருமினுள். மாலை மாலையாகக் கண்ணீர் சுரந்தது. இடையிடையே பூக்காரன் சொன்ன சொல், அது சொல்லா? விஷ ஈட்டியாக அவளுக்கு உணர்ச்சி தந்தது.

"வீட்டுக்காரம்மா" என்ற அந்தச் சொல்லைத் தன்னைப்பார்த்துத்தான் ஒருவருஷத்திற்கு முன்பு சொல்லி இருக்கிருன். ஆனுல் இப்போது அவளுக்கு அந்த வீட்டில் அதிகாரம், ஏன் உரிமையில்லை. பூக்காரன்கூட அவளுக்கு மரியாதை செய்யவில்லை. ஏன் மதனியாவது தன்னை மதித்தாளா? மதனிதான் விரோதி—சுமந்துபெற்ற தாயார்கூட மதிக்கவில்லை. அந்த வீட்டில் எல்லோரும் தனக்கு விரோதிகள்.

இந்நிலையில் கீழே அண்ணுவின் குரல் கேட்கவே, காதைத் தீட்டிக்கொண்டாள்.

"ஏது ஏது அம்மா, புதுப் பெண்ணுக்குச் சிங்காரம் ஆகிறதோ?"

'து' வெட்கம், புதுப்பெண்ணும். அண்ணனைப் போல இப்படி யாராவது வெளிப்படையாக வெட்கம்கெட்டு உலகில் சொல்லுவார்களோ? அவன்தான் ஆண்பிள்ளை பல்லைக் காட்டினுல் இந்த மதனியும் இப்படியா சொல்லவேண்டும்?

"ஏன் இப்படியே உட்காருங்கள் பூப்பந்து விளையாடலாம், புது மாப்பிள்ளையவர்களே!"

அண்ணனும்—மதனியும் கலியாணம் ஆகி ஒன்றரை வருஷங்களுக்குப்புறம் பேசும் குஷால் பேச்சு இது. இதைக் கேட்டு அம்மா சிரிக்கிருளே. ஜானகியின் செவியில் நாராசமாகப் பாய்ந்தது.

"ஏனம்மா, நீ தாழம்பூ தைத்தால் நாகரிகமாக இருக்காது என்று உன் மருமகள் சொல்ல மாட்டாளா? ஜானகி எங்கே?" என்று கேட்டான். இது செவியில் விழுந்ததும், தனக்குள்ளாக, "ஆகா, உன் மனைவிக்குச் சிவி சிங்காரிக்கும் பணிப் பெண்ணுக எண்ணிவிட்டாயோ? ஆமாம் அண்ணு, இப்படித்தான் பேசுவாய்" என்று நினைக்க நினைக்க உடல் சிலிர்த்தது.

"உங்கள் தங்கையைத் தாழம்பூ வைத்துக் கொள்ளச் சொல்லுங்கள். நான் சொன்னேன் கேட்கவில்லை. நீங்கள்தான் சொல்லவேண்டும்." என்று சண்பகம் புருஷனுக்குத் தாக்கீது கொடுத்தாள். புண்ணியகோடி மாடிக்கு ஏறிவரும் காலடியோசை கேட்டது. தன் கண்ணீரையும் முகத்தையும் துடைத்துக்கொண்டு ஏதும் நடக்காததுபோலச் சமாளித்தாள்.

"ஏனம்மா ஜானகி, ஏன் ஒரு மாதிரி இருக்கிருய்?" என்று தனது ஆபீஸ் உடைகளைக் களைய ஆரம்பித்தான் புண்ணியகோடி.

"ஒன்றுமில்லையண்ணு" என்று மாடியிலிருந்து இறங்கிவிட்டாள்.

மீண்டும் மகளைத் தலைவாரிக்கொள்ளும்படி தாயாரும், நாத்தனுரைத் தலை வாரிக்கொள்ளும்படி மதனியும் வேண்டிக்கொண்டனர். அவர்கள் வேண்டுகோள் பயன் தரவில்லை.

மாடிக்குக் காபி பலகாரம் எடுத்துச் சென்ற சண்பகம் மணிக்கணக்காகச்சிரிப்பும் விளையாட்டுமாகப் பேசிக்கொண்டிருந்தாள். அண்ணன் கிண்டலும் மதனியின் பரிகாசச் சிரிப்பும் ஜானகியின் காதில் வந்துவிழுந்தன.

அவளால் இந்தச் சப்த ஜாலங்களை இன்று பொறுக்கமுடியவில்லை. தோட்டத்திற்குள் வந்துவிட்டாள், தனிமை நாடி.

தாழம்பூ அவள் மனக்கிளர்ச்சிக்கு வித்தாக இருந்தது.

## 2

உயர்வான தாழம்பூவுக்குள் பூநாகம் இருக்குமென்பதை ஜானகி கேள்விப்பட்டிருக்கிருள். ஆனல் தன் புருஷன் மனசிலே பூநாகத்தின் விஷம் ஒளிந்திருப்பதை அறிந்தாள். அவள் வந்து புகுந்த இடம், பிறந்த வீட்டைப்போலச் சகல சௌபாக்யங்களும் இல்லை. பூமியிலே பிறந்த வித்து பூமியிலே இருந்தால் அது தாவி, புஷ்பிப்பது இல்லை, படர்கொடிக்கு வாய்க்கும் கொம்பு எப்படி இருந்தாலும் அதன் மணம் கெட்டுப்போவதில்லை. ஐயோ, நம்மிடம் பிறந்த செடி இப்படி கோணல் மாணலாகக் கொழுகொம்பின்றிச் சுற்றுகிறதே எனப் பூமாதேவியே எண்ணுவதில்லையென்கிருர்கள்.

ஆனல் ஜானகியின் புருஷன் அவள் நினைப்பதைப்போலக் கொடிய மனம் உடையவனன்று. ஏழை என்ற காரணத்தைத் தவிர வேறு குறை சொல்லமுடியாது. ஆனல் தன் வீட்டுச் செல்வ நிலைமையை ஜானகி எடுத்துச் சொல்லும்போது அவன் பெட்டிப் பாம்பாக இருந்தாலும் சீறுவான். காலணுக்கூட அவள் வீட்டார் உதவியை எதிர்பார்ப்பதில்லை என்று திட சங்கல்பம் செய்துகொள்வான். அவள் வீட்டார் கொடுக்கும் துணியோ மணியோ தன்னளவில் பயன்படுத்தமாட்டான். அது தான் ஜானகியின் கோபம். அவள் பட்டும் பட்டாடையும் கட்டி, வெல்வெட்டு ஜாகெட்டு போடும்போது தன் புருஷன் நாலு முழம் வேஷ்டி கட்டி, சிட்டு முண்டுடன் பவனி வருவது, அவளோடு வெளியே புறப்படுவது அவளை அவன் பரிகாசம் செய்வதாகப்பட்டது. செயலளவில் வேதாந்தியாக இல்லாது போனுலும் மனத்தளவில் அவன் வேதாந்தி. ஆடம்பரம் பிடிக்காது. அடக்கமும் அறிவும் அவனுக்குப் பிடித்தமானவை. நிறையப் படிப்பதே அவனுக்கு வேலை. சொற்ப வருமானத்திலும் மனதிற்கு இதம்தரும் நூல்களை வாங்கி வந்து விடுவான்.

"உங்களை மணந்ததைவிட ஒரு சந்நியாசியை மணந்திருக்கலாம்."

"சந்நியாசிகள் எல்லோரும் யோக்கியர்கள் அல்லர்." என்பான் பரிகாசமாக.

"போதும் போதும், இந்தத் தீபாவளிக்கு நீங்கள் வாங்கிய வேஷ்டியை எங்கள் வீட்டு வேலையாள்கூடக் கட்டமாட்டான்."

"உன்னைப்போல உன் வீட்டு வேலையாளும் அறிவாளி."

"போதுமே பரிகாசம். நீங்கள் பிரம்மசாரியாக இருந்திருக்கவேண்டும்."

"உன்னைப் போன்ற பெண்களை மணந்தவர்கள்தாம் பிரம்மசாரிகளாக மாறியிருப்பார்கள்!" என்று சொல்லிவிட்டு மந்தஹாசம் செய்தான்.



அவள் தாழம்பூ வாங்கிவரும்படி அன்று கேட்டுக்கொண்டாள். மனைவியை அலட்சியம் செய்யும் சுபாவம் கிடையாது. அளவிற்கு மீறி இந்த நாளில் அன்பைப் பகிரங்கமாக நடு வீதியிலும் காட்டுகிறார்களே நாகரிக தம்பதிகள் அப்படி இருக்கத் தெரியாது. உண்மையான அன்பு வெளிக்குக் காட்டக்கூடியதும் அல்லவே!

அவன் தாழம்பூ வாங்கவேண்டுமென்றுதான் கடை வீதிக்கு வந்தான். கோவில் வாசலில்

கூடையில் நிறையத் தாழம்பூக் கூடைகள் இருந்தன. சற்றுத் தள்ளிப் பழைய புஸ்தகங்கள் பரப்பி இருந்தான். அவற்றின்மீது மனமும் புஷ்பத்தின்மீது கண்ணும் பதிந்தன. மனம் வென்றது. செல்லரித்துப்போன பழைய புஸ்தகம்—தனிப்பாடல் தொகுதியொன்று—யாரும் தன்னைப் பார்த்துச் சிரிக்கக்கூடாதே யென்று வெட்கத்தில் பழைய குப்பைக்குள் அமுங்கிக் கிடந்தது. அந்தக் குன்றுமணியில் தன் சிந்தையைப் பறிகொடுத்தான். கையிலிருந்த காசும் பஸ் சார்ஜும் போச்சு. புஸ்தகம் கிடைத்த பெருமையில் நாகரிகம் நிறைந்த வீதியில் ஒவ்வொரு ஏடாகப் புரட்டுவதும், படிப்பதும், படித்ததை நினைத்து ரஸிப்பதுமாக நடந்துவந்தான். 'வழக்கத்திற்கு விரோதமாக வர நேரமானது ஒரு காரணம். தாழம்பூவிற்குப் பதில் பழைய கந்தல் புஸ்தகமொன்று வந்தது மற்றோர் காரணம்.

"தாழம்பூ எங்கே?"

அவள் மெதுவாகத்தான் கேட்டாள். அவன் பொய்யுரைக்கவில்லை. நடந்த விபரத்தைச் சொன்னான்.

"அந்த புஸ்கத்தையே கட்டிக்கொண்டு அழுங்கள்."

"ஆமாம் பெரிய......உண்மையே அதுதான். தனிமைக்கும் நேர்மைக்கும் இதுவே அமிர்தம். உனக்குத் தாழம்பூ நாளை வாங்கி வருகிறேன்."

"நாளை யாருக்கு வேண்டும்?" என்று எரிந்து கோபக்கனல் கக்கினாள்.

"ஏன் உனக்கு வேண்டாமா?"

"இன்னொரு பழைய குப்பை வாங்க நான் காசு தரமாட்டேன்!"

அவள் சொல் நெஞ்சைச் சுட்டது. ஆனாலும் கோபத்தை யடக்கிக்கொண்டான் சுந்தரராமன்.

"நானாகவே, என் காசு போட்டு வாங்கி வருகிறேன்!"

பெண்களுக்குள்ள இயல்பான கோபப்படி, 'இதுக்கு ஒரு தாழம்பூவுக்குக்கூட விதியில்லாத இந்தவீட்டிலே' என்று ரோசம் வரப் பேசினாள் ஜானகி.

"ஜானகி கோபம் வேண்டாம்."

"உங்களைப்போல நானும் ஞானியல்ல" என்றாள். அந்தப் பேச்சில் ஞானிக்கு முட்டாள் என்று அவள் அகராதிப்படி அர்த்தம்.

"நான் முட்டாளோ புத்திசாலியோ உன்னை வந்து கேட்கவில்லை."

"என் அறிவைக் கீழே வையுங்கள்." என்று கடன்காரனை வட்டிக்கடைகாரன் கேட்பது போலக் கேட்டாள். அவள் பார்வையும், தொனியும் அவனுக்கு ஆக்ரோஷம் எழச்செய்தன. ஆனாலும் பெண்ணின் முன்னால் தானும் அறிவை மயக்கிக்கொள்வதா?

அவன் எழுந்து வெளியே புறப்பட்டான்.

"எனக்கு உதவாத அந்தத் தாழம்பூப் பணம் உங்களுக்கு மட்டும் உதவுமானே!" என்று அந்தப் பழைய புஸ்தகத்தை யெடுத்துக் கொண்டு போனாள். போகும் வேகமே அவள் செய்யப்போகும் செயலை உணர்த்திவிட்டது.

"ஜானகி" என்று கத்தினான். அவன் துரத்திக்கொண்டு வருமுன்பாக அந்தப் புஸ்தகத்தை அடுப்பிற்குள் போட்டுவிட்டாள். நெருப்பின் ஜ்வாலை அதை அரவணைத்துக்கொண்டது. வந்தவன் பார்த்தான். எவ்வளவு ஆசைக் கனவுடன் வாங்கிவந்த புஸ்தகம் — அருமையான கவிதை பொக்கிஷம் — அத்தனையும் வெந்து சாம்பலாகிக் கொண்டிருந்தது, அவள் கோபம்போலே. அவன் கோபத்தைச் சமாளித்துக்கொண்டு, "என்ன ஜானகி, உன் மனம் ஆறிவிட்டதா? பேஷ் சந்தோஷம்" என்று கோபத்தைச் சிரித்துச் சமாளித்தான். அவன் சிரிக்கச் சிரிக்க அவள் விட்டுக்கொடுக்கவில்லை. தணிந்துபோக எண்ணவும் இல்லை.

"நாளையே எங்களண்ணன் வீட்டுக்குப் போக வேண்டும்" என்றாள் பயமுறுத்துவதற்காக.

"நாளை நல்லநாள் இல்லை, உனக்குப் படுபட்சி. இன்று நல்ல நாள்."

"இன்றே போய்விடச் சொல்கிறீர்களா?"

"நான் யாரையும் கட்டளையிடுவது கிடையாது எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவேயல்லாமல்......"

"போதும் வேதாந்தம்"

"அதனால்தான் இதுவரை மனிதனாக இருக்கிறேன். இல்லையென்றால் நான் மிருகமாகவும், நீ அந்த மிருகத்திற்கு இரையாகும் தினியாகவும் இருப்பாய்."

புருஷனைத் தன் வழிக்குக் கொண்டுவர அவள் கையாள நினைத்த யுக்தி பிரிவு, பிரிவினால் ஏற்படும் வாதனை, அதன் பின்னர் மன்னிப்புக் கோரி தன் காலில் வந்து விழும்

படலம்...அதோடு மன்னிப்பு நிறைந்த கடிதங்கள்.........

ஆனுல் நடந்ததென்னவோ இதற்கு எதிரிடை. அவள் நினைத்தபடி அவன் "ஆருயிரே அஞ்சுகமே, தேனே, பாகே" யென்று கடிதங்கள் எழுதவில்லை. அவன் வைராக்கிய புருஷன். சுகதுக்கங்களை ஒரே நோக்கோடு சீர்தூக்கிய மகா புருஷன். எத்தனை பேர் சொன்னுல் என்ன? அவனைப் பணமும் பவிஷும் அனுபவிக்கத் தெரியாத முட்டாள் என்ருர்கள். அப்பாவியென்று பச்சாத்தாபம் காட்டினுர்கள். புத்திபோதனைகள் செய்தார்கள். அவன் கல்நெஞ்சிலே கனிவு பிறக்கவில்லை. அவன் நிம்மதியுடன் பூர்ண திருப்தியாய் வாழ்ந்துவந்தான். பிறர் கண்ணுக்கு அவன் ஜடப்பொருள்.

அவன் நினைவைப் பொறுத்தவரை ஜானகி உயிருடன் இருக்கும் ஓர் ஜடப்பொருள் என்ற எண்ணத்தோடு சரி, வாழ்க்கையில் சிறந்த பருவங்கொண்ட ஓர் இனிய மலரென அவன் சிந்தை சிந்திக்கவில்லை.

இருவரும் பிரிந்து எட்டு மாதங்கள் ஓடிவிட்டன.

## 3

தீபாவளி இன்னும் நாலுநாள் போகவேண்டும். தீபாவளி வந்துவிடுமென்பது அங்கங்கே காட்டும் அறிகுறிகள், சப்தத்திலும் சண்டையிலும் ஆரம்பமாகிக்கொண்டிருந்தன. வீதி வீதியாகப் புடவைக்காரர்கள் கூக்குரல், பட்டாஸ்களின் புகைச்சல், தாம்பத்திய கலகங்களின் சடபடாக்கள்; சண்பகத்தின் வீட்டிலும் தீபாவளியின் சின்னங்கள் புகுந்துவிட்டன. பட்சணங்களின் மணம் கமழ்ந்துகொண்டிருந்தது.

புருஷனும் மனைவியும் எப்பொழுதும் கடைவீதிக்குப் போகிறது என்று பேசி முடித்தார்கள். என்னென்ன எடுப்பதென்று விரிவாக விவாதித்தார்கள். ஜானகிக்கும் தனக்கும் ஒரே விலையில் ஒரே நிறத்தில் எடுக்கவேண்டுமென்று தீர்மானித்தாள் சண்பகம்.

“ஜானகி, புடவைக்கடைக்குப் போகலாம் வருகிறயா?”

“நான் வரவில்லை மதனி.”

“உனக்கு நான் எடுத்துவந்தால் பிடிக்காதே.”

"எனக்குப் பிடித்ததென்பதுகூட உண்டா? எதுவாக இருந்தாலும் சரி. எனக்குப் புடவை கூட வேண்டாம்!"

"நான் என்ன சொல்ல இருக்கிறது! ஏதாவது சொன்னால் கோபம் வந்துவிடும்" என்று சண்பகம் பேச்சை நிறுத்திக்கொண்டாள். அவளும் அவள் புருஷன் புண்ணியகோடியும் எவ்வளவோ வேண்டிக்கொண்ட காலங்களில் ஜானகி பிடிவாதமாகச் செவி சாய்க்காது இருந்தாள்.

தன் புருஷனுக்குக் கடிதம் எழுதச் சொன்னார்கள். அவர்கள் பேச்சைக் கேட்கவில்லை. அவளுக்காகத் தாங்கள் மன்னிப்புக் கேட்டு வரப் புறப்பட்டார்கள், அவள் அழுது விழுந்து தடுத்தாள். தன்மீதும் தன் அழகின்மீதும் நம்பிக்கை இருந்தது. புருஷன் கோழையென எண்ணினாள். ஏமாந்தாள். அவள் மனசில் வைராக்கியம் தலைவிரித்தாடியது. அவள் தன் வாழ்வில் யாரும் குறுக்கிடக்கூடாதெனக் கட்டளை யிட்டாள்.

சில மாதங்கள் ஜானகியின் வாழ்வை நினைத்துத் துக்கப்பட்டார்கள். அது நித்திய சம்பவமாகிவிடவே, அவள் துயரத்தைக் கற்பனை செய்து பார்க்கவில்லை. சாவு நிமிஷ சம்பவமாகிவிட்டால் யார்தான் கண்ணீர் வடிப்பார்கள்.

தீபாவளிக்குப் புடவை வாங்க கடை வீதிக்கு வரவில்லையென்றுசொல்லிவிட்டதும் சண்பகம் மாடிக்குப் போய் ஏதோ எழுதிக்கொண்டிருந்தாள். வாழ்வை நினைத்து நினைத்து உணர்ந்து உணர்ந்து உருகிக்கொண்டிருந்தாள். அவள் உடம்பிலே சோகை பிடித்தது போன்ற சாயை படர்ந்திருந்தது.

வாசலில் மோட்டார் ஹார்ன் கேட்டது. அடுத்தபடியாகச் சண்பகம் சண்பகம் என்று அண்ணன் இரைவதையும், மேலாக்கு நிலை தடுமாறி விழும் நிலையில் மதனி ஓடுவதையும் கண்டு அவள் சிரிக்கவில்லை, பொருமைப்பட்டாள். தன்னிடம் சொல்லிக்கொள்ளாமலே காரில் ஜம்மென்று ஏறிப்போகிறார்கள்.

அவளால் துயரம் சகிக்கமுடியவில்லை. மாடியிலிருந்து பேய்க்காற்று படபடவென அடித்தது. காற்றும் மழையும் கவிந்து வந்தன. ஜன்னல்கள் அடைக்கப்படாமல் படார் படார் என்று மோதுவது இதயத்தையே மோதுவதுபோல் உணர்ச்சி.

மேலே ஜன்னலை அடைக்கப்படாதா என்று பலகாரம் செய்துகொண்டிருந்த தாய் அடுக்களையிலிருந்து கத்துகிறாள். இடியோசையை விடக் கடினமாகப் பாய்ந்தது எதிர் வீட்டில் யாரோ வைத்த அந்த யானைவெடி; அந்தச் கட்டடத்தையே உலுக்கிற்று. எல்லாம் அவளை உணர்ச்சிச் சுழிப்புக்குள் தள்ளி, திக்கு முக்காட வைத்தன. தலைத் தீபாவளி தாமரை மொட்டுப்போல நினைவுத் தடாகத்தில் தலை தூக்கும். மீண்டும் வைராக்கிய அலைமோதி தாழ்ந்துவிடும்.

ஜன்னலின் கதவுகளைச் சாத்திவிட்டு நிம்மதியாகப் படுத்துக்கொள்ள மாடிக்குப் போனாள். காற்றின் வேகத்தால் துணிமணிகள் இறைந்து கிடந்தன. அண்ணாவின் படுக்கையறைக்குள் காகிதங்கள் சிதறிக் கிடந்தன. அதை ஏறிட்டும் பார்க்காமல் தனது அறைக்குள் நுழையப் போனாள். அங்கே அரைகுறையான கடிதம் கிடந்தது. அதை எடுத்தாள். தன் மதனியின் கையெழுத்து. சண்பகம் எழுதிய கடிதம்.. தன் தமையனுக்கு எழுதியிருக்கிறாள். என்னவெனப் பார்க்க ஆசை பிறந்தது.

அன்புள்ள அண்ணா அவர்களுக்கு,

சண்பகம் அனந்தகோடி வணக்கம். இவ்விடம் இந்தத் தீபாவளியை நான் ஆடம்பரமாகக் கொண்டாட முடியவில்லை. நான் வாழும் வாழ்வைக்கண்டு வயிறெரிய ஒரு பூநாகம் என் வீட்டுக்குள் இருக்கிறது. நானும் அவரும் சிரித்தாலும் அதன் நெஞ்சு வெடித்துவிடுகிறது. நான் தலை பின்னிக்கொண்டால் பூவைத்துக்கொண்டால் என்ன பொருமல்? ஏன் இப்படி அழவேண்டும் வாழ வகை தெரியாமல் ஜம்பமாக ஓடி வந்துவிட்டு? இன்னொருவர் உடுத்துவதையும், உண்பதையும் கண்டு வயறெரிய வேண்டும்? இவள் இருக்கும்வரை, அவளைப்போல நானும் பரட்டையாய் பித்துப் பிடித்து இருக்கவும் வேண்டுமா? வர வர இங்கே இருப்பது நெருப்பில் இருப்பது போல இருக்கிறது. விதவையாகப் போனவள் இப்படி மனவேதனைப் படமாட்டாள். தானும் வாழத்தெரியாமல் பிறர் வாழ்வதையும் கண்டு பொருமிச்சாகும் ஜன்மம் இருக்கும்வரை, நிஜமாகச் சொல்லுகிறேன் அண்ணா, அவர் அன்பும் அனுசரணையும் இல்லாதுபோனால் இதற்குள் தற்கொலைகூட செய்து கொண்டிருப்பேன். என் சிரிப்பைக்கண்டு தடை செய்ய இவள் யார்? இச்சண்டாளி என்றைக்குத் தொலைவாளோ...அன்றுதான் நாங்கள் இன்பமாய் இருப்போம்...மேலும்.........

ஜானகியால் கடிதத்தை மேலும் பார்க்க முடியவில்லை. கண்ணீர் திரையிட்டது. உணர்ச்சி குரலை அமுக்கிற்று. பொருமை கொந்தளித்தது. தன்னைப்பற்றி மதனி இப்படியா நினைக்கிறாள்? அண்ணாவும் இதேதான் நினைக்கிறான். தான் நினைத்த உலகம் வேறு. முற்றிலும் மாறினது. திருமணத்திற்குப்

பிறகு சுக துக்கத்தில் தன் பிறந்த வீட்டில் பங்கு இல்லை......இல்லவே இல்லை. அவள் சடலம் நடுச்குற்றது. பூனைபோல அக் கடிதத்தை மதனியின் மேஜைமேல் வைத்தாள். புதிய உணர்வும் ஊக்கமும் மழைத்துளியால் பெற்ற நாற்றைப்போல அவள் நிமிர்ந்து நடந்தாள். அவள் மனசில் வளைவில்லை.

"அம்மா அம்மா, நான் புறப்படுகிறேன்" என்ருள்.

"கடைவீதிக்குத் தீபாவளிப் புடவை எடுக்கத்தானே? காரில் போயிருக்கலாமே." என்று பரிவாகச் சொன்னாள் தாய்.

"இல்லையம்மா. நான் அங்கே போகிறேன்." குரல் கம்மிற்று.

"எங்கே?"

"எங்கே நான் இருக்கவேண்டுமோ அங்கே." என்றவள் பெட்டி துணிமணிகளை யடுக்க ஆரம்பித்தாள்.

"அண்ணு வரட்டும். ரயிலில் உனக்குத் துணையாக வரச்சொல்லுகிறேன்."

"நான் வந்ததுபோலவே போய்விடுவேன்."

யாரையும் எதிர்பார்க்காமல் அவள் ரயிலுக்குப் புறப்பட்டுவிட்டாள்.

ஜானகி பூனைபோல வந்தவள் கதவைத் தட்டியபோது இரவு இரண்டு மணி.

"யாரது?"

அவள் குரல் தழுதழுத்தது.

"ஓகோ ஜானகியா? 'யாரது' என்று கேட்டேனே? உள்ளே வா. சாமான்களை எடுத்து உள்ளே வை, வண்டிக்காரா!" என்று படித்துக்கொண்டிருந்த ராந்தலை வாசலுக்கு கொண்டுவந்தான்.

சோகைபிடித்து உருமாறிப் போயிருந்த ஜானகி அவன் கால்களில் விழுந்து கதறிஞள். கண்ணீர்த்துளிகளின் உஷ்ணம் காலில் பட்டது.

"அசடே, ஏன் அழுகிருய்? எருந்திரு. எதற்காக அழுகிருய்?"

"என்னை மன்னித்துவிடுங்கள்"

"மன்னிக்க நான் யார்?" என்ருன் குறும்போடு.

"அப்படிச் சொல்லாதீர்கள்." என்று கையைப் பிடித்துக்கொண்டாள். அந்த வைராக்கிய புருஷனும் தன்னை மறந்து மெதுவாகச் சிரித்தான்.

இதுதான் என் சொர்க்கம் என்று சொல்லுபவள்போல அவளும் சிரித்தாள். அந்த வீட்டில் ஒரு சிறு மாறுதல் இருந்தது.

முன்னைவிடப் புஸ்தகங்கள் நிறையச் சேர்ந்திருந்தன. அவன் தனது நோட்டுப் புஸ்தகத்தையெடுத்து எழுதினன்—"உலகில் அன்பு பெண்களிடமே உண்டு"

"என்ன எழுதுகிறீர்கள்?"

"தீபாவளிக்குப் புதுப்புடவைடன் தாழம்பூவும் வாங்கவேண்டும் எனக் குறித்துக் கொள்ளுகிறேன்" என்ருன்.

ஜானகி அதை-உண்மையை-நம்பும் மனப் பக்குவம் அடைந்துவிட்டாள்.

இவ்வருஷ தீபாவளியில் புத்தொளியில் பொன்னெளியும் கலந்திருப்பதை உணர்ந்தார்கள், உள்ளம் இணைந்தால் உவகைக்கு எல்லை யுண்டோ?



# பட்டினத்தார்

ஞானம்

"பெண்ணை நம்பாதே" என்றான் அவன்.

"பின் என்னத்தைத்தான் நம்புவது" என்று கேட்டான் அவன் நண்பன் ஆத்திரமாக.

"உன் இதயத்தில் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் பரம் பொருளை நம்பு. அண்டபகிரண்டத்தையெல்லாம் அணைத்து நிற்கும் பராசக்தியை நம்பு. அகில உயிர்களுக்குள்ளும் அணு அணுவாய் நின்று......"

"அப்பனே நிறுத்து உன் வேதாந்தத்தை" என்று குறுக்கிட்டது கேட்டவன் குரல்.

அவர்கள் இருந்த இடம் மதராஸ் கடற்கரை. வேதாந்தம் பேசியவன் பத்மாஸனத்தில் அமர்ந்திருந்தான். அவனால் சிஷ்யனாய் பாவிக்

கப்பட்டவன் திருமாலைப்போல் மணலை அணைந்துகொண்டு படுத்திருந்தான்.

அவ்விருவரும் கல்லூரி நண்பர்கள், இணை பிரியாதவர்கள். ஆனால், மனப்போக்கிலோ ஒருவன் வட துருவம், மற்றவன் தென் துருவம். ஒருவன் வேதாந்தி. மற்றவன் சித்தாந்தி.

சிகரெட் குடித்துக்கொண்டே இருப்பான் சித்தாந்தி.

"உன்னையும் இந்தப் புகையையும் பார்த்தால் சுடுகாட்டின் நினைவுதாண்டா வருகிறது" என்பான் வேதாந்தி.

"சுடுகாட்டை நினைத்துக்கொண்டு உலகமாகிய பூங்காட்டை மறந்துவிடுபவன் நான் அல்லடா" என்பான் சித்தாந்தி.

"பூங்காட்டில் மதுவுண்டு மயங்கிக் கிடக்கும் வண்டு அல்லவே நான்" என்பான் வேதாந்தி வெற்றி மிடுக்குடன்,

"எட்டும் பொருளைத் துறந்து எட்டாததற்குக் கொட்டாவி ஏனடா" என்று இடித்துக் கேட்பான் சித்தாந்தி.

"வெட்ட வெளிதன்னை மெய்யென்றிருப்பார்க்குப் பட்டயம் ஏதுக்கடா?" என்று பல்லைக் காட்டிப் பாட ஆரம்பித்துவிடுவான் வேதாந்தி.

இப்படியாக வடிவேல் என்ற வேதாந்தியும், சிங்காரன் என்ற சித்தாந்தியும் வட துருவத்திலும் தென் துருவத்திலும் முறையே இருந்து கொண்டு எப்பொழுதும் தர்க்கம் செய்வார்கள்.

ஆனால் வடதுருவம் இன்றித் தென்துருவமும், தென் துருவம் இன்றி வடதுருவமும் எப்படி இல்லை என்று ஆயிற்றோ அதேபோல் அவர்கள் ஒருவர் இன்றி ஒருவர் இல்லை என்பதாக ஆகிவிட்டது. அவ்விருவரும் எப்பொழுதும் ஒன்றாகவே காட்சி அளித்துவந்தார்கள்.

அவர்கள் இப்பொழுது இருந்த இடம் மதராஸ் கடற்கரை என்றல்லவா பார்த்தோம், அங்கே அவர்கள் தற்சமயம் சர்ச்சை செய்து கொண்டிருந்த பொருள் 'பெண்' என்பது. அந்தச் சர்ச்சையின் உச்ச நிலையாகிய ஒரு கட்டத்தைத்தான் நாம் கதையின் ஆரம்பத்தில் பார்த்தோம்.

வடிவேல் பெண்ணை ஒரு மாயை என்று சொல்லிப் புறக்கணித்தான்.

ஷேக்ஷ்பியர், ஹோமர், கம்பன், காளிதாஸன் இப்படியாகப் பலரகப்பட்ட கவிகளெல்லாம் பெண்ணைப் பற்றிப் பாடிய கவிதைகளை ஒவ்வொன்றாக அப்படி அப்படியே ஒப்புவித்துத் தன் கட்சியை ஸ்தாபிக்க முயன்றான் சிங்காரன்.

வேந்த வடிவேலோ 'பெண்' ஒரு மாயை என்பதை நிரூபிக்கச் சித்தர்கள் பாட்டுகளைக் காரசாரமாய்ப் பாடினான்.

சிங்காரன் பக்கம் கவிகளும், அறிஞர்களும், வடிவேல் பக்கம் சித்தர்களும், வேதாந்திகளும் நின்று அணிவகுத்துக்கொண்டு சரமாரியாகச் சொல்லம்புகளைப் பரிமாறினார்கள்.

கவிதைக்குப் பின் கவிதையாகப் பாடிப்பாடி உணர்ச்சி வசப்பட்டுக் களைத்துப்போன சிங்காரன் சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்தான். 'டெனார்' சிகரெட்டை உதட்டில் ஒட்ட வைத்துக்கொண்டே மௌனமாக வடிவேலைப் பார்த்தான். பிறகு ஒரு சுருள் புகையை வெளியே ஊதியவண்ணம் "பட்டினத்தாரே கொஞ்சம் பொறும். என் தொண்டை வறண்டுவிட்டது" என்று சொல்லி மறுபக்கம் புரண்டு படுத்தான்.

அவன் வடிவேலைப் பட்டினத்தார் என்றுதான் கூப்பிடுவது வழக்கம். அவன் மட்டும் என்ன? கல்லூரி மாணவர் எல்லாருமே அவனை அப்படித்தான் கூப்பிடுவார்கள். பட்டினத்தார் என்ற பட்டத்தை அவனுக்குச் சூட்டியவர் ஒரு தமிழ் ஆசிரியர்.

வடிவேல் ஏழாம் வகுப்புப் படித்துக்கொண்டிருந்தபொழுதே அவனுக்கு அந்தப் பட்டம் கிடைத்துவிட்டது. அதற்குக் காரணம் அவன் எப்பொழுதும் தன் சட்டைப் பையில் பட்டினத்தார் பாடல்கள் அச்சிட்ட ஒரு சிறு புத்தகத்தைச் சுமந்துகொண்டிருந்ததுதான். அந்தப் புத்தகம் ஒரு நாள் தமிழ்ப் பண்டிதர் பார்வைக்கு வரவே வடிவேலுக்கு மேற்படி நாமத்தைச் சூட்டி மாணவர்கள் முன்னிலையில் அரங்கேற்றமும் செய்துவைத்தார். அன்றைய தினமே அவன் இயற்பெயர் செத்து, பட்டினத்தாரும் ஜனனம் ஆகிவிட்டார்.

இதில் இன்னொரு வேடிக்கை என்னவென்றால் வடிவேலின் தந்தை முருகனார் என்பவரும் தம் பிள்ளைக்குப் 'பட்டினத்தார்' என்ற பெயரை வைக்கவேண்டும் என்று எண்ணியிருந்ததுதான்.

முருகனார் தம் பெயருக்கேற்ப ஒரு முருக பக்தர். முருகனுக்கு அடுத்தபடியாக அவர் உள்ளத்தில் இடம் பெற்றவர் பட்டினத்தார், பட்டினத்தாரிடம் அவருக்கு அளவுகடந்த பற்றுதல் உண்டு. தினமும் அவருடைய பாடல்களில் ஏதாவது சிலவற்றை ஞாபகப்படுத்திக் கொள்ளத் தவறமாட்டார்.

அப்பூதி அடிகள் திருநாவுக்கரசர் பெயரை எப்படிக் காப்பாற்ற நினைத்தாரோ அது போலவே முருகனாரும் பட்டினத்தார் பெயரைக் காப்பாற்ற நினைத்துத் தம் பிள்ளைக்கு அவர் பெயரையே சூட்ட முனைந்தார்.

பேர் சூட்டும் வைபவத்திற்கு முதல்நாள் "அடியே" என்று இரைந்து தம் மனைவியைக் கூப்பிட்டார் முருகனார். குழந்தையைத் தோளில் போட்டுக்கொண்டு அவர் முன்னால் வந்து நின்றாள் அவள்,

"அடியே, உன் பிள்ளைக்கு புதுசா ஒரு பேரு வைக்கப் பேறேண்டி" என்றார்.

"என்னது?" என்று அலட்சியமாய்க் கேட்டாள் அவள்.

"இதுவரை ஒருத்தரும் வைக்காத பேராக்கும்" என்றார் பெருமையாக.

"அந்தப் பேரைத்தான் சொல்லுங்களேன்"

"பட்டினத்தார்"

பேரைக் கேட்ட உடனே குபீரென்று சிரித்துவிட்டாள் அவர் மனைவி. ஆனால் சிறிது நேரத்தில் அந்தச் சிரிப்பு, சீற்றமாக மாறிவிட்டது.

"பேரைப் பார்க்கலே பேரை? பட்டினத்தாராம் பட்டினத்தார். உங்களுக்குப் பயித்தியம் கியித்தியம் பிடிச்சிருக்கா என்ன? என் பிள்ளை பரதேசியாய்ப் போகவேண்டாம்.

பேசாமே என் அப்பா பேரை வச்சுடுங்க வடிவேலுன்னு"

முருகனார் அசந்துவிட்டார். ஆனால் மறுகணம் அவர் கண்களில் ஒளி வீசியது. வடிவேல் என்பது அவர் பூஜித்து வரும் மறு பெயர்தானே. அதை மறுக்க அவர் மனம் ஒப்பவில்லை. தாம் பிரேரேபித்த பெயரை வெற்றியுடன் வாபஸ் வாங்கிக்கொண்டார்.

குழந்தை வடிவேலு என்ற திரு நாமத்தோடு தான் வளர்ந்து வந்தது. வயது பன்னிரண்டிற்குள் தேவாரம், திருவாசகம் இன்னும் பல பக்திப் பாடல்களையெல்லாம் மனனம் செய்துகொண்டு அற்புதமாய்ப் பாட ஆரம்பித்துவிட்டான்.

முருகனாரின் உடல் அமைப்பை அப்படியே பெற்றிருந்த வடிவேல் சகல விதத்திலும் தந்தையின் சுபாவத்தைக் காப்பிஅடித்தான். அவன் வயது பதினாறை அடைந்தபொழுது தன் தந்தையைப் போலவே பட்டினத்தார் பாக்களில் மனதைப் பறி கொடுத்தான். ஆனால் குழந்தை பட்டினத்தார் பாடல்களில் திளைத்து விளையாடியதைக் கண்டு களிக்க முருகனாருக்குக் கொடுத்துவைக்கவில்லை. அதற்குள் 'இனி உன் பற்று ஒழிய ஒரு பற்றும் இல்லை உடையவனே' என்று பாடிக் கொண்டு உடையவனை அடைந்துவிட்டார் முருகனார்.

அடடே, பட்டினத்தாரைக் கடற்கரையில் விட்டுவிட்டு எங்கேயோ வந்துவிட்டோமே. பரவாயில்லை. பட்டினத்தாராகிய வடிவேல் இப்பொழுது சிங்காரன் புரண்டு படுத்த திசைக்கு எதிர்த் திசையை நோக்கி உட்கார்ந்து கொண்டிருக்கிறான். வானத்திலும், கடலிலும் பறந்தும், மிதந்தும் காட்சி அளிக்கும் ஏகத்திலே தானும் ஒரு ஏகாங்கியாய் அமர்ந்திருக்கிறான். ஆகவே அவனைப் பற்றி இன்னும் கொஞ்சம் தெரிந்துகொள்வோம்.

இளமையின் துடிப்போடு காதல் கிளர்ச்சியும் கலந்து துள்ளவேண்டிய பருவத்திலே பந்தம் அறுத்துப் பரமனை நினைந்த பட்டினத்தார் பாக்களில் கவனம் செலுத்தினான் வடிவேல், அவன் கவனம் பண்ணிய பாடல்களில் சிலவற்றிற்கு அவனுடைய வாழ்க்கை அனுபவமே அவனுக்கு ஒரு அருமையான வியாக்கியானம் செய்து காண்பித்துவிட்டது.

அவனுடைய இளம் வயதிலேயே அவன் தந்தையைப் பின்பற்றித் தாயும் பரலோகவாசி ஆகிவிட்டாள். ஒரே பிள்ளையாகிய வடிவேல் தன் வீட்டிற்கு அருகிலேயே உள்ள தன் அத்தை வீட்டில் தங்க வேண்டியதாயிற்று. அருமைப் பெற்றோரைப் பிரிந்த வடிவேல் மிகவும் கவலையில் ஆழ்ந்திருந்தான் என்றாலும் தன் கவலையை மறக்க அங்கே அவனுக்கு ஒரு சாதனம் இருந்தது. கண்ணுக்கும் மனதிற்கும் குளுமையாய்த் தோற்றம் அளித்த அவனுடைய அத்தை மகள் அங்கே இருந்தாள்.

அவள் தனக்கே உரியவள் என்ற எண்ணம் அவனிடம் வலுப்பெற்றுக்கொண்டு வந்த காலத்தில் அவன் மனதில் ஒரு திருப்பத்தை உண்டு பண்ணிய சம்பவம் ஒன்று நிகழ்ந்தது.

திடீரென்று ஒருநாள் அவனை அந்தரத்தில் தவிக்கவிட்டு அம்பரம் ஏகிவிட்டாள் அத்தை மகள்.

அவன் மனதில் ஒரு பேர் அதிர்ச்சி தோன்றிற்று. பேர் அதிர்ச்சியால் ஒரு விரக்தி பாவம் பிறந்தது. விரக்தி பாவத்தால் ஒரு சூனியம் அவன் எதிரே விரிந்து ஏக வெளியோடு கலந்தது. அந்தச் சூனியம் அப்படியே

நின்றுவிடவில்லை. அது முட்டை வெடிப்பது போல் வெடிக்கவே அங்கே வடிவேலின் கண்ணுக்கு இறந்தகால நிகழ்ச்சிகளில் சில நிழல் இட்டு ஓடின.

அவனும் அத்தை மகளும் சிறுவர்களாயிருந்த பொழுது கற்பனை உலகில் கடிவாளம் இல்லாத குதிரை ஓட்டி விளையாடினார்கள். அவள் கழுத்தில் புரண்ட முத்தையும், பவளத்தையும், நெருடியும், ஸ்பரிசித்தும் புளகாங்கிதம் அடைந்ததும், அவள் பட்டுப் பாவாடையின் ஜிலுஜலுப்பைப் பார்த்தும், சலசலப்பைக் கேட்டும் அவன் பரவசம் அடைந்ததும், ஓடியும் ஆடியும் சென்ற அவள் உருவத்தோடு தன் உள்ளத்தையும் ஓடவிட்டு உவகை பூத்ததும் அடுக்கடுக்காய் அவன் எதிரே நிழல்களாய்க் காட்சி அளித்தன.

அந்த அத்தை மகள் இன்று செத்த மகள் ஆகிவிட்டாள். பிணத்தைச் சுற்றி வட்டமிட்டு ஒப்பாரி ஓலம் வைக்கிறார்கள் சில பெண் பிறவிகள்.

" பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்து
பட்டாடை சுற்றி
முத்தும், பவளமும் பூண்டு ஓடி ஆடி
முடிந்த பின்பு
செத்துக் கிடக்கும் பிணத்தருகே இனிச்
சாம் பிணங்கள்
கத்தும் கணக்கென்ன காண் கயிலாபுரி
காளத்தியே."

பட்டினத்தார் பாடிய இந்தப் பாட்டு அவன் இதயத்திலிருந்து வெடித்து, கபாலத்திலே கணகணவென்று ஒலித்தது. ஆகாசத்தில் ஏதோ ஒரு கோணத்தில் இருந்துகொண்டு அவனை நோக்கிப் பட்டினத்தாரே அந்தப் பாட்டைப் பாடுவது போலவும் அவனுக்கு ஒரு பிரமை தட்டிற்று.

சகல பொருள்களிலும் ஒளிந்துகொண்டு சாகசம் செய்யும் சாவைக் கண்டுகொண்டான் வடிவேல். தனக்குள்ளாகச் சாவு. வெட்டவெளியிலே சாவு. அசையும் பொருள்களிலும் சாவு. எங்கும் சாவின் தாண்டவம்.

அவன் நரம்பு மண்டலங்களை அதிரச்செய்து அவனைப் பலஹீனன் ஆக்கிவிட்டான் மரண தேவன்.

அவன் அன்பைக் கவர்ந்த தாயும் தந்தையும் போய்விட்டனர், அவன் உள்ளத்தைக் கவர்ந்த அத்தை மகள் செத்துவிட்டாள்.

நம்பிக்கை அற்றுக் காடாந்தகாரத்தில் விழுந்துவிட்ட வடிவேலுக்குப் பட்டினத்தார் அபயம் அளித்தார். ஏற்கனவே அவனுடைய கவனத்தைக் கவர்ந்திருந்த அவருடைய பாக்கள் இப்பொழுது அவன் நெஞ்சில் இன்பத்தேன் வார்த்தன. நைந்துபோன அவன் உள்ளம் மலர்ச்சிபெற்று, தெய்வகீதத்தை வர்ஷித்தது.

பட்டினத்தார் ஒளிவு மறைவாயிருந்துகொண்டு அவனுக்கு ஆறுதல் வார்த்தைகள் சொல்லிக்கொண்டிருந்தார்.

" ஊரும் சதம் அல்ல உற்றார்
சதம் அல்ல உற்றுப் பெற்ற
பேரும் சதம் அல்ல பெண்டீர்
சதம் அல்ல பிள்ளைகளும்
சீரும் சதம் அல்ல செல்வம்
சதம் அல்ல தேசத்திலே
யாரும் சதம் அல்ல நின் தாள்
சதம் கச்சி ஏகம்பனே."

இனி அந்தக் கச்சி ஏகம்பனைத் தவிர நம்புவதற்கு வேறு ஒருவரும் இல்லை என்பதைப் பட்டினத்தார் வாயிலாக மட்டுமன்றி, தன் அநுபவம் மூலமாகவும் உணர்ந்துகொண்டான் வடிவேல்.

சகலமும் சதம் அல்ல என்று நிச்சயம்செய்து ஆசையை அறவே ஒழிக்க முயன்ற வடிவேலைப் பட்டினத்து எழில் மிகுந்த பெண்கள் கூட வசியம் செய்ய முடியாமல் போய்விட்டது.

பௌடரையும், லிப்ஸ்டிக்கையும் நம்பி வாழும் நாரிமணிகளைக் காணும்பொழுதெல்லாம் 'பட்டப் பகலில் வெளி மயக்கே செய்யும் பாவையர்மேல் இட்டத்தை நீ தவிர்ப்பாய் இறைவா' என்று பட்டினத்தார் பாடலை ஞாபகப்படுத்திக்கொள்ளத் தவறமாட்டான்.

[வேதாந்த உலகில் வடிவேலின் அடிச்சுவட்டைப் பின்பற்றி நாம் வெகுதூரம் வந்துவிட்டோம். இனி நாம் திரும்பி மதராஸ் கடற்கரைக்குச் செல்வோம்.]

வடிவேல் இப்பொழுது தென்றலின் ஸ்பரிசத்தில் சற்றே கண்ணயர்ந்து மல்லாந்து கிடக்கிறான். ஆகவே மறு பக்கம் புரண்டு படுத்த சிங்காரத்தைக் கொஞ்சம் கவனிப்போம். அவனுடைய செய்கையைக் கவனிப்பதற்கு முன்னால் அவனுடைய அங்க இலட்சணத்தையும், குண விசேஷத்தையும் பற்றி நாம் சிறிது தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம்.

சிங்காரன் மற்றக் காலேஜ் மாணவர்களைவிடத் தோற்றத்தில் கம்பீரமாக இருப்பான். அவன் அணிந்துகொண்டிருந்த ஜிப்பாவும் கண்ணாடியும் அவனை ஒரு சிறந்த மேதாவியாக

# இப்பொழுது பத்மினி தன் சருமத்தை அழகுபடுத்த ஏன் லக்ஸ் டாய்லட் சோப்பை தேர்ந்தெடுத்தார் என்பதை நீங்களும் தெரிந்துகொள்ளுங்கள்



அவர்கூறுவதாவது:

"நான் ஒரு சினிமா நட்சத்திரமாவதற்கு பலவருஷங்களுக்கு முன்பே லக்ஸ் டாய்லட் சோப்பின் பராமரிப்பை தெரிந்துகொண்டிருக்கிறேன். அது முதல் ஒவ்வொருநாளும் நான் அதை கையாண்டுவருகிறேன். சருமத்தை மலர்ச்சியுடனும், அழகுடனும் வைத்திருக்க இதற்கு நிகர் வேறொன்றுமில்லை என்பதையும் தெரிந்துகொண்டிருக்கிறேன். நீங்கள் லக்ஸ் டாய்லட் சோப்பினால் உங்கள் சருமத்தையும் பாதுகாத்து வந்தால் சருமம் கெட்டுவிடும் என்று ஒருக்காலும் கவலைப் படவேண்டிய அவசியமில்லை. மேலும், அதன் மனதைமயக்கும் பரிமளத்தை நான் மிகவும் விரும்புகிறேன்."

★ இனிய மணத்துடன் கூடிய இந்த வெண்மையானதும் சுத்தமானதுமான சோப் உங்கள் சருமத்தையும் வசீகரமாக செய்யும்!




LTS. 250-172 TM

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

எடுத்துக் காட்டின. அவன் முகத்தில் எப்பொழுதும் ஏரு குறும்புப்பார்வை இருந்து கொண்டே இருக்கும். காலேஜ் மேடையிலோ, வெளியிலோ யார் என்ன பேசினாலும் அதற்கு எதிரிடையாதக் குதர்க்கம் செய்யும் பேச்சு வன்மை பெற்றவன், அவன் நிதான நடையும், புஜங்களின் அமைப்பும், இரட்டை நாடியும் அவனைத் தன்னம்பிக்கை உடையவன் என்று பறை சாற்றின. எல்லாவற்றிற்கும் மேலாக அவன் ஒரு மகா ரஸிகன். அதிலும் பெண்களின் அழகை மாந்தி மாந்தி அனுபவிப்பவன், சுருக்கமாகச் சொன்னால் சிங்காரனை ஒரு சிருங்கார புருஷன் என்றே சொல்லிவிடலாம்.

அவன் மறுபக்கம் புரண்டு படுத்துக் கொண்டிருந்ததாக அல்லவா பார்த்தோம். அவன் அப்படிப் புரண்டு படுத்ததற்குக் காரணம் இல்லாமலில்லை. அவன் அவ்விதம் படுத்துக்கொண்டு சற்றுத் தொலைவில் கண்ணுக்கினிய நீல நிற 'சாரி' அணிந்துகொண்டு உட்கார்ந்திருந்த ஒருநங்கையைக் கண்கொட்டாமல் பார்த்து அநுபவித்துக் கொண்டிருந்தான், அந்த நங்கை வேறு யாருமல்ல அவனோடும், வடிவேலோடும் ஒரே வகுப்பில் காலேஜில் படித்து வரும் மாணவி பங்கஜவல்லிதான்.

பங்கஜவல்லி அறிவு, அழகு, நாகரிகம் இவைகளில் மற்ற மாணவிகளைக்காட்டிலும் ஒரு படி உயர்ந்தவள் என்றே சொல்லவேண்டும். அப்பேர்ப்பட்டவள் எந்த மாணவனைத் தன் மணவாளனுக்கிக்கொள்ளப் போகிறுளோ? எந்த மாணவன் அவள் அருட் பார்வைக்கு இலக்காகப் போகிருனே? என்ற கேள்விகள் ஒவ்வொரு மாணவ இதயத்திலும் சதா எழுந்து கொண்டே இருந்தன.

கொஞ்ச நாட்களாய், கடற்கரையில் இப்பொழுது சிங்காரன் பார்க்கும் அதே இடத்தில் இருந்துகொண்டு வானத்தைப் பார்ப்பதும், கடலைப் பார்ப்பதும், பிறகு சிங்காரனைப் பார்ப்பதும், மறுபடியும் வானத்தைப் பார்ப்பதுமாக இருந்த பங்கஜவல்லியைக் கண்ணுற்ற சிங்காரன் ஒரு முடிவிற்கு வந்தான், மாணவர்களிடை எழுந்த கேள்விகளுக்கு இன்று அவனிடம் விடை கிடைத்துவிட்டது.

பங்கஜவல்லி தன் காதல் பார்வையால் தனக்கு அருள் பாலித்துவிட்டதைச் சிங்காரன் உணர்ந்துகொள்ளவே அவன் உள்ளம் எதிரே இருந்த கடல் அளவு விரிந்து, அடிவானத்தைத் தொட்டு, அதற்கு அப்பாலும், அப்பாலுக்கப்பாலும் வியாபித்துவிட்டது.

வடிவேல் கண்களை மூடிக்கொண்டு ஆழ்ந்த நித்திரையிலோ, மகா சமாதியிலோ கிடக்கச் சிங்காரனும் பங்கஜவல்லியும் ஒருவரை ஒருவர் பார்த்ததால் ஏற்பட்ட காதல் அலைகளைக் கடல் அலைகளோடு மோதவிட்டு நேரத்தைப் போக்கிக் கொண்டிருந்தனர். மாலை மயங்கி இருளும் கவிந்து விடவே அவர்களுடைய அன்றைய காதல் நாடகத்திற்குத் திரையிட வேண்டியதாய்ப் போய்விட்டது.

மறு நாள் அதே நேரத்தில் சிங்காரன் என்றைக்கும் இல்லாதபடி, அதாவது வடிவேலோடு காட்சி அளிக்காதபடி, வேறு எங்கோ சென்றுவிட்டான். வடிவேல் அவன் வீட்டிற்குச் சென்ற சொழுது அவன் முன்னதாகவே வெளியில் எங்கேயோ போய்விட்டான்.

ஆகவே வடிவேல் பட்டினத்தார் பாடல் திரட்டுகளைக் கையில் எடுத்துக் கொண்டு ஏகாந்தமாக அடையாறு பக்கம் கிளம்பினன்.

ஆனுல் அவன் அங்கே சென்ற பொழுது சிங்காரனும் பங்கஜவல்லியும் ஒரு மரத்திற்கு அடியில் போடப்பட்டிருந்த சாய்வு ஆசனத்தில் அமர்ந்து ஊளினமாய்ச் சம்பாஷித்துக் கொண்டிருந்ததைச் சற்றுத் தொலைவிலிருந்து பார்க்க நேரிட்டது.

அவ்வளவுதான். வடிவேலின் மனதில் ஒரு பெரிய சஞ்சலம் தோன்றி அவனை வதைக்க ஆரம்பித்தது. சிங்காரனுக்கும் அவனுக்கும் இடையே பல துறைகளில் அபரிமிதமான அபிப்பிராயபேதம் இருந்துவந்திருக்கிறதென்ருலும் சிங்காரனை இதுவரை தன் சிஷ்யனுகவே வடிவேல் பாவித்துவந்திருக்கிருன். —ஏன்? சிங்காரன்கூட எத்தனையோ தடவை எவ்வளவோ பொறுமையாய் வடிவேலின் வேதாந்த உபதேசங்களைச் சிஷ்ய பாவனையில் கேட்டுவந்திருக்கிருன். ஆகவே அவனை எப்படியாகிலும் தன் வழி திருப்பிவிட வேண்டும் என்றும், தங்கள் காலேஜ் படிப்பு முடிந்தவுடன் ஒரு சத்சங்கம் நிறுவி, சிங்காரன் உதவி கொண்டு சன்மார்க்கர்களைச் சேர்த்து உலகிற்குப் பணி ஆற்றவேண்டும் என்றும் அவன் திட்டம் போட்டிருந்தான்.

அந்த அவனுடைய திட்டத்தை இன்று சிங்காரன் காற்றிலே பொடிப் பொடியாய் ஊதித் தள்ளிவிட்டதாக வடிவேல் உணர்ந்தான். இருந்தாலும் அவன் சிங்காரத்தின்மேல் வைத்திருந்த நம்பிக்கையைத் தளர்த்திவிட இஷ்டப்படவில்லை. இன்னும் அவனுக்குத் தன் வேதாந்த இஞ்ஜெக்ஷன் கொடுத்து, சரிப்படுத்திவிடலாம் என்று முடிவு செய்துகொண்டு அவ்விடத்தைவிட்டு அகன்று கடற்கரை ஓரமாய் அலைகளைக் கால்களால் துழாவிக் கொண்டே வீடு திரும்பிவிட்டான்.

மறு நாள் கொஞ்சம் முன்னதாகவே வடிவேல் சிங்காரன் வீட்டிற்குச் சென்றான். அப்பொழுது சிங்காரன் தான் என்றும் அணியும் கதர் அங்கவஸ்திரதிற்குப் பதிலாக ஜரிகை அங்கவஸ்த்திரத்தைப் போட்டுக்கொண்டு ஜம்மென்று வெளியே கிளம்ப வாசலில் வந்து நின்றான். ஆனால் அவன் வடிவேலைப் பார்த்த உடன் முகத்தில் அசடு தட்ட, "என்ன பட்டினத்தாரே, என்றைக்கும் இல்லாதபடி இன்று இவ்வளவு சீக்கிரமாய் என்னைப் பார்க்க வந்துவிட்டாய்!" என்று கேட்டதற்கு வடிவேல் "என்றைக்கும் இல்லாதபடி இன்று நீ ஜரிகை அங்கவஸ்திரத்தை அணிந்துகொண்டிருப்பதைப் பார்ப்பதற்காகத்தான்" என்று சொல்லிக் கலகலவெனச் சிரித்தான். மகா ரஸிகனை சிங்காரன் வடிவேலின் பதிலை ரஸித்ததாகத் தெரியவில்லை. அதற்குப் பதிலாக மனதிற்குள் வடிவேலைச் சபித்தான். முகத்தில் ஸ்நேக பாவத்தைச் சிரமப்பட்டு வரவழைத்துக்கொண்டு வடிவேலைத் தன் அறைக்குள் அழைத்துச் சென்றான். ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி அவனை அனுப்பிவிடவேண்டும் என்பதற்காகவே அவனை அங்கு இட்டுச் சென்றான்.

நாற்காலியில் அமர்ந்த சிங்காரன் சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்றவைத்துக்கொண்டு சற்று யோசித்தான் என்ன சாக்கைச் சொல்வது என்று. வடிவேல் தன் வலது கையைத் தூக்கி, சின் முத்திரை காட்டி, ஒரு ஞானியின் சிரிப்பைச் சிரித்துக்கொண்டு, "அப்பனே உன் மனதிற்குள் இருப்பது இக்தக் கட்டைக்குத் தெரியுமடா" என்று சொல்லிவிட்டு ஒரு சிறு மௌனத்தில் ஆழ்ந்தான்.

"விஷயத்தை உன் ஜரிகை அங்கவஸ்திரம் சொல்வதற்கு முன்பாகவே என் கண்களே நேரில் விஷயத்தைக் கண்டுவிட்டதடா" என்று சொல்லி மீண்டும் ஒரு மௌனத்தில் ஆழ்ந்துவிட்டுத் திரும்பவும் பேச்சைத் துவக்கினான்.

"சிங்காரன், உன்னிடம் இன்று ஒரு முக்கியமான விஷயம் பேசிவிட்டுப் போகலாம் என்று வந்திருக்கிறேன்"

"விஷயம் என்னவோ?"

"மனிதனிடம் பெண்மையின் சக்தி அமைந்திருப்பதை நீ நம்புகிறாயா?"

"சந்தேகம் இல்லாமல்"

"அப்பேர்ப்பட்ட சக்தியை நீ இழந்துவிட விரும்புவாயா?"

"ஒருபோதும் மாட்டேன்"

"அந்த மகா சக்தியை இழந்துவிடத் துணிந்துவிட்டாய் என்பதை உனக்குத் தெரியப் படுத்தத்தான் இன்று இங்கு வந்தேனடா"

"அப்படித் துணிந்துவிட்டேன் என்பதை எப்படி நீ துணிகரமாய்ச் சொல்லலாம்?"

"இல்லாவிடில் ஒரு பெண்ணை நாடி நீ சென்றிருக்க மாட்டாயல்லவா?"

"பெண்ணை நாடுவதில் அந்தச்சக்தி வளருமே ஒழியக் குறையும் என்று நான் கருதவில்லையே!"

"அப்படி நீ கருதவில்லை. ஆனால் ஒன்று. உன்னிடம் இருக்கும் அந்தச்சக்தியை விலைபேசி விற்கும் பொழுதுதான் ஒரு பெண் உன்னை நாடி வருவாள் என்பதை நீ ஞாபகம் வைக்க வேண்டும்.

"அதற்குப் பதிலாக அவளிடம் இருக்கும் சக்தியின் அம்சம் எனக்குக் கிடைக்கிறதல்லவா?"

"கிடைப்பதாக உன் மனம் எண்ணிக்கொள்கிறது. ஆனால் உடல் சக்தியை இழந்துவிடுகிறதே."

"எல்லாவற்றிற்கும் மனமே காரணம். மனம் நினைத்தபடியே வாழ்வும் அமைந்துவிடும் என்பதை நீர் மறந்துவிட்டீரோ?"

"வாஸ்தவம். ஆனால் மனத்தை நம்பி வாழ்வது அழியும் சக்தியைத் தேடிச்செல்வது போலத்தான். மனத்திற்கு அப்பால்பட்ட பிரம்ம சக்தியை......"

"பட்டினத்தாரே, உம்முடைய உபதேசங்களைக் கேட்டு என் காது புளித்துப்போய்விட்டது. இப்பொழுது எனக்கு ஒரு மாறுதல் வேண்டி நிற்கிறேன் நான். அந்த மாறுதலை அன்புக் கடல் அலைபாயும் ஒரு நங்கையின் உள்ளந்தான் வழங்கமுடியும். ஆகையால் என்னை என் வழி போகவிட்டு விடும்......சரி, அது போகட்டும். இன்று நான் எக்மோர் ஸ்டேஷன் வரை போகவேண்டியிருக்கிறது. என் மாமா ஒருவர் வருகிறார். அவரைச் சந்தித்துப் பேசவேண்டும். நேரமும்......"

சிங்காரன் பேச்சை முடிப்பதற்குள் வடிவேல் எழுந்துவிட்டான். அப்பொழுது அவன் கையிலிருந்த பட்டினத்தார் பாடல் திரட்டு நழுவிக் கீழே விழுந்துவிடவே அதை எடுக்கக் கீழே குனிந்தான். அப்பொழுது அவன் உருவம் சிங்காரனுக்கு மிகவும் பரிதாபமாகப்பட்டது. "பயித்தியக்காரன்" என்று சொல்லி உள்ளூறச் சிரித்துக்கொண்டான்.

வடிவேலுக்கோ சிங்காரன் மாயை என்ற கூட்டிற்குள் அகப்பட்ட ஒரு புழுவைப்போல் தோற்றம் அளித்தான். அந்தப் புழு கடைத் தேறும் நாள் என்றுளதோ என்று எண்ண மிட்டவனாய் வீடு திரும்பிவிட்டான்.

அன்றிருந்து சிங்காரனும் வடிவேலும் பிரிந்துவிட்டார்கள். இத்தனை நாட்களாய் வடிவேலோடு பழகிவந்த சிங்காரன் காதல் வெறியில் கட்டுண்டு அவனை விட்டுப் பிரிந்து விட்டான். மனிதனுடைய நிலையற்ற மனப் போக்கை நினைத்துப் பார்க்கையில் வடிவே லுக்கு விரக்தி பாவம் வெகுவாய் வளர்ந்து வானத்தையே தொட்டுவிட்டது. உலகத்து உயிர்க் கூட்டங்களெல்லாம் அவன் கண் முன்பு வெகு அற்பமாய்த் தோன்றின. அகண்டத் தின் அற்புதத்தை உணர்ந்துகொண்ட வடி வேல் தோன்றி மறையும் அந்த உயிர்க் கூட் டத்தைக் கண்டு களுக்கென்று சிரித்தான்.

மாதங்கள் பல ஓடின. வடிவேல் பட்டினத் தார் அடைந்த நிலையை நோக்கிச் சென்று கொண்டிருந்தான் என்றாலும் வேதாந்த விசா ரத்தைத் தாற்காலிகமாய் நிறுத்திவிட்டு இறு திப் பரீட்சைக்கு அதி மும்முரமாய்ப் படிக்க லானான். காலேஜ் படிப்பை முடித்துவிட்டு ஒரு வேலையில் அமர்ந்துகொண்டால் அதன் மூலம் தன் கர்ம யோகத்தை நடத்திக்கொண்டு போக ஹேதுவாயிருக்கும் என்ற அபிப்ராயம் அவனிடம் இருந்தது. ஆகவேதான் பட்டினத் தாரைப்போல் கோவணத்தைக் கட்டிக் கொண்டு கிடைத்த அன்னத்தை வாயில் போட்டுக்கொண்டு, வீதிகள் தோறும் ஊர்கள் தோறும் அலையும் நோக்கத்தைக் கைவிட் டான்.

இரவானது பகலை விழுங்க ஆரம்பிக்கும் சந்தி நேரத்தில் மேஜை மேலிருந்த ஹரிக் கேன் விளக்கைச் சற்றே தூண்டிவிட்டுக் கொண்டு தான் எழுதியிருந்த சரித்திர பாடக் குறிப்புகளை எடுத்து மேல் வாரியாய்ப் படித் துக்கொண்டிருந்தான் வடிவேல்.

அவன் சகல பாடங்களிலும் முதன்மை ஸ்தானம் வகித்து வந்தான். சரித்திர பாடத் தில் மற்றவைகளைவிட மிக அதிக ஞானம் அவனுக்கிருந்தது. அவன் பரீட்சையில் எழுதி யிருந்த சரித்திரக் குறிப்புகளை அரசாங்க சரித்திர ஆராய்ச்சிக் கழகத்தார் அங்கீகாரம் செய்துகொண்டு அவனுக்குப் பரிசும் வழங்கி னார்கள் என்பது ஒன்றே அவனுடைய சரித் திர மேதையை நன்கு எடுத்துக் காட்டும்.

காலேஜ் பிரின்ஸ்பால் அவனை 'ஹிஸ்டோ ரியன்' (சரித்திராளன்) என்றே கூப்பிடுவது வழக்கம். "நீ ஒரு சிறந்த சரித்திர விற் பன்னனாய் வரவேண்டும்" என்று சொல்லி அவனை மிகவும் உற்சாகம் ஊட்டியவண்ண மாகவே இருப்பார்.

ஆனால் கேவலம் இறந்துபோன காலத்திற் குக் கட்டுப் பட்டு இயங்கின சரித்திரத்தைக் கரை காணுவதோடு அவன் மனம் நின்றுவிட விரும்பவில்லை. திரிகாலங்களையும் கடந்து இயங்கும் முழுமுதல் பிரம்மத்தில் லயம் ஆகும் ஒரு மகா ஞானியாக விளங்குவதற்கு அல்லவா அவன் மனம் சபதம் செய்து கொண் டிருந்தது.

அவனுடைய மனோ நிலையைப் பிரின்ஸிபாலை விட மாணவர்களே நன்கு அறிந்திருந்தார்கள். இல்லாவிடில் அவர் வைத்த 'சரித்திராளன்' என்ற செல்வப் பெயரை விட்டுவிட்டு "பட்டி னத்தார்" என்று அழுத்தமாக அவர்கள் அவ னைக் கூப்பிடுவார்களா?

கிரேக்க நாட்டு ஆதி சரித்திரத்தின் கால வீதியில் அதி வேகமாய் முன்னேறிக்கொண்டு வந்த வடிவேலின் சிந்தனைப் பறவை வாசல் முற்றத்தில் எழுந்த காலடி அரவம் கேட்டு ஆயிரம் ஆண்டுகளை ஒரே தாவாய்த் தாவிப் பொத்தென்று அவன் அறையில் வந்து குதித் தது.

மெதுவாக எழுந்து போய்க் கதவைத் திறந் தான் வடிவேல். அங்கே பங்கஜவல்லி என்ற மாணவி நின்றுகொண்டிருந்தாள். வடி வேலுக்கு ஒருகணம் திகைப்பாய்ப் போய் விட் டது. ஒரு நாளும் இல்லாத திருநாளைப்போல் என்றும் வராத பங்கஜவல்லி இன்று இந்த இர வில் அங்கே எதற்காக வந்தாள்? அவனிடம் இந்தக் கேள்வி எழுந்த அதேகணத்தில் பங்கஜவல்லியும் "மிஸ்டர் வடிவேல், சிரமத் திற்கு மன்னிக்கவும். தாங்கள் குறித்து வைத் திருக்கும் ஹிஸ்டரி நோட்ஸை வாங்கிக் கொண்டு போகலாம் என்று வந்தேன். தயவு பண்ணி அதை......" என்று சொல்லிக் குழை யும் முகத்தோடு வடிவேலைப் பார்த்தாள்.

"ஓ தாராளமாய், இதோ எடுத்து வருகி றேன்" என்று சொல்லிய வடிவேல் உள்ளே சென்றான். பங்கஜவல்லியும் அவனைப் பின் தொடர்ந்து அவன் இருந்த அறைக்கு வந்தாள். வடிவேல் அதை எதிர்பார்க்கவில்லை. உள்ளே வந்த பங்கஜவல்லி அங்கே போடப்பட்டிருந்த இரண்டு நாற்காலிகளில் தனிவாயிருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டாள். வடிவேல் தான் மிகவும் போற்றத்தக்க முறை யில் எழுதி வைத்திருந்த சரித்திரக் குறிப்புகள் அடங்கிய பல நோட்டுப் புத்தகங்களை அல மாரியிலிருந்து எடுத்துவந்து மேஜைமேல் போட்டுவிட்டுத் திரும்பவும் அலமாரிப்பக்கம்

போய் ஏதோ தேடுவதுபோல் பாவனை செய்து கொண்டிருந்தான்.

தனக்கு வேண்டிய குறிப்புகள் கிடைத்து விட்டதாகப் பாவனைசெய்த பங்கஜவல்லி "இதோ, இந்தக் குறிப்புகள்தான் வேண்டும் மிஸ்டர் வடிமேல்" என்று சொல்லி வடிவேலைப் பார்த்தாள். வடிவேலும் தேடுவதை நிறுத்திவிட்டு "அப்படியானால் அவைகளை எடுத்துக்கொள்ளுங்களேன்" என்றான். பங்கஜவல்லியோ "மிஸ்டர் வடிவேல், இங்கே சற்று வரமுடியுமா? இந்தக் குறிப்புகளை நானே படித்து மனதில் கிரகித்துக் கொள்வதைவிடத் தங்களிடம் நேரிலேயே அதைக் கேட்டுத் தெரிந்துகொண்டால் மிகவும் நன்றாயிருக்கும்" என்று சொல்லிவிட்டு மிகவும் இனிமையான ஒரு புன்முறுவலோடு வடிவேலைப் பார்த்தாள்.

வடிவேலுக்கு மிகவும் தர்மசங்கடமாய்ப் போய்விட்டது. "இதேதடா" என்று நினைத்தானோ என்னவோ நாற்காலியைச் சற்று பின்னுக்கு இழுத்துப் போட்டுக்கொண்டு அதில் அமர்ந்தான்.

தன் கையில் வைத்திருந்த குறிப்புத் தாள்களை அவனிடம் கொடுப்பதற்கு எழுந்த பங்கஜவல்லி நாற்காலியை விருட்டென்று முன்னுக்கு இழுத்து அவனுக்கு அருகிலேயே போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள்.

அவளுடைய இந்தச் செய்கையைப் பார்க்க வடிவேலுக்கு ஒரே திகைப்பாய்ப் போய்விட்டது. ஆனால் நிலைமையைச் சமாளித்துக் கொள்ள அவன் பங்கஜவல்லி எடுத்துக்கொடுத்த குறிப்புகளைக் கூர்ந்து பார்த்த வண்ணம் மௌனமாக இருந்தான். ஆனால் அவன் கண்களுக்கு எழுத்துக்கள் புலப்படவில்லை. அவன் நெஞ்சு படபடத்தது. எனினும் இருதயத் துடிப்பைத் தன் மனோசக்தியால் கட்டுப்படுத்த முயன்ற வண்ணம் வடிவேல் எதிரேயிருந்த சுவரைப் பார்த்துச் சொல்லலானான். "இந்தக் கிரேக்க நாட்டுச் சரித்திரமே மிகவும் சிக்கல் வாய்ந்தது......ஆனால் ......அதை......" என்று ஏதேதோ சொல்லப் போனான்.

அதற்குள் பங்கஜவல்லி மறுபக்கம் திரும்பி, குபீரென்று சிரித்தாள், அவள் அவனுக்குக் கொடுத்திருந்தது இந்திய நாட்டுச் சரித்திரமாயிருக்க அவன் கிரேக்க நாட்டிற்குப் போய் விட்டானே என்று நினைத்துத்தான் அவள் அப்படிச் சிரித்தாள்.

விஷயம் புரிந்துகொண்ட வடிவேலின் முகம் வெட்கத்தால் சிவந்துபோயிற்று, பங்கஜவல்லி இப்பொழுது நாற்காலியின் கைப் பிடியில் முழங்கையை ஊன்றி, சற்று வடிவேலின் பக்கமாகச் சாய்ந்துகொண்டு, "மிஸ்டர் வடிவேல், தாங்கள் கிரேக்க நாட்டை விட்டு இந்திய நாட்டிற்கு வாருங்கள். நேராக மதராஸிலுள்ள தங்கள் அறைக்கே வந்து விடுங்கள். அதன் பிறகு இந்திய நாட்டுச் சரித்திரத்தைப் பார்த்துக்கொள்ளலாம்" என்று சொல்லிவிட்டுக் கடைக் கண்ணால் வடிவேலின் விழிகளை நோக்கினாள்.

அவள் இப்பொழுது அவனுக்கு வெகு சமீபத்தில் இருந்தாள். அவளுடைய உஷ்ணகரமான மூச்சு வடிவேல் தூக்கிப் பிடித்திருந்த தாள்களில் பட்டு அவைகள் அசைந்தன.

வடிவேல் மேலே அண்ணாந்து பார்த்தான். அங்கே பட்டினத்தாரைக் காணவில்லை. அவன் இப்பொழுது அவரைப்பற்றியோ, அவருடைய வேதாந்த விசாரத்தைப் பற்றியோ துளியேனும் சிந்தித்ததாகத் தெரியவில்லை.

வலது தோளில் ஒரு நளின அசைவைக் கொடுத்துக்கொண்டு பங்கஜவல்லிதான் சொல்லவிருக்கும் விஷயத்திற்கு இதுதான் சரியான சமயம் என்று நினைத்து வடிவேலைப் பார்த்துக் கேட்டாள்: "மிஸ்டர் வடிவேல், நான் சிங்காரனைக் காதல் செய்து வருவதாகத்தானே தாங்கள் எண்ணியிருக்கிறீர்கள்?" இந்தக் கேள்விக்குப் பதில் ஒன்றும் சொல்லாமல் அவள் வதனத்தையே பார்த்துக்கொண்டிருந்தான் வடிவேல்.

மேலும் பங்கஜவல்லி சொன்னாள்: "மிஸ்டர் வடிவேல், முன்னொரு நாள் நானும் என் சிநேகிதிகளும் ஒன்று சேர்ந்து ஒரு திட்டம் போட்டிருந்தோம். அது சிங்காரனின் கர்வத்தை அடக்கவேண்டும் என்பதுதான். அதன் படி எங்களில் ஒருத்தி அவனைக் காதலிப்பதாக நடித்து அவனை ஏமாற்றிவிட வேண்டும் என்று முடிவு செய்தோம். அதற்காகத்தான் இத்தனை காலம் நான் சிங்காரனோடு பழக நேரிட்டுவிட்டது......தன்னைப் பற்றி மிகவும் உயர்வாக நினைத்துக்கொண்டிருக்கும் அவனுடைய மமதையை மட்டம் தட்டும் காலம் நெருங்கிவிட்டது........"

அவள் சொல்லி வந்ததைக் கேட்க வடிவேலின் முகத்தில் ஆச்சரியக் குறிகள் தெரிந்து மின்னின. தன்னையும் அறியாமல் முகத்தை இன்னும் சற்று முன்னே இழுத்துக்கொண்டு மகுடியைக் கேட்கும் நல்ல பாம்பைப்போல் பங்கஜவல்லி இன்னும் என்ன சொல்லப் போகிறாள் என்பதைக் கேட்கலானான்.

அவளுடைய முகம் இப்பொழுது நாணத்தின் வசப்பட்டு மிகவும் ஒசாபையுடன் விளங்

இற்று. அவள் உதடுகளில் ஏற்பட்ட சிறு துடிப்புகள் வடிவேலிடம் ஒருவித மனக் கிளர்ச்சியை உண்டுபண்ணின.

பங்கஜவல்லி மேலும் தொடர்ந்தாள்: "ஆனால்.........ஆனால்.........என்னைப்பற்றிய வரையில்.........நான்.........நான் என் உள்ளத்தைத் தங்கள் அன்பிற்குப் பணயம் வைத்து வெகு நாட்கள் ஆகின்றன, நாம் ஆறும் வகுப்புப் படித்துக்கொண்டிருந்த பொழுதே என்னை மானஸிகமாகத் தங்களுக்கு அர்ப்பணித்து விட்டேன். தங்களுடைய ஆத்ம சக்திக்கு அடிமைப்பட்ட என்னை......" பங்கஜவல்லிக்கு மேலே பேச ஓடவில்லை. காதல் ஆவேசத்தோடு பேரிய அவள் உடல் முழுவதும் சிறிது நடுங்கிற்று. மனோவசிய நிபுணர்களையே தோற்கடிக்கும் ஒரு மின் அம்பை வீசி வடிவேலைப் பார்த்து விட்டுத் தலை குனிந்து கொண்டாள் பங்கஜவல்லி.

பங்கஜவல்லி தன் ஆகிருதியின் உஷ்ணக் காற்று வடிவேலைக் கட்டிப்போடும் அளவிற்கு அவனை அணுகியிருந்தாள். அவளுடைய எழில் உருவத்தின் வர்ம கேந்திரங்களிலிருந்து கிளர்ந்து எழுந்த மின்சார அலைகள் அவனை ஒரு புதுமையாகச் செய்துவிட்டன. பெண்மையின் சக்தி தன் நளின விரல்களை விரித்து உள்ளங் கையிலே வடிவேலை அடக்கம் செய்துகொண்டு விட்டது.

ஹிரோஷிமாவை அணுகுண்டு தகர்த்தது போல் பெண்மையின் சக்தி வடிவேலின் வேதாந்தத்தைத் துகள்களாக்கிச் சிதற அடித்து விட்டது. அப்படிச் சிதறி ஓடிய வேதாந்தத் துகள்கள் திரும்பவும் திரண்டு உரு மாறி அவன் கபாலத்தில் ஒரு இன்பக் குளிகையாய்க் காட்சி அளித்தன. அந்தக் குளிகையானது பங்கஜவல்லியின் சுவாச கோசத்தால் அவன் உடல் முழுவதும் உருண்டோடி அவனை முற்றிலும் ஒரு புது மனிதனாய் ஆக்கிக்கொண்டிருந்தது.

புது மனிதனாய்ப் புத்துயிர் பெற்ற வடிவேல் எழுந்து நின்று பங்கஜவல்லியின் கரங்களை மெல்லப் பற்றினான். தன் வசம் இழந்த பங்கஜவல்லியும் வடிவேலின் மார்பை நோக்கி நகர்ந்துகொண்டிருந்தாள். அவர்கள் இருவர்க்கும் இடையே இருந்த இடைவெளி சிறிது சிறிதாய்ச் சிறுத்து வந்து இல்லாமலே போய்விட்டது. சக்தியும் சிவனும் சாடிக் கலந்து அத்வைதம் அடைந்துகொண்டிருந்தன.

இந்த அற்புத கட்டத்தில் அங்கே, அதாவது அவர்கள் இருந்த அறைக்கு வெளியே இன்னும் ஒரு அதிசய சம்பவம் நிகழ்ந்தது.

வெகு நீண்ட காலமாக வடிவேலைப் பிரிந்து பங்கஜவல்லியை நிழல்போல் தொடர்ந்த சிங்காரன் வடிவேலிடம் ஏதோ ஒரு புத்தகம் வாங்குவதற்காக நிலவு வீசும் அந்த நேரத்தில் அங்கு வந்தான். வந்தவன் வெளியே மறைவாக நின்றுகொண்டு உள்ளே நடந்த நாடகத்தையும், அதன் உச்ச நிலையாகிய கட்டத்தையும் ஜன்னல் வழியாகப் பார்க்க நேரிட்டது.

அவ்வளவுதான். அவனுடைய ஆத்மாவில் ஒரு புரட்சி புரண்டு எழுந்தது. அவன் கண்கள் விகாரமாய் விழித்தன. உலகியல் வாதியாகிய அவனுக்கு உலகம் சுழன்று ஒரு கனவின் தோற்றமாய்ப் பட்டது. தன் நம்பிக்கை கொண்ட அவன் தன்னையே பொய் என்று நினைக்கலானான். சிங்கார புருஷனாயிருந்த அவன் சித்தப் பிரமை பிடித்தவன் போல் காணப்பட்டான்.

வடிவேலிடம் இன்பக் குளிகை தோன்றிய அதே நேரத்தில், சிங்காரத்திடம் திரண்டு இறுகியிருந்த சிருங்காரக் குளிகை சிதறிச் சின்னாபின்னம் ஆகிக்கொண்டிருந்தது. வடிவேலின் வேதாந்தம் சிதறித் துகள்களான அதே கணத்தில் சிங்காரத்திடம் ஒரு வேதாந்தப் புயல் கிளம்பி, பெருமூச்சுவிட ஆரம்பித்தது.

இன்னது செய்வது என்று தெரியாமல் அவன் வானத்தைப் பார்த்தான். வானம் நிர்மலமாகத்தான் இருந்தது. ஆனால் அங்கே கரு மேகங்கள் திரண்டு எழுந்து குமுறி ஓடியதைச் சிங்காரன் மட்டும் பார்த்தான். தன்னைச் சுற்றி ஒரு முறை பார்த்துக்கொண்டான். சுற்றிலும் இனிமையான தென்றல் வீசிக் கொண்டிருந்தது. ஆனால் அந்தத் தென்றலின் கருவூலத்தில் ஒரு சண்டமாருதம் சுழன்று ஓடியதைச் சிங்காரன் மட்டும் பார்த்தான்.

வெறுருவர்க்கும் புலனாகாத இந்த அதிசய நிகழ்ச்சிகளைக் கண்ட சிங்காரன் கண்களுக்கு ஒரு அதிசயக் காட்சி மட்டும் புலனாகாமல் போய்விட்டது. அவனுக்கு எதிராக வடிவேலின் வாசனை விட்டுப் பட்டினத்தாரின் ஆவி வந்துகொண்டிருந்ததை அவன் பார்க்கவில்லை.

ஆதிகாலம் தொட்டு வடிவேலோடு கூடிக் குலாவி மகிழ்ந்த பட்டினத்தார் இன்று அந்த நிலவு வீசும் இரவிலே தம் வேதாந்தக் குப்பைகளை எல்லாம் மூட்டை கட்டிக்கொண்டு வடிவேலின் வீட்டைவிட்டு வெளிக் கிளம்பிக்கொண்டிருந்தார். இந்தக் காட்சியைச் சிங்காரன் பார்க்க முடியவில்லை.

தமக்கு இனி வடிவேல் உள்ளத்தில் இடம் இல்லை என்று கண்டுகொண்டு வெளிக்கிளம்பிய பட்டினத்தார் அங்கே சிங்காரன் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்தார்,

அவனுடைய பரிதாப நிலையைக் கண்ட அவர் சற்றே பின் வாங்கி ,நின்று கலக்கமே உரு

வெடுத்த சிங்காரனைக் கண்கொட்டாமல் நோக்கினார். சிங்காரன் மனதில் ஏற்பட்டிருந்த பிரளயம் இப்பொழுது மெல்ல மெல்லத் தணிந்து வந்து அடங்கிவிடவே அவனிடம் ஒரு பயங்கர சாந்தி நிலவிற்று. அவன் உள்ளக் கதவு திறந்து கிடப்பதைக் கண்ட பட்டினத்தார் திடீரென்று அதற்குள்ளே புகுந்துகொண்டார்.

அந்த இடத்தைவிட்டு அகன்ற சிங்காரத்தின் உருவம் சாலையை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது. சூட்சுமக் கயிற்றால் இழுபட்டுச் செல்லும் பதுமைபோல் இமை கொட்டாது விழித்துச் சென்றான் சிங்காரன். உலகத்தை அறவே வெறுத்த நிலையில் அவன் சென்றுகொண்டிருந்தான்.

சற்றுத் தூரம் செல்லவே அங்கே ஒரு வீட்டின் உட்புறத்தில் சில இளம் பெண்கள் கலகலவென்று நகைத்து உரையாடிக் கொண்டிருந்தது அவன் காதில் பட்டது. சிங்காரத்தின் உடல் சிறிது பதறிற்று. ஆனால் விரக்தியின் முத்திரை பெற்றிருந்த அவன் உதடுகள் நையாண்டி பண்ணும் பாவனையோடு முறுவலித்துக்கொண்டிருந்தன. அவன் என்றோ ஒரு நாள் வடிவேலிடம் கேட்டிருந்த ஒரு பாட்டை அவனுடைய உள்ளம் மௌனமாகப் பாடிற்று.

"காதென்று, மூக்கென்று, கண்ணென்று
காட்டி என் கண்ணெதிரே
மாதென்று சொல்லி வரு மாயை
தன்னை மறலி விட்ட
தூதென்று எண்ணாமல் சுகம் என்று
நாடும் இத் துர்ப் புத்தியை
ஏதென்று எடுத்துரைப்பேன்
இறைவா.........."

தாம் பாடிய இந்தப் பாட்டைச் சிங்காரத்தின் உள்ளம் பாடுவதைக் கேட்ட பட்டினத்தார் குலுங்கக் குலுங்கச் சிரித்துவிட்டு, சாவதானமாகப் பத்மாஸனத்தில் அமர்ந்துகொண்டார். கைகளைக் கட்டி, கண்களை மூடிக்கொண்டு ஒரு மோஹனப் புன்னகையுடன் தாம் பாடிய சில அடிகளை முணுமுணுக்க ஆரம்பித்தார். அவருடைய ஒரு சில வார்த்தைகள் மட்டும் காற்றில் அலைப்புண்டு வந்து வாசகர்களாகிய நம் காதுக்கு எட்டுகின்றன.

"வெறுப்பன உவக்கும்
உவப்பன வெறுக்கும்"

கன கம்பீரமாய் ஒலிக்கும் இவ்வார்த்தைகள் காற்றில் அடிபட்டுச் சுழன்று மீண்டும் எங்கோ சென்றுவிடுகின்றன.

கூடுவிட்ட பட்டினத்தாருக்குக் கூடு கொடுத்த சிங்காரன், வாழ்க்கையை உதறித் தள்ளி, நிலவு வீசும் வெளியிலே, கால் போன திசையில் எங்கேயோ சென்றுகொண்டிருந்தான். ●

# ஞானியும் மேதையும்

**எம். எஸ். சுப்பிரமணிய அய்யர்**

**மே**தையின் போதம் உலக வாழ்வினுக்கு உயரிய வழிகாட்டும். ஞானியின் வாசகமோ, பரவாழ்வினுக்குப் பெரிதும் பயன்படும். ஞானம் என்பது விட்டகுறை, தொட்டகுறையென வந்தெய்தும், மேதை என்பதோ படிப்பினுலும் உழைப்பினுலும் குருவருளினுலும் கிடைக்கக்கூடிய ஒன்ரும்.



பரம பக்தனொருவன் பகவான் ராமகிருஷ்ணரைத் தனது குடிசைக்கு அழைத்தான்; பற்பல பெரியாரையும் வரவழைத்தான்; பெரு விருந்தொன்று நடத்தினன். "ராமகிருஷ்ணரை ஞானவான் என்கின்றனரே! அவரை நோட்டம் பார்ப்போம்," என்று படிப்பாளிகளும் புத்திமான்களுமான பலர் வந்திருந்தனர்.

அத்தகைய பெரும் புருஷரில் ஒருவர் பங்கிம் சத்திர சட்டர்ஜீ என்பவர். "அவர் மிகப்பெரிய படிப்பாளி, பற்பல நூல்கள் எழுதியிருக்கிருர். தங்களைக் காணவே வந்திருக்கிருர். அவர் பெயர் பங்கிம்பாபு", என்று பக்தன் அறிமுகஞ் செய்து வைத்தான் [பங்கிம் என்ருல் வங்க மொழியிலே கோணல் என்று அர்த்தம்]

**பகவான் :** சிரித்துக்கொண்டே, பங்கிம்! நல்லது! தங்களைக் கோணலாகச் செய்தது எதுவோ?

**பங்கிம் :** (சிரித்துக்கொண்டே) பூட்ஸிதான் காரணம்! வெள்ளை எஜமான் கொடுக்கும் உதை என் உடம்பைக் கோணலாக்கிவிட்டது.

**பகவான் :** அன்புள்ள ஐயா! அன்று! ஸ்ரீ கிருஷ்ணன் தமது பேரன்பினுல் உடம்பு கோணிப்போனுர். ராதையின் மீது வைத்த காதலால், மூன்றிடங்களிலே அவர் உடம்பு வளைந்துவிட்டது என்பர் பெரியோர். அவன் நீலமேக வர்ணமாயிருப்பதேன்? சிறிய வடிவமும் தாங்கியிருப்பதேன்? உங்களுக்குத் தெரியுமா?

"எட்ட நின்று பார்த்தால், ஆண்டவன் அப்படித்தான் தோன்றுவார். தூர நின்று பார்த்தால், கடல் நீர் நீல வர்ணமாகவே தென்படும்; எனவே, நீலத்திரைக்கடல் என்பர். கடலருகே சென்று, கையிலே நீரை எடுத்து நோக்கினல், வெண்மையாகவே இருக்கும். ஸ்படிகமும் தோற்றுப்போம்.

"சூரியன் இருக்கிருன். மிகவும் சிறிதாகவே காணப்படுகிருன், தொலைதூரத்தில் இருப்பதனுலேயே அவ்விதம் காண்கின்ருன். பக்கத்தில் போய்ப் பார்த்தால், பிரமாண்டமாகவே இருப்பான். எனவே, ஆண்டவனது உண்மைத் தன்மையை உணர்ந்தால், அவன்

நீல நிறமாகவும் இரான், சிறிதாகவும் தோன்றான்.

"பக்கத்திலே சென்று பார்த்தல் என்பது அருமையாம்! தன்னை மறந்து மனத்தை அவன்பால் வைத்து, சமாதியில் இருப்பின் ஆண்டவனது உண்மைத் தன்மையை உணரமுடியும். நான், நீ என்ற வேற்றுமை இருக்கும் வரையில் ஆண்டவனுக்கும் உருவமும் வடிவமும் இருந்தே தீரும்.

"எல்லாம் ஈசுவரமயம்! எல்லாம் ஆண்டவனது திருவிளையாடல்! அவனது லீலா விநோதங்கள்! நான், நீ என்ற வேற்றுமை யுணர்ச்சிக்கு மனிதர் ஆளாயிருக்கும் வரையில், ஆண்டவனது திருவிளையாடல்களைப் பல பல மாதிரியில் மாந்தர் அனுபவித்தாக வேண்டும்.

"ஸ்ரீ கிருஷ்ணன் புருஷன்! ஸ்ரீமதியோ சக்தி! இருவரையும் புருஷன், பிரகிருதி என்பர். இருவருக்கும் வித்தியாசம் கிடையாது. பிரகிருதி இன்றேல் புருஷன் இல்லை! புருஷன் இன்றேல் பிரகிருதி இல்லை! அக்னியும் அதன் சக்தியும் போலவே அவ்விருவரும்.

"அக்கினியை நினைக்கையில், அதன் தகிக்கும் சக்தியும் நினைவுக்குவரும். தகிக்கும் சக்தியை நினைக்கையில், அக்கினியை நினைக்காமல் இருக்கமுடியுமோ? ராதா கிருஷ்ண விக்கிரகத்தில் ராதை கிருஷ்ணனையே நோக்குவதையும், கிருஷ்ணன் ராதையையே நோக்குவதையும் பார்க்கலாம்,"

அவ்விதம் பகவான் ராமகிருஷ்ணர் சொல்லி முடித்ததும், பங்கிமும் அவர் தோழர்களும் தமமுள் ஆங்கிலத்தில் ஏதோ முணுமுணுத்தனர். அவர்களைப் பார்த்து, "கனவான்களே! ஆங்கிலத்தில் ஏதோ பேசுகிறீர்களே, என்ன அது?" என்று வினவினர் ராமகிருஷ்ணர்.

"ராமகிருஷ்ணருக்கு இங்கிலிஷ் தெரியாது. அந்த வங்காளிகள் தங்கள் தாய் மொழியில் முணுமுணுத்திருக்கலாம். பகவான் வித்தியாசமாக நினைப்பாரோ," என்று அந்தப் பக்தர் கருதினர்; உடனே "ஒன்றுமில்லை. தாங்கள் சொல்லிவந்ததைப்பற்றியே பேசி நின்றோம்" என்று பதில் சொன்னர்.

**பகவான்:** (புன்னகையுடன்) அப்படியா? எனக்கு ஒரு கதை ஞாபகம் வருகிறது. அது வேடிக்கையாக இருக்கும். நாவிதனொருவன் ஒரு கனவானுக்கு க்ஷவரம் செய்து கொண்டிருந்தான். தற்செயலாக அக் கனவானுக்குக் காயம் பட்டுவிட்டது. உடனே பரிகாரியை நோக்கி, டாம் (Damn) என்றான்.

"நாவிதனுக்கோ டாம் என்ற பதத்தின் பொருள் தெரியாது. உடனே கத்தியைத் துடைத்து அடப்பத்துக்குள் போட்டுக் கொண்டான்; அடப்பத்தையும் சரிப்படுத்திக்கொண்டான். டாம் என்றீர்களே, அதன் அர்த்தம் என்ன, என்று கேட்டான்.

"கனவானே, முட்டாள்தனமாக இராதே; க்ஷவரத்தைப் பண்ணிமுடி. அந்தப் பதத்துக்கு விசேஷமாக ஓர் அர்த்தமும் கிடையாது. கொஞ்சம் ஜாக்கிரதையாக க்ஷவரம் பண்ணு என்றான். அது கேட்டு மயிர் வினைஞன் திருப்தி அடையவில்லை. ஆதலின் அந் நாவிதன் 'ஐயா! (Damn) என்ற பதத்துக்கு, ஏதேனும் நல்ல பொருள் உண்டானல் நான் டாம்; என் தந்தை டாம்; என் மூதாதைகளெல்லாம் டாம்; அந்த வார்த்தையில் விபரீதமான பொருள் இருக்குமானல், நீர் டாம்! உங்கள் அப்பா டாம்! உங்கள் முன்னோரெல்லாம் டாம்! ஒரு டாமா, டாம், டாம், டாம் என்று அடுக்கினன்."

அக்கதை கேட்டு எல்லாரும் குலுங்கக் குலுங்கச் சிரித்தனர். பங்கிம் உடனே பேச்சுக் கொடுக்கலானர்.

**பங்கிம்:** ஐயா! தாங்கள் ஏன் உபதேசமான பிரசங்கம் செய்யக்கூடாது?

**பகவான்:** (மந்தஹாஸத்துடன்) உபதேசப் பிரசங்கமா? தற்பெருமைக்கல்லவோ ஒருவன் உபதேசப் பிரசங்கஞ் செய்ய நினைப்பான்! மனிதன் ஓர் அணுமாத்திரமான ஜீவன். கடவுளல்லவோ உபதேசப் பிரசங்கம் செய்யக்கூடும்? உபதேசப் பிரசங்கம் என்பது அற்ப விஷயமா என்ன?

"கடவுள் காட்சியளித்து, உபதேசப் பிரசங்கம் பண்ணு என்று பணித்தால் தான், ஒருவன் உபதேசஞ் செய்யலாம். ஆனலும் என்ன? நாம் உபதேசஞ் செய்யலாம். நம்மைத் தடுப்பது யார்? ஆண்ட

வனது கட்டளையில்லாவிடின், உபதேசஞ் செய்து, தொண்டைக் கிழியக் கத்தலாம்.

"முதல் இரண்டு மூன்று நாளைக்கு ஜனங்கள் உங்களது உபதேசத்தைக் கேட்பர். அப்பாலோ, எல்லாவற்றையும் மறந்து விடுவர். பேச்சைக் கேட்கும் வரையில் நன்றாய் இருக்கிறது என்பர். பேச்சை நிறுத்தியவுடனே, எல்லாம் போய்விடும்! பால் இருக்கிறது. அடியிலே நெருப்பு இருக்கும் வரையில், உச் என்னும்; கொதிக்கும். நெருப்பு இல்லாவிட்டால், எல்லாம் அடங்கிக் கிடக்கும்.

"சாதனஞ்செய்து, ஒருவன் தன் சக்தியை வளர்த்துக்கொள்ள வேண்டும். இல்லாவிடின், உபதேசம செய்யக் கூடாது. நமக்கே படுக்க இடமில்லை; இந்நிலையில் இடமிருக்கிறது, படுக்க வா என்று மற்றொருவனை எப்படி அழைப்பது?

"கடவுள் காட்சியளித்துக் கட்டளையிட்டால், உபதேசஞ் செய்யலாம். ஆண்டவனது ஆணை இல்லாவிடின், உன் உபதேசத்தைக் கேட்பார் யார்?"

அவ்விதம் பகவான் பேசிவர, எல்லாரும் காதுகொடுத்துக் கேட்டுவந்தனர். அதன்பின், பங்கிமைப் பார்த்து.

**பகவான் :** தாங்கள் பெரிய பண்டிதரென எனக்குக் கேள்வி; பல நூல்களும் எழுதியிருக்கிறீர்களாம். மனிதனது கடமைகள் என்ன? சொல்லுங்கள். மரணத்துக்குப் பின், அவனைத் தொடர்வது யாது? மரணத்துக்குப் பின்னுற்ற நிலையில உங்களுக்கு நம்பிக்கை உண்டா?

**பங்கிம் :** மரணத்துக்குப் பின்பா? என்ன அது?

**பகவான் :** ஞானமடைந்தபின், ஒருவன் மரிப்பானுகில், மீண்டும் அவன் பிறக்க வேண்டியதில்லை. ஞானம் பெருவிடின், ஆண்டவனை அறியாவிடின், அவன் மறுபடியும் இப் புவியிலே பிறந்தாகவேண்டும். பிறவியைத் தப்ப முடியாது. அத்தகையவனுக்கு, மரணத்துக்குப்பின் ஒரு நிலையுண்டு.

"ஞானம் எய்திவிடின், ஆண்டவனையும் அறிந்துவிடின், அவனுக்குப் பிறவி கிடையாது. மீண்டும் பூமியிலே அவன் தோன்ற வேண்டியதில்லை. வேகவைத்த நெல்லை விதைத்தால், அது முளைக்குமா? முளைவிடாது. ஞானம் என்னும் தீயில் வெந்தவனும் சிருஷ்யில் அடங்கான்.

**பங்கிம் :** (சிரித்துக்கொண்டே) களைப் புல்லும் மரத்தைப்போல் பயன்படாது.

**பகவான் :** ஞானியை நீங்கள் களைப்புல் என்ன முடியாது? கடவுளையறிந்தவன் பிறவாத் தன்மை அடைந்துவிடுவான். அவன் சூரிய மண்டலத்திலும் சரி, சந்திர மண்டலத்திலும் சரி, பிறக்க முடியாது.

"உவமானத்தை நேர்மையாகப் பொருள் கொள்ளவேண்டும். தாங்கள் பண்டிதர் அல்லவா? தங்களுக்குத் தர்க்கம் தெரியுமே! புலியைப்போல் அவன் பயங்கர புருஷன் என்ருல், அவனுக்குப் புலியைப்போல் வாலும் வரிப் புள்ளிகளும் உண்டு என்று அர்த்தம் பண்ணலாமோ? (எல்லாரும் சிரித்தல்)

"குயவர் தாங்கள் வனைந்த பானை சட்டிகளை வெய்யிலில் காயவைக்கின்றனர். அவற்றில் பச்சைப் பானையும் இருக்கும்; கொஞ்சம் காய்ந்த பானையும் இருக்கும்; சில சமயம் மாடுகள் வந்து அப் பானைகளில் சிலவற்றை மிதித்து உடைத்துவிடும்.

"இனி, சுட்ட பானைகள் உடைந்துவிடின், அவற்றைக் குயவன் வீசி எறிந்துவிடுவான். சுடாத பானைகள் உடைந்தால் எறிந்துவிடுவதில்லை; மீண்டும் தண்ணீர் ஊற்றிப் பிசைந்து, திகிரியிலே வைத்து மறுபடியும் பானையாகவோ சட்டியாகவோ வனைவான். தீயில் வைத்துச் சுடும்வரையில் பச்சைப் பானையை விடான் குயவன்; மண்ணேடு மண்ணுக்கிப் பிறகு உபயோகிப்பான்.

"எனவே ஞானத்தை அடையும்வரையில், ஆண்டவனை அறியும்வரையில், ஒருவன் உலகிலே பிறந்தாகவேண்டும். தப்ப முடியாது. ஆண்டவனை அறியும் வரையில் விமோசனம் ஏது? மாயையைக் கடந்துவிட்டால், பிறப்பினுக்கு வழியில்லை.

"ஞானியோ மாயையைக் கடந்தவன். அவனுக்கு உலகில் என்ன வேலை? இது நிற்க மானிடகோடிகளுக்குப் போதம் புரிய வேண்டி, சில ஞானிகளை உலகிலே நிறுத்திக்கொள்கிருர் கடவுள். அவ்விதம்

நிறுத்தக்கூடியவர் கடவுளே. சுகதேவரையும் சங்கராசாரியையும் கடவுள் நிறுத்திக் கொண்டார் அல்லவா?''

இவ்வாறெல்லாம் பகவான் பேசிய பின்பு, பங்கிமை நோக்கி, "மனிதனுடைய கடமைகளை பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்று வினவினர். அதற்கு,

**பங்கிம்:** மனிதரைப்பற்றி என்னைக்கேட்டால், ஆகாரம் கொள்ளுதல், தூங்குதல், சரீர இன்பம் கொள்ளுதல் என்பேன்.

**பகவான்:** அப்படியா? மிக்க குறும்புத்தனமாகப் பேசுகிறீர்கள். நீங்கள் காலையும் மாலையும் செய்வதே, உங்கள் வாயிலிருந்து வார்த்தையாக வருகிறது. எதைத் தின்கிறோமோ அந்த ஏப்பமே வரும். பெண், பொன் ஆகிய இரண்டையுமே இரவு பகலாக எண்ணி நிற்கிறீர்கள். ஆதலின் அதே நினைவு.

"பெண்ணையும் பொன்னையும் மறந்து கடவுளைப்பற்றியே எண்ணியிருந்தால், நம்மிடம் மாசு சேராது. கடவுளை யறிந்தவன் தங்களைப்போல் பேசான். கடவுளைப்பற்றி எண்ணவிட்டால், பண்டிதருடைய படிப்பு என்ன பயனுடையது? கழுகுகளும் பருந்துகளும் வானத்திலே உயரப் பறக்கின்றன. ஆயினும் அவற்றின் திருஷ்டியோ கீழே பூமியிலுள்ள மாமிசத்தின்மீதுதான்.

"சிலரோ பக்தர்களை நோக்கி, இவர்களெல்லாம் பக்தர்களாம். சதா கடவுளையே நினைத்து நிற்கிறார்கள். இவர்களுக்கு மூளை குழம்பிவிட்டது. நம்மைப்போல் சுகமே உண்டு உடுத்து, களித்து வாழ அறியார் என்று ஏசுகின்றனர். அவ்விதம் ஏசுவார் காகமே போல்வர்.

"காகமும் தன்னைச் சமர்த்தன் என்று எண்ணிக்கொள்கிறது. ஆனாலும் காலையில் எழுந்தவுடன் என்ன செய்கிறது? பிறரது எச்சிலையும் அழுக்கையும் தின்று தன் கும்பியை நிரப்பிக்கொள்கிறது.''

இவ்வாறு பகவான் கூறிவரவே, எல்லாரும் நிச்சப்தமாயிருந்து கேட்டு வந்தனர். மேலும் அவர் சொன்னது:

"அன்னப்பறவை இருக்கிறது. பாலையும் நீரையும் கலந்து வைத்தால், பாலை மட்டும் அது பருகும், நீரைப் பிரித்துவிடும். ஞானிகளும் பெண், பொன் எனும் நீரைப் பிரித்து ஒதுக்கிவிட்டு, ஆண்டவன் என்னும் பாலைப் பருகவே முயலுவர். உண்மைப் பக்தர்களும் அப்படியே.''

இப்படி பகவான் சொன்னதும், "நான் சொல்வது கண்டு, வருத்தம் வேண்டாம்,'' என்று பங்கிமை நோக்கிச் சொன்னர். அதற்கு,

**பங்கிம்:** இனிப்பான வார்த்தை கேட்க நான் இங்கே வரவில்லை.

**பகவான்:** பெண்ணும் பொன்னுமே மாயைகள். அம்மாயையில் கட்டுப்பட்டிருப்பதனால், கடவுளை அறிய முடியவில்லை. இரண்டையும் மறக்கவைக்கும்படி கடவுளை வேண்ட வேண்டும். அந்தராத்மா என்பது அவரே. மனமார வேண்டினல், அவர் கருணை புரிவார். பொன்னையும் மண்ணையும் ஒன்றாக எண்ணவேண்டும். அவ்வாறே இரண்டையும் கங்கையிலே வீசி எறிந்தேன்.

**பங்கிம்:** பணம் என்பது களிமண்ணா? கையில் இரண்டு காசிருந்தால், ஏழை எளியவர்க்குக் கொடுக்கலாமே, தான தர்மம் பண்ணலாமே. காசு களிமண் ஆனல் மனிதன் தர்மஞ்செய்ய முடியாது. நன்மை செய்யவும் ஆகாது.

**பகவான்:** தர்மமா! நன்மை செய்வதா! பிறருக்கு நன்மை செய்யமுடியும் என்று துணிந்து கூறுகிறீர்களே! என்ன மமதை மனிதனுக்கு? தூங்கும்பொழுது வாயிலே அசுத்த ஜலத்தை ஊற்றினல், தூங்குவோன் அறிகிறானா? அவன் வாய் உட்கொள்ளுகிறதா? வாயிலிருந்து தானே அது வழிகிறதே. அப்போது அவன் மமதை எங்கே போயிற்று?

"அன்பு என்பது ஆண்டவன் ஒருவனிடந்தான் உண்டு. நானும் அன்புடையவன் என்று சொல்லும் மனிதன் விசித்திர பிறவியேயாகும். சந்நியாசி என்போன் சிந்தையில்கூடப் பெண்ணையும் பொன்னையும் நினைக்கக்கூடாது.

"குடும்பி' என்போனுக்குப் பணம் வேண்டியதுதான். குழந்தை குட்டிகளை அவன் காப்பாற்றவேண்டும். குடும்பி உண்மையான பக்தனயின், ஆசாபாச மற்று எதையும் செய்வான். எல்லாவற்றையும் ஆண்டவனுக்கே ஒப்படைப்பான்.

"குடும்பியொருவன் தர்மம் செய்தால், விருப்பு வெறுப்பின்றிச் செய்யவேண்டும், பிறருக்குத் தர்மம் செய்கையில் அது தனக்கென்றே அவன் கருதவேண்டும். எங்கும் பிரகாசமான ஆண்டவனுக்கு ஊழியம் புரிவதாக எண்ணவேண்டும். எங்கும் வியாபியான கடவுளுக்கு ஊழியம் புரிகிறோம் என்ற நினைப்பு உண்டானால், பிறருக்கு நலம் புரிகிறோம் என்ற சிந்தை ஏது?

"எந்த உயிரிலும் கடவுளையே பார்த்து, பெயருக்கோ புகழுக்கோ எதுவும் செய்யாமல், புண்ணிய லோகம் போகவேண்டும் என்றும் எண்ணாமல், பலன் உண்டு என்று பாராமல், தொண்டு செய்வது நம் கடமை என்று அறிந்தால், அதுவே சுய நலமற்ற, தனக்கே புரிந்துகொள்கிற நலமாகும்! இதுதான் கர்மயோகம் இதுதான் கடவுளை யறிதல்.

"சித்தசுத்தியுள்ள பக்தர் அருமை. கடவுளே நித்தியம், மற்றைய எல்லாம் அநித்தியம் என்று உணர்ந்துகொண்டாலல்லது கடவுளை அறிய முடியாது."

**பங்கிம்:** தெய்வீக அன்பு, பேரன்பு என்பதனை ஒருவன் பெருக்கிக்கொள்வது எப்படி?

**பகவான்:** துடிதுடிப்பு வேண்டும். தாயைப் பிரிந்துவிட்ட குழந்தை எப்படித் துடிக்கிறது? கடவுளை அடைய வேண்டும் என்று நாமும் அப்படியே துடிக்கவேண்டும். தாயைக் காணும் வரையில் குழந்தை அழுகிறது, அலறுகிறது. அவ்வாறே நாமும் அழுதால் ஆண்டவனைக் காணவும் முடியும்.

"கடவுளைக் காணவேண்டுமே என்று குருவைக் கேட்டான் ஒரு சீடன். உடனே குரு அவனைப் பிடித்து நீருக்குள் அமிழ்த்தினார். சிறிது நேரம் ஆனதும் கையை எடுத்தார். உடனே அவன் வெளியே தலையைத் தூக்கி அப்பாடா என்றான்.

"நீருக்குள் அமிழ்த்தியபொழுது எப்படி இருந்தது? என்று குரு கேட்டார். உயிர் போய்விடும்போல் இருந்தது என்று அவன் சொன்னான். கடவுளைக் காணா விடின் உயிர்போய்விடும் என்றபடி நீ துடிப்பாயானால், கட்டாயம் கடவுளைப் பார்க்க முடியும் என்றார் குரு.

(பங்கிமை நோக்கி,) அன்ப! கடலிலே மேலெழுந்த வாரியாக மிதந்து என்ன பயன்? அடியில் அல்லவோ இரத்தினங்கள் கிடக்கின்றன. ஆகவே ஆழ்ந்து பார்க்கவேண்டும்."

அவ்வாறெல்லாம் பகவான் பேசிவர, பங்கிம் சந்திரர் பரவசம் ஆனார். முடிவிலே எழுந்து பகவானை வணங்கினார். "ஐயனே, என் வீட்டில் தங்கள் பாததூளி படவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்.

"நல்லது, கடவுள் விரும்பினால் வருவேன்" என்றார் பகவான்.

முடிவிலே பங்கிம் விடைகொண்டார்; எழுந்தார்; ஆயினும் அவரது பரவசம் தணியவில்லை. அவரது சித்தமெல்லாம் பகவானது போதத்திலேயே ஆழ்ந்து கிடந்தது. ஆதலின், மேல்வேஷ்டியை எடுத்துக் கொள்ளாமலேயே அவர் புறப்பட்டார்.

பக்கத்தில் இருந்த ஓர் அன்பர் அந்த மேல்வேஷ்டியை எடுத்து, பங்கிடம் கொடுத்தார். அப்போதும் அரை நினைவுடன் அவர் வாங்கிக்கொண்டார்.

படித்த அறிவாளிகளைக் கண்டால், பகவான் ராமகிருஷ்ணருக்கு ஆனந்தம் பொங்கும். கேள்விகேட்டு அவர்களின் தன்மையை அறிவதும் அவர் வழக்கம். பின்பு ஞானமாரி பொழிதல் இயற்கை.

மகாமேதையான பங்கிம் சந்திர சட்டர்ஜியை மகா ஞானியாக ஆக்கவேண்டும் என்றே பரமஹம்ஸர் விரும்பினார். பங்கிம் கேள்வி கேட்கக் கேட்க, பகவானது போதம் பொங்கியது.

மீண்டும் பகவானைச் சந்திக்கவேண்டும் என்று பங்கிம் விரும்பினார். ஆனால் கொடுத்துவைக்கவில்லை. விண்ணுலகம் அவரை அழைத்துக்கொண்டுவிட்டது.

● ● ●

# பலி

**முகவை ஜி. எஸ். மணியம்**

[பல்லவ சாம்ராச்சியத்தின் தலைநகர்- சுந்தரவதனம், தினகரன் இருவரும் நண்பர்கள்]

**சுந்தரவதனம் :** தினகரா, எல்லாவற்றையும்விட நகரின் நடுவிலே நாற்சந்தியில் இருக்கும் அந்த ஆண் பெண் சிலை என் கண்களை விட்டு அகலவில்லை. அவன் அவளை அள்ளியணைந்திருப்பது அவர்களுடைய உண்மைக் காதலை உலகிற்குத் தெரிவிக்கவில்லையா? அச் சிலையைப் பற்றி ஏதேனும்.........

**தினகரன் :** சொல்கிறேன், கேள் அச் சோகக் கதையை. மகேந்திரவர்மப் பல்லவர் காலம். ஆஸ்தான சிற்பி **இளவழகன்** சிற்பிகளிலெல்லாம் சிறந்தவன். அவன் அருமைக் காதலியின் பெயர் **பூங்குயில்.** அவர்களுடைய வாழ்க்கைச் சக்கரம் உருண்டோடிய ஒருநாள்.........

## காட்சி 1

[மாலை நேரம். இளவழகனின் இல்லம். இளவழகன், பூங்குயில் பேசிக்கொண்டிருக்கின்றனர்.]

**இளவழகன் :** அன்பே!

**பூங்குயில் :** ஊம், இன்று ஏன் இவ்வளவு தாமதம்?

**இள :** வழியில் பெண்ணொருத்தியைக் கண்டதின் விளைவு.

**பூங் :** அவள் யாரோ?

**இள :** கேள். கதிரவனைக் கண்டு கண் விழிக்கும் கமலத்தின் கனக முகம், அவளது மானின் மருண்ட நோக்கு, விற்புருவம், ரோஜாக்கன்னம், முல்லையின் மோகனப்புன்னகை, மின்னலிடை, அன்னநடை, ஏன், சுருக்கமாக அழகின் உருவமெனலாம் அவளை. அவளைப் பார்த்தவுடன் என்னை மறந்தேன். ஒரு இன்ப உணர்ச்சி என்னுடலிலே ஓடி மறைந்தது. அவளுடைய முத்து முறுவல் என்னைப் பரவசப் படுத்தியது. என்னுள்ளங் கொள்ளைகொண்ட அக் கள்ளியின் கரம் பிடிக்க எண்ணி நான்.................

**பூங் :** அதிருக்கட்டும். அவ்வழகியின் பெயர்?

**இள :** என்ன அழகான பெயர்! என் வாழ்வை வளப்படுத்தக்கூடிய அம்மோகனாங்கியின் பெயரைக் கூறினால் கோபித்துக்கொள்ளமாட்டாயே?

**பூங் :** இல்லை. சொல்லுங்கள் அப் பெயரை?

**இள :** அவள் பெயர்...........பூங்குயில்.

**பூங் :** (வெட்கத்துடன்) இத்தனை வர்ணனையும் என்னைப்பற்றியதுதானா?

(பூங்குயில் ஒரு ஓவியத்தை அவனுக்குக் காண்பிக்கிறாள்)

**பூங் :** இச் சித்திரத்தைப் பாருங்கள். கடந்த நான்கைந்து நாள்களாகச் சிரமப்பட்டு எழுதிய இவ்வோவியம் என்னுடைய கற்பனையின் மென்மலர்.

**இள :** (சித்திரத்தைப் பார்த்தவண்ணம்) மாலைவேளை. அழகான குளம். யோகியரின் மனம்போலக் களங்கமற்ற தண்ணீர். கதிரவன் இவ்வுலகினின்று விடைபெறுகிறான். கமலம் காதலனின் பிரிவாற்றாமல் கலங்குகிறது. குளக்கரையில் ஓங்கி அடர்ந்த கருவேலமரம். அதன் கிளைகள் தண்ணீரில் சரிந்து கிடக்கின்றன. ஆ! கிளையொன்றிலுள்ள இரு முட்களில் இரண்டு பட்சிகளின் உயிரற்ற உடல்கள். அதிலிருந்து இரத்தம் சொட்டுச் சொட்டாகத் தடாகத் தண்ணீரில் வடிகிறது.

படத்தின் கீழே, "காதலின்றேல் சாதல்" என்ற எழுத்துக்கள். இதன் கருத்து?

**பூங்:** கருவேல மரத்தில் இரண்டு பட்சிகள். ஆண் ஒன்று. அதன் பெடை யொன்று. காலையில் உணவு தேடச்செல்லும் ஆண் பட்சி மாலையில் காத்திருக்கும் மனையாளுக்கு உணவு கொணர்ந்துதரும்: தினமும் இதே நாடகம். ஒரு நாள். காலை



யில் உணவு தேடச்சென்ற ஆண் மாலை வெகுநேரமாகியும் திரும்பி வரவில்லை. இரவும் வந்து சென்றது. காதலி கலங்கினள். மறுநாள் காலை. "காதலன் இன்றி வாழும் வாழ்வு அர்த்தமற்றது. இறந்து விடுவதேமேல்," என்று எண்ணி, வெற்றி வீரனின் உரம் பெற்ற நெஞ்சம்போலத் திகழும் கருவேலமுள்ளொன்றிற்குத் தன் உயிரை ஈந்தது அப்பெடை. மாலை வந்தது. யாரோ ஒருவனால் சிறைப்படுத்தப்பட்ட அந்த ஆண் பறவை சிறையிலிருந்து தப்பி, தன் காதலியைப் பார்க்க விரைந்தது. மாண்டுகிடந்த தன் மனைவியைக் கண்டு மனம் வருந்தியது. "என்னருமைக் காதலி, நீயில்லாத இவ்வுலகம் இனி எனக்கு இன்பம் பயக்க முடியாது" என்று சொல்லி மற்றொரு கருவேலமுள்ளில் தன் உடலைப் பாய்வித்துத் தன்னை மாய்த்துக்கொண்டது.

**இள :** ஆகா! அபூர்வகற்பனை. உண்மையுங்கூட. ஆனாலும்.........

**பூங் :** ஆனாலும், என்ன ?

**இள :** காதலுக்குப் பலியானவர்கள் மிகவும் குறைவு. இயற்கையாகவோ அல்லது வேறு எந்தக் காரணத்திற்காகவாவது உயிரிழந்தவர் பலரையும் காதலுக்கு உயிரீந்தாரென உலகம் மதிக்கிறது.

**பூங் :** அப்படியானால், உண்மையில் காதலின் நிமித்தம் உயிர் விட்டவர் கிடையாதா?

**இள :** காதலுக்குப் பலியான கட்டிளங்காளைகளைக் கணக்கிட்டு முடியாது. காதலுக்குயிர்துறந்த காரிகைகள் எத்தனை பேரோ? காதல்! தெய்வீகமானது. இயற்கையில் எங்கு நோக்கினும் காதல் மலிந்து காண்கிறது. கதிரவனுக்கும் கமலத்திற்கும் காதல். மலருக்கும் மணத்திற்கும், இன்பத்திற்கும் இன்னலுக்கும், பகலுக்கும் இரவுக்கும் காதல். நம் வாழ்வு பூத்துக் குலுங்குகிறது. நம் வாழ்வு இன்றுபோல் என்றைக்குமே பொங்கித் ததும்புமா, கண்ணே?

**பூங் :** அதற்கென்ன சந்தேகம்? நம் காதல் அன்றொரு நாள் அரும்பி, நேற்று மலர்ந்து, இன்று மணம் வீசுகிறது. காதலில் இன்பங்கண்டோம். அக்காதல் கடுந் தோல்வியுற்றால் சாதலில் இன்பங்காண்போம். காதல், உண்மைக்காதல், உயிர்க்காதலாகவிருக்கும்போது துன்பங்காணப் பயமேன்? சரி. நேரமாகிறது. போவோம். [இருவரும் போகிறார்கள்]

## காட்சி 2.

*[பூர்ணிமை இரவு. அரண்மனைப்பூங்கா. அரசகுமரி மலர்க்கண்ணாள். தோழியர். விளையாடுகின்றனர்]*

**மலர்க்கண்ணாள் :** அடி, கமலா. வானத்து வாவியிலே மிதக்கும் அப்பொன் தட்டு நிலவைப்பார். தண்ணொளி சுரந்து, ஒளிக்கதிரை அள்ளி அள்ளிச் சொரியும் அப்பொன்னிலவு நந்தமிழ்நாட்டு வள்ளல்களை நினைவுறுத்தவில்லை? உலகில் பரவியுள்ள அமைதிக்கும் வெண்ணிலவின் பொன்னிலவுக்குமுள்ள ஒற்றுமையைக் கண்டாயா? என் மனம் களித்துக் கூத்தாடுகிறது. தோழிகளை வேறு இடம் போகச்சொல். என் யாழைக் கொண்டுவா. அதன் தந்திகளை மீட்ட என் விரல்கள் துடிக்கின்றன. போ, சீக்கிரம்.

*(தோழிகள் செல்கின்றனர் கமலா யாழ் கொண்டு வருகிறாள்)*

**கமலா :** குமாரி. நான் உன்னுடன் இருக்கலாமல்லவா? அல்லது..............

**மலர்க்கண்ணாள் :** இல்லை, நீயும் போய் விட்டுச் சிறிது நேரம் கழித்து வா. என் மனம் தனிமையை நாடுகிறது.

*(கமலா போகிறாள்)*

*(அரசகுமாரி யாழில் ஒரு பண்ணை இசைக்கிறாள். சிறிது நேரம் கழித்து அருகிலிருந்த செடியிலிருந்த நாகமொன்று அவளைத் தீண்டிவிடுகிறது)*

**ம. கண்ணாள் :** ஐயோ, அம்மா? (அலறிக் கொண்டே மூர்ச்சை அடைகிறாள்)

*(எல்லோரும் ஓடி வருகின்றனர்)*

**கமலா :** குமாரி, குமாரி. ஐயையோ, பேச்சு மூச்சைக் காணோமே. பத்மா. நீ போய் அரசரை அழைத்துவா.



[அரசர், அமைச்சர், மருத்துவர் முதலானோர் வருகின்றனர்]

அரசர் : பண்டிதரே, என்னருமை மகள் இறந்துவிட்டாளா ?

[மருத்துவர் மௌனமாயிருக்கிறார்]

**அரசர் :** ஏன் மௌனம் ?

**பண்டிதர் :** ஆம், அரசே பாம்பு தீண்டியுள்ளது.

**அரசர் :** கலைகளைக் கற்றுணர்ந்த என் கற்பகத்தை இனி என்று காணப் போகிறேன். மலருக்கும் மரத்திற்கும் வேற்றுமை தெரியாத அந்த யமனுக்கு எந்த மடையன் "தர்மராசன்" என்ற பெயரீந்தான் ? என் வாழ்வுப் பூங்காவில் அரும்பிய அரும்பு மலர்ந்து மணம் வீசுமுன்பே உதிர்ந்துவிட்டது. ஐயோ, தாளமுடியாத துக்கமல்லவா இது ? [அரற்றுகிறார் அரசர்]

**அமைச்சர் :** மன்னா வருந்திப் பயன்—?

**அரசர் :** ஆம். அரற்றுவது அறியாமைதான். ஆனாலும், இறந்துகிடப்பது என் மகளல்லவா ? சரி, இறுதிக்கடன் முடிக்க, கட்டழகியாகிய என் கன்னித் தெய்வத்தைக் கட்டையில் வைத்து எரிக்கவேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். போங்கள்.

[எல்லோரும் போகிறார்கள்]

## காட்சி 3

[அரண்மனை கொலுமண்டபம் காலை அரசர், அமைச்சர், இளவழகன் முதலானோர்]

**அரசர் :** [இளவழகனை நோக்கி] சிற்பியாரே, மாண்டுபோன எனது மகளின் நினைவு என்னைச் சுட்டெரிக்கிறது. இறந்துபட்ட எம் இன்பக் கிளியின் நினைவாக, நம் நகரின் நாற்சந்தியில் அவளுடைய சிலையொன்று நிறுத்த முடிவு செய்துள்ளேன். இன்றைய மூன்றாவது பூர்ணிமை நாளன்று சிலை திறக்கப்பட வேண்டும். நீர் போகலாம். [சபை கலைகிறது]

## காட்சி 4

[இளவழகனின் இல்லம். மாலைநேரம். இளவழகன், பூங்குயில்]

**இளவழகன் :** என் குயிலே. வா. இப்படி உட்கார்.

[அவனருகில் பூங்குயில் அமர்கிறாள்]

**பூங்குயில் :** நீங்கள் மிகவும் இளைத்துவிட்டீர்கள்.

**இள :** இருக்கலாம். அரசர் என்னை அரசிளங்குமரியின் திருவுருவத்தைச் சிலை செதுக்குமாறு பணித்ததிலிருந்து எனக்கு எதிலும் மனம் செல்லவில்லை. உணவு வேண்டியிருக்கவில்லை. உறக்கம் வருவதில்லை. சில சமயங்களில் அயர்வின் காரணமாக என் கண் உறங்கினாலும், என்னுள்ளம் உறங்க மறுக்கிறது. எனக்கும் எனக்குள் ஆவேசமாகியிருக்கும் .. அமர கலைக்கும் அழியாத புகழ் கொணர ஏற்பட்டதல்லவா இப்பணி ! அமர கவிஞன் நான் என்று எண்ணும்பொழுதெல்லாம் என் நெஞ்சம் பெருமிதத்தால் விம்முகிறது. சில நேரங்களில், உன்னோடு இருந்து உன்னைக் களிப்பூட்ட முடியாமலிருந்திருக்கலாம். அதற்காக வருத்தமா ?

**பூங் :** என்ன இப்படிக் கேட்கிறீர்கள்? இன்பத்திலும் இன்னலிலும் இணைபங்கு கொள்பவள் இல்லாள் என்று எனக்கு நன்றாய்த் தெரியும். கணவனுக்காக எதையும், எல்லாவற்றையும் தியாகம் செய்த தமிழ்ப் பெண்டிர் மரபில் வந்த தமிழச்சியல்லவா நான் ?

**இள :** இக் கேள்வி விடுத்து உன் உள்ளத்தைப் புண் படுத்திய என்னை மன்னித்துவிடு.

**பூங் :** மன்னிக்கவாவது? அதிருக்கட்டும். சிலை பூர்ணப் பொலிவுடன் விளங்குகின்றது. அரச குமாரியின் அழகு உருவம் அழகாக அமைந்துள்ளது. அசேதனப் பொருளாகிய கல் உயிர் பெற்றுத் திகழ்கிறது. என் மணாளருடைய சாகாக் கலைக்குக் கோயில் கண்டுவிட்டதைப் பார்க்க என் மனம் பெரிதும் மகிழ்கிறது. நாளைக் கழித்து பூர்ணிமை. அன்றுதானே திறப்புவிழா ?

**இள :** ஆம். நாளைக்காலையில் மன்னனுக்குச் சிலை வடித்த செய்தியைக் கூற வேண்டும். வா, போகலாம் !

[இருவரும் போகிறார்கள்]

## காட்சி 5

[காலைநேரம் அரண்மனை. அரசர், அமைச்சர், சிற்பி முதலானோர்]

**இளவழகன் :** அரசே, வணக்கம்.

[வணங்குகிறான்]

**அரசர் :** என்ன, சிலை முடிந்துவிட்டதா?

**இள :** ஆம்.

**அரசர் :** சரி. அமைச்சரே, வாருங்கள், சிலையைப் பார்ப்போம்.

[அனைவரும் போகிறார்கள்]

## காட்சி 6

[காலைநேரம். இளவழகனின் இல்லம். அரசர், அமைச்சர், இளவழகன்]

**அரசர் :** இளவழகன், சிலை அற்புதமாய் அமைந்துள்ளது. இக் கல்லில் இறந்து போன என் மகளை உயிருடனே காண்கிறேன். வாழ்க நீர்! வாழ்க உம் கலை. நீர் அமர கவிஞர்தான். [அமைச்சரை நோக்கி] அமைச்சரே, இன்றே இச் சிலையை இங்கிருந்து எடுத்துச் சென்று நகரின் நாற்சந்தியில் இருத்தித் திரையிட்டு வையுங்கள். நாளை விழாவிற்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் முடிந்து விட்டனவா?

**அமைச்சர் :** ஆம், அரசே.

**அரசர் :** [இளவழகனைப் பார்த்து] சிற்பியாரே, நாங்கள் வருகிறோம். நாளைக் காலை விழாவிற்கு நீரும் நும் மனைவியும் வாருங்கள்.

[அரசர் அமைச்சர் போகின்றனர்]

## காட்சி 7

[இரவு. இளவழகனின் இல்லம். இளவழகன், பூங்குயில்]

**இளவழகன் :** கண்ணே, என் வாழ்வின் லட்சியக் கனவு நனவாகும்நாள் நாளை. நாளை இந்நேரம் நான் "அமர கலைஞன்" என்ற பேர் பெற்றவனாவேன். இப்பேறு எல்லோருக்கும் எளிதிலே கிட்டுவதில்லை. உண்மையிலேயே, நாம் பாக்கியசாலிகள். என்ன, வளர்பிறைச் சந்திரனின் ஒளி மங்குகிறதே. ஓஹோ, கருமேகங்கள் சந்திரனை வளைத்துக்கொண்டன. மின்னல் கண்ணைப் பறிக்கிறதே. மழை வரும் போலிருக்கிறது.

[மழை பெய்கிறது]

**பூங் :** வரும்போலென்ன. மழை கொட்ட ஆரம்பித்துவிட்டதே.

**இள :** சிலை நனைந்துபோயிருக்கும்.

**பூங் :** கற்சிலைதானே. மண்பாவையல்லவே மழையில் கரைந்துவிட.

**இள :** [இடி இடிக்கிறது] அதென்ன கோரமான இடி. ஐயோ, மற்றொன்று. அந்த இடி அரசகுமரியின் சிலையின்மீது விழுந்திருந்தால்.........ஐயையோ, நினைக்க முடியவில்லையே. என் வாழ்வின் வெற்றியான அச்சிலையை விட்டு நான் தனித்திருக்க முடியாது. போகிறேன் என் சிலையிடம்.

[வெளியில் ஓடுகிறான் இளவழகன்]

**பூங் :** இந்நேரத்தில் எங்கே போகிறீர்கள்? இருங்கள். நானும் வருகிறேன். [பூங்குயிலும் அவனைப் பின்தொடர்ந்து ஓடுகிறாள்]

## காட்சி 8

[அதே இரவு. சிலைநிறுத்தப்படும் இடம். இளவழகன் பூங்குயில்]

**இளவழகன் :** [சிலையைத் தழுவிக் கொண்டு] சிலையே, என்கனவே. பூங்குயில், பார். என் கலைக்கோயில் இம்மின்னொளியிலே எவ்வளவு அழகுடன் மிளிர்கிறது.

**பூங்குயில் :** வானம் பயங்கரமாகக் குமுறுகிறதே.

[மீண்டுமொரு இடி அந்த இடத்தில் விழுகிறது]

**இளவழகன், பூங்குயில் :** [இருவரும்] அம்மா!

[இருவரும் இறக்கின்றனர். சிலை இரண்டு படுகிறது]

## காட்சி 9

(மறுநாள் காலை அரண்மனை. அரசர்)

**சேவகன் :** (ஓடி வருகிருன்) மகாராஜா, ஒரு சேதிங்க. நம்ப ராஜகுமாரியின் சிலே இரண்டா உடைஞ்சு கிடக்குங்க. அங்க நம்ப சிற்பி ஐயாவும் அவங்க சம்சாரமும் ஒருத்தரை ஒருவர் கட்டிக்கிட்டுச் செத்து கிடக்காங்க. இப்பத்தான் பார்த்தேனுங்க!

**அரசர் :** சரி; நீ போய் அமைச்சரை வரச்சொல். (சேவகன் போகிருன்)

*[சிறிது* **நேரம் கழித்து** *அமைச்சர் வருகிறர்]*

**அமைச்சர் :** மன்ன, வணக்கம்.

**அரசர் :** அமைச்சரே, செய்தியை அறிந்தீரா? வாரும். போய்ப் பார்க்கலாம் அக்கொடுமையை.

(இருவரும் போகிறர்கள்)

**காட்சி 10**

*(காலே நேரம். நகரில் சிலே நிறுத்தப் பட்ட இடம். அரசர், அமைச்சர் முதலியவர்)*

**அரசன்:** ஆ, என்ன கோரக்காட்சி! என் மகளுக்குச் சிலேநிர்மாணிப்பது ஈசனுக்குப் பிடிக்கவில்லே போலும். எழில் ததும்பும் அச் சிலே இரண்டாக விண்டுவிட்டதே. இன்று நாம் ஒரு அமர கலேஞனே இழந்து விட்டோம். நந்தமிழ்நாடு தன் உத்தமப் பெண்ணெருத்தியை இழந்துவிட்டது. கலேக்காக உயிர்கொடுத்த கலேஞன், கணவனுடன் இறந்த காரிகை, இவர்களின் புகழ் என்றும் நிலேக்க, அவர்களுடைய சிலே யொன்றை நிர்மாணித்து இதே இடத்தில் நிறுத்தவேண்டும். [அமைச்சரை நோக்கி] அமைச்சரே, விரைவில் ஆவன செய்யுங்கள்.

*[எல்லோரும் போகிறர்கள்]*

**சுந்தரவதனம் :** இதுதான் அச் சிலேயைப் பற்றிய கதை. "அடைந்த புகழை" அனுபவிக்க முடியவில்லே அவர்களால். காதல் வாழ்க! கலே வளர்க!

---

# போதுமோ இந்தக் கௌரவம்

வாசவன்





"என்னுடைய சுதந்திரத்தையும், இஷ்டத்தையும் கட்டுப்படுத்துறதுக்கு நீங்க யாரு?"

"உன் புருஷன்! நீ அநாவசியமா வெளியே போறதைத் தடுக்கறதுக்கு எனக்குப் பரிபூரண உரிமை இருக்கு" என்று கூறிவிட்டு, கண்கள் நெருப்பை உமிழ, பற்களை 'நற, நற' வென்று கடித்துக் கொண்டு கூறினான் சீனு.

இடது முழங்கையில் 'பிளாஸ்டிக்' பை'யைத் தொங்கப் போட்டவாறு அவனை எரித்து விடுவதைப் போலப், பார்த்தாள் லல்லி. ('லலிதா' என்ற அவளது பெயர் அநாகரிகமாக இருக்கிறதென்று மாதர் சபையினர் வைத்த பெயர் அது!)

"லல்லு! உன்னுடைய நடத்தை வரவர அதிகமாய் போறது. வேளை கெட்ட வேளையிலே தனியா நீ கிளம்பறது எனக்குக் கட்டோடு பிடிக்கல்லே. ஆமா, மறுபடியும் சொல்லிட்டேன்!" என்று கூறி, பீறிட்டு எழுந்த ஆத்திரத்தை மனத்துக்குள்ளேயே கரைத்துக் கொண்டான்.

"வேளைகளை எல்லாம் எனக்குத் தெரியும்; உங்க வேலையைப் பார்த்துண்டு நீங்க பேசாமே இருக்கணும். என் அப்பா ஒன்றும் வேலை தரல்லேயோ!" என்று அடக்கமற்ற முறையில் ஏளனமாகக் கூறினாள் லல்லி.

அவன் மனத்திலே தேள் கொட்டுவது போன்று திடீரென்று ஒரு வேதனை. உடம்பு ஒரு தடவை குலுங்கி அடங்கியது.

"எனக்கு உங்க அப்பா என்ன வேலை தர்றது?" கோபத்தின் எல்லையிலே வார்த்தைகள் உஷ்ணமாகக் கிளம்பின.

"காலையிலேயே அப்பா சொல்லிண்டிருந்தாரே. நீங்க வேலங்குடிக்கும் போகணும்னுட்டு! தென்னந்தோப்புக் குத்தகையிலே பாக்கி இருக்கிற ரூபாயை இன்னிக்குத் தர்றேன்னுட்டு ராவுத்தர் சொன்னரே, அதை வாங்கிண்டு வரப் போகல்லே?" என்று தன்னுடைய குற்றத்தை மறைத்து, அவன் செய்யாது விட்டுப் போயிருக்கும் காரியத்திலே குற்றத்தைப் பலமாக எழுப்பிக் காண்பித்தாள்.

"நான் உங்காத்து வேலைக்காரனில்லே. நான் வேலங்குடிக்குப் போகவும் முடியாது. நான் சொன்னது உன் காதிலே விழல்லே?"

"நீங்க சொல்றதைக் கேட்டா எங்க லேடிஸ் கிளப் செகரடரியும் காதிலே விழுத்தாட்டிக்க மாட்டா. மேலும் நான் உங்களுக்கு ஒண்ணு சொல்றேன். புருஷன், என்ற பெயரை வச்சிண்டு அதிகாரம் பண்றதை 'நாங்க' கட்டுப்பாடா வெறுக்கிறோம். ஒரு புருஷனும் மனைவியும் வாழ்க்கையிலே சம பங்காளிகள். அதிகமான உரிமை கணவனுக்குத்தான்னு நெனச்சா, பலவீனம் அங்கேதான் இருக்கு."

"உங்க உரிமையிலே இடிதான் விழணும். உன் மாதிரி பத்திரகாளிகள்ளாம் பேசிண்டு போக வேண்டியதுதான். கண்

ணகி மாதிரி ஒரு அழியாத ஸ்தானத்தை உங்களாலே பெறமுடியாது."

"உங்க கண்ணகிதான் என்ன வாழ்ந்தா? ஒரு ஊரையே அழிச்சா. ரத்தத்துக்கு ரத்தம் கேட்டா. பத்திரகாளியா அலைஞ்சு நரபலி வாங்கிண்டா!"

"உனக்கு அவளைப்பத்தி எல்லாம் பேச யோக்கியதையே கிடையாது. அதெல்லாம் இருக்கட்டும்; நீ இப்போ வெளியே போகக் கூடாது."

"போய்த்தான் தீருவேன்" என்று முறித்துக்கொண்டு பேசினாள்.

"நீ போனயானா காலை முறிச்சிடுவேன். நானும் பார்த்துண்டேவர்றேன்; நான் ஒருத்தன் இந்த வீட்டிலே இருக்கேன்னு நீ நினைக்கறதே இல்லை." என்று சொல்லிவிட்டு, ஜிப்பாவைச் கொசுவி முஷ்டியில் ஏற்றிக்கொண்டு அவளிடம் பாய்வதற்குத் தயாராக இருப்பவன்போல நின்றான்.

நிலைமை அவ்வளவு தூரம் எதிர்பாராத லல்லி அவனின் செய்கையைக் கண்டு அசந்துபோய் விட்டாள். பயம் அவள் நெஞ்சை இறுக்கிப் பிடிக்க அப்பாவின் உதவியை எதிர்பார்ப்பது போல மாடியை நோக்கியவாறு பலமாகச் சப்தமிட்டுக் கூறினாள். "என் காலை முறிங்கோ, நன்னா முறிங்கோ. உங்களுடைய நிலைமையை இவ்வளவு தூரம் முன்னேற்றினேனே, அதுக்கு எனக்கு இதுவும் வேணும், இன்னமும் வேணும்......"

அவள் எதிர்பார்த்தது வீண்போகவில்லை. மாடியிலிருந்து திடு திடுவென்று ஓடிவந்த லல்லியின் அப்பா பசுபதி அய்யர், மாப்பிள்ளையின் ருத்ர அவதாரத்தையும், செல்வக் குமாரியின் நனைந்த கண்களையும் கண்டவுடன், மூக்கிலே வீற்றிருந்த தங்கப் பிரேம் போட்ட கண்ணாடியை எடுத்து ஆட்டியவாறு கூறினார்: "மாப்பிள்ளை! வர வர உங்க நாடகம் சகிக்க முடியவில்லை. அடைகாக்கிற கோழி மாதிரி ஆத்திலேயே இருந்தா இப்படித்தான், வேலங்குடி ராவுத்தரண்டை போயிட்டு வர்றதுக்கென்ன?"

அவருடைய அதிகாரத்திலே பிறந்த ஆணவம் எதிரொலித்துக் கிளம்பிய உத்தரவு—சீனுவின் உறங்கிக்கிடந்த உணர்வைத் தட்டிவிட்டுக் கெக்கலித்தன. அதுவரை மாமனாரைத் தலை நிமிர்ந்து பார்த்திராத அவன், முற்றிலும் வேறான கதியிலே அவரைப் பார்த்தான். அவர் கண்ணாடியை வேகமாகச் சுழற்றிக் கொண்டிருந்தார்,

சீனு வேண்டா வெறுப்பாக எங்கேயோ பார்த்துக்கொண்டு பதில் சொன்னான்; "எனக்கு மத்தியானத்திலேயிருந்து தலைவலி. அதனாலேதான் வேலங்குடிக்குப் போகல்லே!"

"தலைவலியின்னா பேசாமே படுத்துக்கிறது தானே? அதை விட்டு விட்டு என்ன வம்பு?"

"இப்போ வம்புபிடிக்கிறதெல்லாம் உங்க பொண்ணுதான். அதை அவளிடம் சொல்லுங்கோ." மனத்திற்குள் மூட்டம் போட்டிருந்ததை மழையாகக் கொட்டிக் காட்டிவிட்டான்.

அவள் அலையாகச் சீறி படபடத்தாள், "என்னோடே இஷ்டம்போலே நடந்துக்கறத்துக்கு இவரென்னப்பா அதிகாரம் பண்றது? என் இஷ்டம்போலே வெளியேபோறத்துக்கும் வர்றதுக்கும் எனக்கு உரிமை இல்லையா?"

"அப்படியா சொன்னேள்?" என்று அகங்காரமாகக் கேட்டார் சீனுவிடம் பசுபதி ஐயர்.

"ஆமா. அது என் உரிமை!" என்று வார்த்தைகள் சற்று அழுத்தமாகவே விழுந்தன சீனுவிடமிருந்து.

"மாப்பிள்ளை! அவ செல்லமாக வளந்தவ. என் கண் மாதிரி அவ!......"

"உங்க கண்ணைப் பிடுங்கி எதுக்காக என்னிடம் கொடுக்கணும்? நீங்களே அதை வச்சுக்கறதுதானே?"

பசுபதி ஐயர் அவமானம் தாங்க முடியாமல் மேலும் கீழும் பார்த்தார். வார்த்தைகள் தொண்டைக்குள்ளேயே எல்கை கட்டி முறிந்து விழுந்தன. பின்பு ஆத்திரம் எழுந்த வேகத்தில் வார்த்தைகளைப் பலமாக வெளியே பிடித்துத் தள்ளியது? "எதற்குத் தெரியுமா? உங்களோடே ஏழ்மைத் தனத்தைப் போக்கறத்துக்கு அவளை உங்களுக்குக் கொடுத்தேன். அதை அனுபவிக்க உங்களுக்குச் சக்தி இல்லை."

"நான் ஏழையாயிருந்தாலும் கோழை இல்லைங்கறதைப் பெருமையோடே சொல்லிக்கறேன். அவ இப்போ வெளியே எங்கேயும் போகப்படாது."

"அவ அப்பிடித்தான் போவா."

"எங்கே போறதைப் பார்க்கிறேன்?"

"பார்க்கலாம், பார்க்கலாம்! லல்லு! நீ வெளியேதானே போகணும். நீ போ!" என்று அலறினார் பசுபதி ஐயர், லலிதாவை நோக்கி.

"இப்படி இடம் கொடுக்கிறவர் ஒருத்தனுக்குக் கல்யாணம் பண்ணிக்கொடுத்திருக்க

வேண்டியதில்லே. பேசாமே கோயிலுக்கே பொட்டுக் கட்டி விட்டிருக்கலாம்!"

"மாப்பிள்ளை! அதிகமாப் போறேள்!"

"உங்க பொண்ணுடைய நடத்தையை விடவா?"

"எங்க குலத்தையே அவமதிச்சுப் பேசிட்டேள்!"

"இன்னம் அவமானப் படறத்துக்குத்தான் உங்க பொண்ணுக்கு அவ்வளவு இடம் கொடுக்கறேள்!"

"அது என் இஷ்டம்!"

"அவளை வாழ விடாமே செய்யறதும் உங்க இஷ்டம்தான்னு நான் குறுக்கே வரல்லே."

"மரியாதையாப் பேசணும் மாப்பிள்ளை!"

"நீங்க மரியாதையைக் கத்துக்கணும்!"

"என் வீட்டிலே அடக்கமா யிருந்தா இருக்கணும்...!"

"இருக்க வேண்டாம்கற முடிவுக்கு நான் வந்து எவ்வளவோ நாளாறது" என்று கூறிய வாறு, 'விர்'ரென்று வெளியேறினான் சீனு.

சிந்தனை மேலெழும்பிச் சீறும்போதெல்லாம், அதற்கு மாற்றுத் தேடும் முறையில் குளத்தங்கரை அரசமரத்தடியில் உட்கார்ந்து முடிவு காணுவது அவனது ஒரு வருடப் பழக்கம். அந்த வழக்கத்திற்கு ஈடு கட்டும் முறையில், வீட்டைவிட்டுக் கிளம்பிய சீனு அரச மரத்தடியில் அமர்ந்தான்.

அவனுக்குக் கல்யாணம் ஆன ஒரு வருட இடை வெளியில் எத்தனை விதமான அனுபவங்கள்?.........

பசுபதி ஐயர் சொன்ன வார்த்தைகள் 'பளீர் பளீர்' என்று அவன் மனத்திலே சாட்டையைச் சொடுக்கின. "எதற்குத் தெரியுமா? உங்களோடே ஏழ்மைத் தனத்தைப் போக்கறதுக்கு அவளை உங்களுக்குக் கொடுத்தேன்!"

அந்த வார்த்தைகளில் எவ்வளவு திமிர் பரவிக் கிடக்கிறது? அவன் ஏழை, தான் பணக்காரர் என்பதை ஒவ்வொரு க்ஷணமும் சொல்லி அவனை எப்படி எல்லாம் அடிமையாக்கி விட்டார்?

திமிறி எழுகின்ற தன்மான உணர்ச்சியை அடக்க முயல்வதுபோல வான வெளியை நோக்கினான் அவன். மேகக் கூட்டங்களெல்லாம் சுயேச்சையாய் ஓடிக்கொண்டிருந்தன.

கல்யாணத்தைப் பற்றிக் கண்ட அவன் கனவிலே எந்த விதத்திலெல்லாம் இன்பம் விரவிக் கிடந்தது?.........

"மனைவி மெதுவாக வருவாள். அவன் படுக்கையில் படுத்திருப்பான். அவள் கைவளை குலுங்கும். அந்த ஒலி அவன் மனத்திலே சுருதியைக் கிளப்பிவிடும். அவன் எழுந்திருப்பான். அவன் அவள் கன்னத்தைக் கிள்ளுவான். அவள் அவன் கையைப் பறிப்பாள். அந்த ஸ்பரிச உணர்ச்சியிலே சொர்க்கத்தைக் காண்பான்!......"

கனவு அளவிலே கிடைத்த அந்த இன்பத்தை, அவன் இந்த ஒரு வருட வாழ்க்கையிலே அனுபவித்திருக்கிறானா? அவள் கை வளையல் குலுங்கக் கேட்டிருக்கிறானா? சொர்க்கத்தைக் கண்டிருக்கிறானா?

அவன் லலிதாவின் கை வளையல்கள் எழுப்பும் நாதத்தை வெளியிட்டுச் சொன்னால்கூட அவள் என்ன செய்துவிட்டாள்? மெல்லச் சிரிப்பாள். அதுவும் கேலியாக.

"எல்லாத்துக்கும் நேரம் காலம் வேண்டாமா? எங்க லேடிஸ் கிளப்பிலே இன்னிக்கு ஒரு நாடகத்துக்கு ஒத்திகை நடத்தவேண்டி இருக்கு. நான் வர்றேன்" என்று கூறியவாறு, பையிலிருக்கும் லிப்ஸ்டிக்கை எடுத்து அதரங்களில் குழைத்து (!) விட்டு, இரவு எட்டு மணி வேளையிலே கிளம்பிவிடுவாள்!

எல்லாவற்றிற்கும் நேரம் காலத்தைக் கற்பிக்கும் அவள் மாத்திரம் அப்படி நடந்து கொண்டாளா? இரவு எட்டு மணிக்குத் தன்னந்தனியவளாக லேடிஸ் கிளப்பிற்குப் போகிறாள்!

அவளின் அதர மலர்ச்சியை அன்பான வார்த்தைகளை எதிர்பார்த்த அவனின் இதயம் குவிந்துபோகும், சந்திரனைக் கண்ட தாமரையைப்போலே!

மற்றுமொரு நாள்: சீனு சாப்பிட்டுக்கொண்டிருந்தான். லலிதா அவன் தட்டத்தில் குழம்பு வார்த்துக்கொண்டிருந்தாள்.

அப்பொழுது "லல்லி" என்று பூனையினும் இனிய கீச்சுக்குரல் ஒன்று எழுந்தது. அவ்வளவுதான். குழம்புக் கலத்தைக் கீழே வைத்தாள். "யார், அது! மிஸஸ் விக்டர் ராஜா! கமிங்" என்று சொல்லிக்கொண்டு பறந்து ஓடினாள் லலிதா ஹால் பக்கம்.

சீனு ரஸத்துக்காகக் காத்திருந்தான், லலிதா வரவில்லை. ஸ்ரீமதி விக்டர் ராஜாவும் அவளும் உலக மாதர் மகாநாட்டைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். பத்து நிமிஷங்கள் ஆயின. அப்பொழுது அந்த மகாநாட்டுக்கு இந்தியாவி

விருந்து பிரதிநிதியாகப் போகிறவர்களைப்பற்றிய பிரச்னை அடிபட்டுக்கொண்டிருந்தது!

சீனுவுக்கு அழவேண்டும் என்ற ஒரு பலவீன உணர்ச்சி ஏற்பட்டது. கண்களில் துளிர்த்து நின்ற நீர்த்துளிகளைத் துடைத்துக்கொண்டு எழுந்துவிட்டான்.

கொஞ்சநேரம் சென்று லலிதா வந்தாள், சீனுவைப்பற்றிக் கவலைப்பட்டவளாகவே தெரியவில்லை. 'டிரஸ்' செய்துகொண்டு அந்த ஸ்ரீமதியுடன் போய்விட்டாள்!

அப்பொழுதெல்லாம் அவன் தன் மனத்தினுள்ளதைக் கொட்டிக்காட்டிவிடவேண்டுமென்று துடியாய்த் துடிப்பான். ஆனால் அந்தத் துடிப்பிலே வலுவிருக்காது; தெம்பு இருக்காது. கரைக்குள்ளேயே அடங்கி ஓயும் அலையைப்போல அவனும் அடங்கிவிடுவான்.

அதெல்லாம் இருக்கட்டும். அப்படி அவள் அவனிடம் இருந்து ஒதுங்கி வாழ அவன் என்ன அழகில்லாதவனா, படிப்பில்லாதவனா? எல்லாம் நிறைந்தவன்தான். சொல்லப்போனால் பசுபதி அய்யரிடம், "சீனுவைத்தான் கல்யாணம் செய்துகொள்வேன்" என்று ஒற்றைக் காலில் நின்று காரியத்தைச் சாதித்தவளும் அவள்தான்.

"கண் நிறைந்த கணவன் என்று தேர்ந்தெடுக்கப்பட்ட அவன் ஏன் இப்படி ஒதுக்கப்படுகிறான்!" அவனே தனக்குள் இப்படி எத்தனையோ தடவைகள் கேட்டுக்கொண்டுமிருக்கிறான். ஒவ்வொரு சமயத்திலும் ஒவ்வொரு தினுசான விடை; அனுபவம்.

குறுக்கு வழியிலே விடை கண்டுபிடிப்பது சுலபம். அவன் ஏழை! அவர்கள் வீட்டிலே அவன் வாழ்கிறான். 'மாப்பிள்ளை' என்ற முறையில் இல்லாது ஒரு வேலைக்காரனாகவும் இருக்கிறான்.

ஏழை! அவன் ஏழைதான். ஆனால் சாமான்யமாக அவர்கள் வீட்டில் வந்திருக்க அவன் உடன்பட்டானா? கல்யாணம் ஆனதிற்கப்புறம் பசுபதி அய்யர் எத்தனை தடவை காலில் விளக்கெண்ணெயைப் போட்டுக்கொண்டு அவன் வீட்டிற்கு அலைந்திருக்கிறார்? "தனக்கு இருப்பது லலிதா ஒருத்தியும், அவனும்தான்" என்பதைக் கூறி, அவ்வளவு பெரிய ஆஸ்தியையும் பரிபாலிக்க அவன் தேவை என்பதை உருவேற்றிக் காரியம் சாதிக்க எவ்வளவு பிரயாசை எடுத்துக்கொண்டார்?

அவர் மட்டில் காரியம் நிறைவேறியது. ஆனால் சீனுவின் வயதான கிழவித் தாயார் கோமதியின் எண்ணம் நிறைவேறியதா?

"சீனு! இன்னிக்கு உன் மாமனார் அவர் பெண்ணையும், பணத்தையும் காட்டி இழுக்கிறார். உன்னிடத்திலே இன்னிக்குக் காட்டற மரியாதையும், பிரியமும் கடைசி வரை இருக்காதப்பா! அவா பணக்காரா. எதுவும் செய்ய முடியும். எல்லாமே சுமுகமா வந்துடுத்துன்னு வச்சுக்கோ, அப்பொழுதும் ஒரு சொல் கடன் இருக்கிறது. 'மாமனாராத்திலே போயிருக்கறதுமாதிரி கேவலம் வேறொண்ணுமில்லை' என்று ஒரு வாழ்க்கை வேதாந்தத்தை மிகச் சுலபமாக உபதேசிக்கத்தான் செய்தாள்.

அவன் எப்பொழுதுமே சிறிது ஆடம்பரத்திற்கு ஆசைப்பட்டவன். மாமனார் வீட்டிலே இருக்கும் வசதிகளைக் கொண்டு ஆடம்பரமாக வாழலாம் என்ற எண்ணத்தில் அவளின் வார்த்தைகளைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை.

"நான் எங்கே இருந்தா உனக்கென்னம்மா! பின்னாலேயும் அவரோடே சொத்து நமக்குத்தான் சேரப்போறது. உனக்கென்ன வேணும்? மாதம் பதினைந்து ரூபாய் அனுப்பிச்சுடுறேன்" என்று சொன்னான் அவன்.

அந்தக் கிழ உள்ளம் தவியாய்த் தவித்தது. பசுபதி ஐயர் முறைகளையாவது விடாது செய்தாரா? லலிதாவை அவர்கள் வீட்டுக்கு அழைத்துக்கொண்டே வரவில்லை. அதற்குப் பதிலாகச் சீனுவை அழைத்துக்கொண்டு போய்விட்டார்.

எல்லாவற்றையும் மனத்திற்குள்ளேயே அடக்கிக்கொண்டிருந்த கோமதி, மாமனார் வீட்டுக்குப் போவதற்காக அவர்கள் வீட்டு வண்டியில் சீனு ஏறி இருக்கும்போது, கண்ணீர் முட்டச் சொன்னாள்; "சீனு! நம்ம குடும்பத்திலே இதுவரை யாரும் மாமனார் அகத்தை நம்பியிருக்கவில்லை. என்னா, அவாள்ளாம் இங்கிலீஷ் படிக்காதவா. நீ இங்கிலீஷ் படிச்சவன்; நாகரிகம் தெரிஞ்சவன். நம்ம குடும்பத்திலே இல்லாத வழக்கத்தை உண்டாக்கிட்டே. என்னமோப்பா, குடும்ப கௌரவம் போகாமே பாத்துக்கோ!"

அவன் உதடுகளுக்குள்ளேயே சிரித்துக் கொண்டான். சலங்கையொலி கிளுகிளுக்க வண்டி சிட்டாய்ப் பறந்தது.

அதை மறுபடியும் நினைவில் கொண்டு நிறுத்திய சீனு, வாழ்க்கையை நன்றாக அனுபவித்துவிட்ட கோமதியின் வார்த்தைகளின் பரிபூரணத்வத்தை உணர்ந்துவிட்டான்.

அவள் சொன்னதைப்போலவே பணத்தையும், பெண்ணையும் காட்டி அழைத்த பசுபதி அய்யர், அவனிடம் எத்தனை காலம் மரியாதை

காட்டினார்? "மாப்பிள்ளை, மாப்பிள்ளை" என்று வளைய வளைய வந்தவர், சிறிது சிறிதாக அலட்சியம் காட்டத் தொடங்கினார். அவனிடம் வேலைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக ஏவத் தொடங்கினார். அந்த ஆறுமாதகாலமாக அவன்தான் வேலைகள் எல்லாம் செய்யவேண்டும்.

எல்லாவற்றையும் மறந்து செய்கிறானே, அதற்குப்பிரதிபலனாகவாவது பசுபதி அய்யரின் அன்பும், லலிதாவின் புன்சிரிப்பும் கிடைத்ததா? இல்லை, இல்லை! இல்லவே இல்லை! அவன் ஒரு கருவியாக இயங்கவேண்டுமென்று ஒரே எண்ணம்தான் அவர்களுக்கு. இயங்கத்தான் செய்தான். திடீரென்று ஏற்பட்ட விழிப்பிலே கருவி இயக்கத்தை அவன் விரும்பவில்லை!



எத்தனையோ நாட்கள் இந்த எண்ணம் புரை யோடி இருந்தும்கூட இன்றுதான் லலிதா விடம் அதையெல்லாம் கொட்டினான். ஆனால் அதனால் விளைந்த புயல்?......

அந்தப் புயலுக்குள்ளும் அமைதியுடன் குளு மையாகப் பார்க்கும் கோமதியின் தாய்மை உணர்ச்சி!...... அங்கே கசப்பில்லை; வெறுப் பில்லை; அதிகாரம் இல்லை!

அன்று அவன் சொன்னதைக் கேட்டிருந் தால், அவளின் கண்ணீருக்கு மதிப்புக் கொடுத் திருந்தால் இந்த விளைவுகளெல்லாம் நேர்ந் திருக்குமா?

நினைவு அலைகள் அளவுக்குமீறி வாரிஅடிக்கச் சிறு குழந்தையைப்போலக் கேவிக் கேவி அழு தான். பின்பு எதையோ தீர்மானித்துக்கொண் டவனாய்,கண்ணீரைத் துடைத்துக்கொண்டான், உள்ளத்திலே சூடு கண்டுவிட்டது. அவர்களு டைய உறவையே வெட்டிக்கொண்டு தன் தாயுடன் இருந்துவிடுவதென்று தீர்மானித்துக் கொண்டான். அவனுக்கென்று இருந்த ஒரே ஒரு ட்ரங்குப் பெட்டியை எடுத்துக்கொண்டு கிளம்பிவிடவேண்டியதென்ற தீர்மானத்துடன் எழுந்து, மாமனாரின் வீடுநோக்கி விரைந்தான்.

ஒன்றையுமே பார்க்காதவனாய் நேரே வீட் டிற்குள் சென்று, கொடியில் கிடந்த துணி மணிகளைத் தன் பெட்டியில் எடுத்துவைத்துக் கொண்டிருந்தான். அதே சமயத்தில் "என்னை மன்னிக்க மாட்டேளா?" என்ற ஒரு சப்தத்தை எழுப்பிக்கொண்டு அவன் காலடியில் வந்து வீழ்ந்தாள் லலிதா.

லலிதாவா அப்படிக் கேட்கிறாள்? ஒரு க்ஷணத்தில் ஆயிரமாயிரம் கொந்தளிப்புகள்! வெறிச்சிட்டோட அவளைக் குனிந்து நோக் கினான்.

அவள் மெதுவாக எழுந்து உட்கார்ந்து கொண்டு, "உங்களை ரொம்ப அவமதிச்சுட் டேன். காரணம், என்னை நானே புரிஞ் சக்கலே" என்றாள்.

அவன் அவளைப் புன்சிரிப்புடன் நோக்கி னான். அதிலே அசடுவழியவில்லை. தீர்க்க பாவம் நிறைந்திருந்தது.

"உங்களை அப்பா பேசறப்போ, நான் உணர்ச்சியில்லாமே அதை ரஸித்தேன். நீங்க வெளியே போனதும், எங்கள் கிளப்புக்காக ஒரு இருநூறு ரூபா கேட்டேன். அவ்வளவு தான்! 'உங்களுக்கெல்லாம் பணம் செல வழிக்கறதுக்கு என்னாத்திலே கொட்டிக்கிடக் கல்லே. ஊரார் பணமானாலும் அளந்து செல வழிக்கணும்'னு சொன்னார். நான் அப்பா வையே சதம்னு நெனச்சு, உங்களை அவமதிச் சேன். ஆனா அவர், அவரிடமிருந்து என்னைப் பிரிச்சு வைத்துப் பேசிட்டார்......"

உணர்ச்சி மேலீட்டால் பேசுவதற்குத் திணறினாள். சீனுவும் அவளின் மாற்றத் தைக் கண்டு திணறித்தான் போனான்,

"நம்மாத்திலே இருந்திருந்தா அப்பா அப்படிச் சொல்வாரா? எல்லாம் இருக்கற இடத்திலே இருந்தாத்தான் மதிப்பு. மதியா தார் வீட்டிலே இனி ஒரு க்ஷணம்கூடத் தங்கக் கூடாது. புறப்படுங்கோ நம்மாத்துக்கு!" என்று பரபரப்புடன் சொன்னாள்.

"அங்கே ரேடியோ இருக்காது; லேடிஸ் கிளப் இருக்காது........."

"இந்த அசட்டுக் கௌரவத்துக்கெல்லாம் ஆசைப்பட்டு என் ஒரு வருஷ வாழ்க்கையை வீணாக்கியது போதாதா?" என்று கூறும் போது அவள் தொண்டை கரகரத்தது.

இந்த ஒரு வருஷத்திற்கப்புறம் முதல் முறை யாக மனம் நிறையச் சிரித்தான் சீனு. வாழ்க் கையின் பரிபூரண நிழல் அதில் விழுந்திருந் தது.

அன்றுதான் அவர்கள் வாழத்தெரிந்தவர் களானார்கள்!

# விமோசனம்

## மோஹனாம்பாள் ரங்கநாதன்

ஸ்திரீகளுக்கு நகை என்றால் உயிர் என் பார்களே. இதைவிட எப்படித் தான் புருஷனுக்கு ஒருத்தி சொல்லக் கூடும்? பஞ்சபூத சாட்சியாக நல்ல மன சோடுதான் நான் சொன்னேன். வேளை விஷகடி வேளையாக இருந்துவிட்டது.

"கழுத்துச் சங்கிலி எங்கே காணோம்? திருகாணி கழன்றுவிட்டதா? கைவளை யும குறைகிறதே!" என்றார்கள், மறு நாளே பலபேர். முக்கியமாக, யமுனாவின் நச்சரிப்பைப் பொறுக்கமுடியவில்லை.

"அகத்துக்காரருக்குக் கழற்றிக் கொடுத்தாயா? அவருக்கென்ன அப்படி முடை?... அவர் சினேகிதருக்கென்று சொன்னார்? சொல்வார், சொல்வார்! நீயும்தான் வெளுத்ததெல்லாம் பால் என்று நம்புகிறாய். புருஷர்கள் ஜாலக்கு உனக்கு எப்படித் தெரியும்? நீ சாது. தலையில் அடித்துக் கையில் கொடுத்தால் வாங்கிக்கொண்டுவிடுவாய். அரை மன சோடு வாங்கிக்கொண்டு போவதாகத் தானே நடித்தார்? அவ்வளவும் வேஷம்! புருஷர்கள் செய்யும் சூது எல்லாம் என் னைக் கேள்; நான் சொல்கிறேன். நன்றாக நம்பினாய் போயும் போயும்! நேற்றிராத் திரி எத்தனை நேரத்திற்கு வீட்டிற்கு வந் தார்? முந்தாநாள்? பார்த்தாயா! எனக் குத் தெரியுமே! இனிமேல் உன் நகைகளை நீ திரும்பப் பார்த்ததுபோலத்தான்! போன நகையோடு போனால் சரி. உன் அகத்துக்காரரையும் கூட அல்லவா கை விட்டுவிட்டாய்! இனிமேல் நான் சொல்கி றேனே என்று வேண்டுமானால் பார். வீட் டிற்கு வராமலே அவராக இரண்டொரு நாள் தங்கிவிட்டாலும்கூட எனக்கு ஆச்ச ரியமாக இருக்காது. நீ என்னத்தைக் கண்டாய்? போனது போகட்டும். அதைப்பற்றி அவரைப்போய்க் கேட் காதே. கோபத்தில் ஏதேனும் செய்தா லும் செய்வார். பாக்கியுள்ள நகையாவது பத்திரமாக இருக்கட்டும். கையிலுள்ளது எல்லாம் கொடுத்துவிட்டால், பிற்பாடு சந்தியில் நிற்கவேண்டியதுதான். உன் அகத்துக்காரர் நல்லமாதிரிதான். யார் 'இல்லை' என்கிறார்கள்? ஆனால் எனக் குத் தெரியும் அவர் கூட்டாளிகள் யார் என்று! ஸ்திரீகள் கெடுவது சபலத் தாலே. புருஷர்கள் கெடுவது சகவாசத் தாலே. எல்லாம் சகவாசதோஷம் அம்மா! நடந்தது நடந்துவிட்டது. நீ தைரியமா யிரு. உன்னைப் பார்த்து 'ஐயோ, பாவம்!' என்று நினைப்பதைத் தவிர நான் வேறே என்ன செய்யமுடியும்?"

எனக்கு நகை போனதைப்பற்றிக் கவலையேயில்லை. இதுமாதிரி விஷயங் களில் அவர் என்னிடம் உண்மையைச் சொன்னால் என்ன? ஆனால், இதில் உண் மையை எப்படித் தம் சொந்த மனைவியி டமே ஒருவர் சொல்லிக்கொள்ளக் கூடும் என்றும் தோன்றியது. அவராக வாய் திறந்து தாம் கெட்ட வழிகளில் பிரவேசித் திருப்பதை ஒப்புக்கொண்டாலொழிய நாம் காரியமில்லாமல் அவரோடு பேசுவ தில்லையென்று தீர்மானம் செய்துகொண் டேன். இனி முன்போல் வலிய அவரோடு குலாவுவது எனக்கு மரியாதை ஆகுமா?

என் மனசை, ஆனால், அடக்குவது லேசில் முடியவில்லை. சோர்ந்து, களைத்துப் பாதி ராத்திரியில் அவர் வரும்போது, என்னையும் மீறி ஒவ்வொருதரம் அவர்மீது எனக்கு அனுதாபம் பிறக்கும். இருந்தா லும் என் மனசை நான் கல்லாக்கிக்கொண் டேன். எங்கிருந்தோ அதற்கு வேண்டிய வலுவும் எனக்கு வந்துசேர்ந்தது.

என் நடத்தையில் உண்டான மாறுதலை அவர் கவனிக்காமல் இருப்பாரா? "சரி, முகத்தைத் தூக்கிவைத்துக்கொள்ள ஆரம்பித்துவிட்டாயா? ஸ்திரீகள் சொல்

வதை நம்பி,—அப்பா ஒரு காரியமும் செய்யக்கூடாது'' என்றார்.

சாதாரணப் பேச்சை அவரும் நிறுத்திக் கொண்டுவிட்டார். அறிமுகம் ஆகாத அன்னியர்கள்போல் வீட்டிற்குள் பழக ஆரம்பித்தோம். ஒவ்வொரு சமயம் இந்த நிலைமை என் நெஞ்சை அறுக்கத்தான் செய்தது. இருந்தாலும், இனிப் பின்வாங்குவதா? ஸ்திரீக்கு இந்த விஷயத்தில் கூட உறுதியில்லை யென்றால் இன்னும் பழிப்புக்கு இடம் ஆகுமே. ஆகவே என் மனசிலிருந்த வேதனையை அமுக்கிவந்தேன்.

நாலைந்து மாசம் ஆவதற்குள் ஒரு நெருக்கடி வந்தது. அதுவும் யமுனா சொல்லாவிட்டால் எனக்கு முதலில் தெரிந்திருக்காது வீட்டைவிட்டு நகராமலே அவளுக்கு எப்படியோ எல்லா விஷயமும் தெரிகிறது. "உன் அகத்துக்காரருக்கு வேலை போய்விட்டதாமேடி! ஐயோ, பாவமே! இப்படி எதாவது நடக்கும் என்று முன்னாடியே தெரியும் எனக்கு. வந்தது வந்து விட்டது. எதையும் அனுபவித்துத்தானே தீர்க்கவேணும்!'' என்றாள்.

மாசம் பிறந்து நாலு தேதி ஆகியும் வீட்டுச் செலவிற்கு அவர் என் கையில் பணம் கொடுக்காத காரணம் அப்போதுதான் விளங்கிற்று. யமுனாவிடமே இன்னொரு ஜதை வளையலைக் கழற்றிக் கொடுத்தேன்; அறுபது ரூபாய் வாங்கி வீட்டுச் செலவிற்கு வைத்துக்கொண்டேன். செட்டாக இருந்தேன். அவரும் இந்த விஷயத்தை ஊகித்துக் கிரகித்துக் கொண்டதாகத் தெரிந்தது. அவராக ஒன்றும் பேசவில்லையல்லவா? நாமும் ஒன்றும் சொல்ல வேண்டாம், நடக்கிற மட்டும் இப்படியே நடக்கட்டும், என்று இருந்துவிட்டேன்.

அந்த மாச முடிவிற்குள் அவரிடம் இன்னொரு மாறுதல் தென்பட்டது. சாதாரண உடையோடு முன்பு ஆபீசுக்குப் போய்க் கொண்டிருந்தவர் இப்போது எந்நேரம் பார்த்தாலும் நிஜாரும் தொப்பியுமாகக் காட்சியளித்தார். வீட்டிலே முன்பு தங்கிய நேரம் கூட இப்போது தரித்து நிற்பதில்லை.

யமுனா ஒருநாள் ஓடி வந்தாள். பத்து நாள் அதற்குமுன் அவள் ஊரில் இல்லை. "ரொம்ப சந்தோஷம், அம்மா! என் கவலை விட்டது. இந்த ஊர்ப் பெரிய மனுஷ்யர்கள் எல்லாம் சேர்ந்து பாங்க் ஒன்று புதிதாக ஏற்படுத்தி யிருக்கிறார்களாம். உன் அகத்துக்காரர்தான் அதில் முக்கிய நிர்வாகஸ்தராமே! ஏகப்பட்ட சம்பளமாம்! வருஷத்தில் இத்தனை ஆயிரம் என்று மொத்தக் கணக்கில் லாபத்தில் பங்கு போட்டுக் கொடுப்பார்களாம். மாசம் இருநூறு முந்நூறுக்குக் குறையாமல் தேறும் என்கிறார்களே. இனிமேலாவது உன் கஷ்டம் விடிந்தால் சரி.—அந்தக் கவலை வேறு அல்லவா ஈசுவரன் ஏற்படுத்தி விட்டார் உனக்கு! சின்னச் சம்பளத்தில் இருந்த போதே அப்படிச் செய்தவர், இப்போது கைநிறையச் சம்பாத்யமும் செல்வாக்கும் வரும்போது, என்னதான் செய்யமாட்டார்? உன்மட்டில் ஜாக்கிரதையாக இரு. நான் வேறு என்ன சொல்லப்போகிறேன்? எல்லோருக்கும் இப்படி ஒருத்தி சொல்லிக் கொண்டிருப்பாளா? ஏதோ, அக்கா தங்கைகள் மாதிரி, ஒரு வயிற்றில் பிறந்தது போலப் பழகி விட்டோம். அதனால், உனக்குத் தலையை வலித்ததானால் எனக்குக் கண்ணை வலிக்கிறது! உன் நல்ல தனம் யாருக்கு வரும்?'' என்று சொல்லிப் போனாள்.

வீட்டிலேயே அடைபட்டுக் கிடந்த எனக்கு இதை அவர் ஏன் என்னிடம் முதலிலேயே சொல்லவில்லை என்று கோபம் கோபமாய் வந்தது. அவர் அப்படிச் சொல்லிக் கொள்ளும்படியாக நான் வைத்துக் கொள்ள வில்லையே என்ற பச்சாத்தாபமும் ஏற்பட்டது. இருந்தாலும், இவ்வளவு தூரம் எல்லாம் முற்றிப் போன பிறகு, நானாகப் பேசுவதில்லை என்ற முடிவிற்கே வந்தேன்.

நம்முடைய அசட்டுத்தனமும் ஒவ்வொரு தடவை நமக்கே விசேஷ சாமர்த்தியம் போலக் காணப்படுகிறதல்லவா? காலத்தின் கூத்து! ஏற்றாற் போல் நம்முடைய நல்ல அறிவையும் திரை போட்டாற்போல ஏதோ வந்து மறைத்து விடுகிறது.

மாலையில் குறித்த நேரத்தில் இப்போதெல்லாம் பாங்கிலிருந்து அவர் திரும்பி வந்தார் என்பது ஒரு மாறுதல், வந்த சற்று நேரத்திற் கெல்லாம் உடையை மாற்றிக் கொண்டு உத்தியோகஸ்தர்கள் கிளப்பிற்குப் போய் விடுவார். ராத்திரி

வந்ததும் சாப்பாடு. வெவ்வேறு அறைகளில் படுக்கை. இப்படி ஒரு வாழ்க்கை!

இதற்கு என்றைக்காவது ஒரு முடிவு வேண்டும் அல்லவா? அது எப்படி வரும், பார்க்கலாம், என்று இரண்டொரு தடவை இருதயத்தில் படபடப்புடன் நான் எதிர்பார்த்தேன்.

"மாடியில் ஐயா கூப்பிடுகிருர்கள்" என்று முதலில் ஒருநாள் சின்னையன் வந்து சொன்னுன். பாங்கில் வேலையானதும் அவர் வீட்டை மாற்றுவாரோ என்று நான் நினைத்ததுண்டு. வீட்டை மாற்றவில்லை. அதற்குப் பதில் காலியாக இருந்த மாடியில் இரண்டு அறைகள் கட்டித் தரச் செய்து வாடகையை உயர்த்தித் தந்தார். அந்தப் பக்கத்தில் அவ்வளவு வசதியான வீடு அமைவது கஷ்டம்தான். சின்னையன் வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொண்ட நேரம் போக மீதி நேரத்தில் பாங்கில் பியூன். சமையலுக்கு ஒரு ஆள் போட்டிருந்தது.

மேஜையருகில் உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தவர் நான் போனதும் இரண்டு கடிதங்களை என் எதிரில் எடுத்துப் போட்டார். முதல் கடிதம் என் தகப்பஞர் எழுதியது. என்னைத் தம் வீட்டிற்கு வந்து ஒரு மாசம் இருக்கும்படி அனுப்ப வேணுமென்று கேட்டிருந்தார். இரண்டாவது கடிதம் அதற்கு இவர் எழுதிய பதில். "மோகனும்பாளை இங்கிருந்து அனுப்பி விட்டேனுனல், எனக்கு வீட்டில் ஒருவித சௌகரியமும் இருக்காது. ஆகையால் தாங்கள் இரண்டுபேருமே இங்கே வந்து இரண்டொரு மாசம் அவளோடு தங்கிப் போக வேணுமாய்க் கோருகிறேன். குழந்தை சகுந்தலாவைப் பார்க்கவேணும் போல் இருக்கிறது. அவளையும் அழைத்துக் கொண்டு கூடிய சீக்கிரம் வருவீர்கள் என்று எதிர்பார்க்கிறேன்." என்று எழுதியிருந்தார். இரண்டு கடிதத்தையும் பார்த்து விட்டுச் சரியென்னும் பாவனையாய்த் தலையை ஆட்டி விட்டுத் தட தட வென்று கீழே இறங்கி வந்து விட்டேன். நான் சொல்ல நினைத்த வார்த்தைகள் ஒன்றும் வாயிலிருந்து வெளி வரவில்லை. எனக்கு நெஞ்சைப் பிளப்பதுபோல் இருந்தது அந்த முயற்சி.

அம்மா மாத்திரம் சகுந்த... கொண்டு வந்து விட்டாள். நா... போதும்போல் கலகலப்பாக நடித்... அவளை ஏமாற்ற முடியவில்லை. நிலைமையை ஊகிக்க அவளுக்கு எத்தனை நேரம் பிடிக்கும்!

"உனக்கு என்று என்ன அவ்வளவு? ருக்மிணி பெரியம்மா இருந்தது போல் இருந்து விடேன்!" என்ருள்.

போயும் போயும் என் ஆத்திரம் எல்லாம் அம்மா தலையில்தான் விடிந்தது. "ருக்மிணி பெரியம்மா என்ன வந்தது? சாவித்திரி அம்மாமியைப் போல் இருந்து விடுகிறேன்!" என்றேன். மிகவும் படபடப்பாகப் பேசினேன்.

பெரியப்பா நடத்தையில் பிசகியவராக இருந்த போதிலும் பெரியம்மா நளாயினியாக இருந்து காலந்தள்ளினுள். குடும்பத்தில் அது அவ்வளவு பிரசித்தம்.

அம்மா இருந்த அதே தெருவில் சாவித்திரி அம்மாமி என்று ஒருவர். அவருடைய புருஷர் கல்யாணம் செய்துகொள்ள வேண்டிய அவசியமே இல்லையாம். அந்தஸ்திற்காகச் செய்துகொண்டாராம். அந்த அம்மாளும் 'இவ்வளவுதான் நமக்குப் பிராப்தம்' என்று சந்துஷ்டியாக இருந்துவிட்டார். அவருடைய முகத்தைப் பார்த்தாலே பண்ணின பாவம் போகும் என்று தெருவில் சொல்லிக் கொள்வார்கள்.

சாவித்திரி அம்மாமியைப்போல நினைத்துக்கொண்டுவிடுகிறேன் என்று நான் வெடுவெடுப்பாகச் சொன்னதைக் கேட்க அம்மாவுக்குச் சஞ்சலம் அதிகம் ஆயிற்று. ஒரேவாரம் இருந்துவிட்டு ஊருக்குப் போய்விட்டாள்.

தம் மனைவியை 'அவர்' பிறந்தகத்திற்குக்கூட அனுப்பவில்லை என்றதும், அதனுல் மனைவியிடம் எல்லோரையும்விட அதிகப் பிரியமாக அவர் இருப்பதாகவே பிறர் நம்பினுர்கள். உள் அந்தரங்கம் யாருக்குத் தெரியும்?

வருஷம் ஒன்று ஆயிற்று. 'குட்டு' வெளிப்படுவதற்கு என்னிடமிருந்து வாங்கிப்போன நகைகளைப்பற்றிக் கேட்டுவிடுவோமே என்று ஒருநாள் தோன்றியது.

வதை நம்பிய விற்றிருந்தாராஞல் எத்யக்கூடியா கை மாறிப்போயிருக்கும். மறு – அதே சங்கிலி, அதே வளையல் கிடைக்காது; வேறுதான் வாங்கவேண்டும். அப்படி வாங்குவதற்கோ கையில் பணம் இதற்குள் நிறையச் சேர்ந்திருக்கும். என் மனசானது அவருடைய நடத்தைப் பிசகிஞல் சங்கடப்பட்டுக்கொண்டிருந்தபோது கேவலம் நகைகளைப் பற்றித்தாஞ கேட்க வேண்டும் என்றும் தோன்றியது. என்றைக்காவது ஒரு நாள் 'குட்டை' உடைத்து ரகசியத்தை அம்பலத்திற்குக் கொண்டுவந்து தானே ஆகவேண்டும் என்று கடைசியில் தீர்மானித்தேன்.

மாலையில் கிளப்பிற்குப் புறப்பட்டவர் வாசலில் சற்றுநேரம் நின்ருர். வேறு ஒருவரும் பக்கத்தில் இல்லை. நான்போய் வாசற்படியண்டை சற்றுத் தயங்கி நின்றேன். திரும்பிப் பார்த்தார்.

"உங்கள் சிநேகிதர்........." என்று சொல்ல ஆரம்பித்தேன்.

"சற்று இரு. உன் நகைகளுக்காகத் தானே கேட்கிருய்?" என்ருர். தம் கைக் கடியாரத்தைப் பார்த்தார். அதற்குள் பாங்கி சேவகன் ஒருவன் சைகிளில் வந்து சலாம் செய்து அவர் கையில் ஒரு சிறு அட்டைப் பெட்டியைக் கொடுத்துவிட்டுப் போஞன். "இந்தா, ட்ராயர் சாவி. மாடி ட்ராயரில் உன் சங்கிலியும் வளையலும் இருக்கும்; எடுத்துக்கொள். அதோடு, இந்தப் பெட்டியில் இருப்பதையும் பார்; இன்றைக்கு நாள் நல்ல நாளாக இருக்கிறது. இதையும் போட்டுக்கொண்டுவிடு" என்று சொல்லிப்பெட்டியை என் கையில் கொடுத்துவிட்டு வெளியில் போய்விட்டார்.

அன்றுமுதல் நாலைந்து மாசத்திற்கு ஒவ்வொன்ருக ஏதாவது வீட்டுக்குப் பண்டம் வந்துகொண்டிருந்தது. அந்தப்பெட்டியில் இருந்தது வைரத்தோடு. அதைப் போட்டுக்கொள்வதா, வேண்டாமா என்று யோசனை செய்தேன். சங்கிலி வளையல்களையும் எடுத்துக்கொண்டேன். எல்லாவற்றையும் போட்டுக்கொள்வதில் தப்பு ஒன்றும் இல்லை என்றே முடிவு செய்தேன்.

வீட்டில் வைர நகைகளும் வெள்ளிப் பாத்திரங்களுமாக நாளாவர்த்தியில் வந்து குவிந்தன. ஆடைகளாலும் ஜ்வலிக்கும் நகை முதலியவற்ருலும் மாத்திரமே ஒரு ஸ்திரீயின் மனசு பூரித்துப்போய்விட முடியுமாஞல் நான் சந்தோஷமாக இருந்தேன் என்றுதானே சொல்லவேண்டும்?

என் கண்முன் இருந்த திரை விலகுவதற்குப் பதிலாக அந்தத் திரை இரட்டித்தாற்போல ஆயிற்று.

மேன்மேல் யோசித்துப் பார்த்ததில் ஒரு முடிவுதான் நேர்மையானதாக எனக்குத் தோன்றியது. அது சரியோ, தப்போ, நீங்களே நிச்சயம் செய்துகொள்ளவேண்டும். என் மனசில் இருந்த போராட்டத்தைத்தான் உங்களிடம் ஒளிக்காமல் உள்ளதை உள்ளபடி சொல்லிவிடுகிறேனே. எவ்வளவோ சங்கடத்தின் பிறகு என் மனசை ஒருவிதமாக உறுதி செய்துகொண்டேன். சாதாரணமாக வேறு எவராலும் அவ்வளவு தூரம் தளர்ச்சியில்லாமல் இந்த விரதத்தை, இந்தத் தவத்தை, அனுஷ்டித்து வந்திருக்க முடியுமா என்ருல், ஆயிரத்தில் ஒருவரால்கூட முடியாது என்றுதான் ஒவ்வொரு சமயம் சொல்லத் தோன்றுகிறது. பெருமைக்காகச் சொல்லிக்கொள்ளவில்லை. தினசரி அனுபோகத்தில் அவ்வளவு சிரமம் தெரிகிறது. அதஞல் வரும் வார்த்தை அது.

விஷயம் இதுதான் — சாதாரணமாக, ஸ்திரீகளைப்பற்றி நிந்தித்துப் பேசுகிறவர்கள் இருக்கிருர்களே, அவர்கள் 'புருஷர்களைப்போல் ஸ்திரீகளுக்கு இருமடங்கு உணவு என்று ஆரம்பித்து, காமம் எட்டு மடங்கு' என்று கொண்டுபோய் முடிப்பார்கள்.

முதலில், நம் நாட்டைமாத்திரம் உதாரணமாக எடுத்துக்கொள்வோம். போன தலைமுறை வரையில் பெரிய மனிதர் என்று சொல்லும் யாருக்கும் (நூற்றில் தொண்ணூறுபேருக்கு) வீட்டில் தர்ம பத்தினி இருப்பதைப்போலவே ஊரிலும் ஒரு தாசி உண்டு என்று சொல்லக்கேட்டிருக்கிறேன். இழிவுதரும் அச்சம் எதுவும் அதில் இருந்ததாகவே யாரும் நினைக்கவில்லை. தாசிகளில் பெரும்பாலோர் குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றிவரக் கூடிய மேன்மையும் நேர்மையும் வாய்ந்த



துண்டுகள்
வெண்மையாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...
துண்டுகள்
பிரகாசமாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...
ஸன்லைட்
சோப்பினால்
தான்
துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும்
சலவை செய்கிறது!
SUNLIGHT
SOAP
Rs.10000 Reward!
SUNLIGHT SOAP


S. 124-50 TM

வர்களாயிருந்தார்கள் என்பது வேறு விஷயம். நான் இங்கே சொல்லவந்தது என்னவென்றால்—புருஷர்கள் நேர்மை தவறினால் அதில் இழிவு இருப்பதாக எவரும் நினைக்கவில்லை என்பதே.

சமூகத்தின் பொதுப்படையான அபிப்பிராயம் அப்படி. மனிதருடைய மனச்சாட்சி, கடவுள் முன்னிலையில் அவருக்கு ஏற்பட்டுள்ள கடமை முதலியவற்றைப் பற்றி நான் பேசவில்லை. சமூகத்தினுடைய இந்த அபிப்பிராயம்கூட இன்று மாறிவிட்டது என்றால் அதற்குக் காந்தியுகம் ஆரம்பித்துள்ளதே காரணம்.

புருஷர்களைவிட ஸ்திரீகளுக்கு இன்ப வேட்கை எட்டுமடங்கு என்று சொல்வதை அப்படியே வேண்டுமானாலும் ஒப்புக்கொள்கிறேன். அந்த விஷயத்தில் அப்படியே விட்டுக்கொடுக்க நான் தயார். ஏனென்றால் என்னுடைய அடுத்த அபிப்பிராயம் ஒன்று உண்டு: அந்தவேட்கையை இயற்கையாகவோ பயிற்சியினாலோ அடக்கி ஆளும் சக்தி புருஷர்களைவிட ஸ்திரீகளுக்குப் பதினாறு மடங்கு என்பதே அது. நம் நாட்டு நாகரிகத்தைக் காத்து நிற்பது, பழுதுவராமல் போற்றி வளர்ப்பது, பெண்மையின் தூய்மையேயாகும். புருஷர்கள் மனமழிந்து நிற்கும் அளவில் நூறில் ஒரு பங்குகூட நாங்கள் நிலை தவறாமல் நன்னெறியைக் கடைப்பிடிப்பதாலே தான் ஆண்டவன் நம்மைக் கைவிடாமல் இன்னும் காத்து வருகிறான்.

இந்த எண்ணம் இப்படித்தோன்ற ஆரம்பித்தது எதனால் என்று நீங்கள் தெரிந்து கொண்டிருப்பீர்கள். ஒன்றுமில்லை—ஒரு சிறு உதாரணம். வண்ணானிடமிருந்து தூய்மையாகச் சலவை செய்துவந்த வஸ்திரங்களையே எடுத்துக் கொள்வோம். அவற்றில் பிறருடையது ஒன்று கைப்பிசகாகக் கலந்து வந்துவிட்டதானால், அதைத் தொடவோ, உபயோகிக்கவோ, நமக்கு மனசு வருகிறதா? பிறருடையது என்ற உரிமையினால் அல்ல அது. பிறருடைய உடல் உறவு அதற்கு ஏற்பட்டு விட்டது என்பதாலேயே அதன் மீது நாம் அருவருப்புக் கொள்கிறோம்.

கேவலம், துணி விஷயத்தில் இவ்வளவு ஜாக்கிரதையுள்ள நாம், துணியைவிடப் பன்மடங்கு மேலானதாகவும் ஆண்டவனுடைய இருப்பிடமாகவும் உள்ள நம் இனிய உடலை எப்படிப் போற்றிப் பாதுகாக்க வேண்டும்!

துணிக்குச் சலவையால் தூய்மையுண்டு. மனசைக் கரைத்து உருக்கினால், பக்தியினால், மனசிற்குத் தூய்மையுண்டு. ஆனால் உடலுக்கு ஏற்பட்ட ஊனம் உடலோடு எரித்தாலொழியத் தீராது.

என் கணவர் என்னைப் போஷித்து வந்தார். எனக்கு ஆடையாபரணங்களைக் குவித்து உதவினார். நான் பதிலுக்கு அவரைப் பராமரித்து வந்தேன். அவருடைய குடும்பத் தலைவியாக இருந்து பணிவிடைகளைச் செய்தேன். வீட்டு நிர்வாகத்தைப்பற்றிய கவலைகள் அவருக்கு இல்லாமல் பார்த்துக் கொண்டேன். இதற்கு மேல் அவர் என்னிடம் எதை எதிர்பார்க்க முடியும்?

மனசும் உடலும் உண்மை நிரம்பியபடி வைத்துக்கொள்ளவேண்டிய பொறுப்பு ஒன்று உண்டு. அந்தக்கடமையையும் நான் பழுதில்லாமல் செய்து வந்து விட்டேன். கணவர் எவ்வளவு கெட்டழிந்தவராக இருந்தபோதிலும் அவரை முழுமனசுடன் மனைவி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற கொள்கை ஒன்று இருக்கிறதல்லவா? அதை நான் ஒப்புக்கொள்ளத்தான் செய்கிறேன். பல தலைமுறை தத்துவமாக வந்த பயிற்சியால் அதைக் கருத்தளவிலேயே நான் ஒப்புக்கொள்கிறேன். பிழை செய்தல் மனித இயல்பு, அதைப் பொறுத்தல் தெய்வ இயல்பு, என்ற பழமொழிக்கும் அது பொருத்தமாகத்தான் இருக்கிறது.

கருத்தளவில் அதை ஒப்புக்கொள்வதால் தான் கணவரை விட்டு நீங்காமல் நான் இருந்துவருகிறேன். நடைமுறையில் முன்போல அவருடன் மறுபடியும் மனசு ஒத்து உறவாட என்னால் இயலவில்லை. ஆகையால் ஒரே வீட்டில் இருந்தும் என் வாழ்க்கையை நான் வேறுவிதமாக அமைத்துக்கொண்டு விட்டேன்.

நான் சொன்னதுபோல், வருஷம் ஒன்றல்ல, இரண்டல்ல. பதினாறு வருஷங்கள் கழிந்துவிட்டன. எண்ணிப்பார்க்கிறேன். சரியாகப் பதினாறுதான். குழந்தை சகுந்தலா வளர்ந்தாள். கல்யாணம் செய்து

கொடுத்தோம். புக்ககம் சென்றாள். குழந்தை பிரேமாவும் இந்த வீட்டிலேயே பிறந்தாள். ஒரு அம்சத்திலாவது பொதுப்பட என் கடமையை நான் செய்யத் தவறியதாக் யாரும் என்னிடம் குறை கண்டு பிடிக்கமுடியாது. மற்றப்படி அவர்களுடைய ஊகம் எவ்வளவுதூரம் சரியோ தப்போ, அதை நான் லட்சியம் செய்யவில்லை.

பிரேமாவிற்கு அடுத்தாற்போலச் சகுந்தலாவிற்கு மற்றொரு குழந்தை உண்டாகப் போவதாகத் தெரிந்ததும் பிரேமாவை என்னிடம் வைத்துக் கொண்டு விட்டேன். சவலைக்குழந்தை இன்னும் இளைத்துக்கொண்டு வரவேண்டாம் என்பது அதற்கு வெளிப்படையான காரணம்; தனிமையில் எனக்கு வெறுப்புத்தோன்ற ஆரம்பித்ததே உண்மையான காரணம்.

பாங்க் அலுவலாக முதல்நாள் வெளியூர் போயிருந்தவர் இன்று நேராகப்பாங்கிற்கே வந்து விடுவார் என்று தெரியும். இடைவேளை ஆகாரத்தைக் கொடுத்தனுப்பிய போது அவர் வந்துவிட்டார் என்றும் தெரிந்தது. ஆரம்பத்தில் எனக்கு என் வைராக்கியத்தில் கவனம், அடுத்தாற் போல அந்த வைராக்கியத்தை நீடிக்க வைப்பதில் ஒரு ஊக்கம். இப்படியாக இதுவரையில் எனக்கு என் முயற்சி ஒரு பெருமையாகவே இருந்து விட்டது. இன்று காலையில்தான் பழைய எண்ணங்கள் எல்லாம் மனசில் வட்டமிட, நான் செயலற்றுப் படுத்திருந்தேன்.

யமுனாவின் பச்சைப் பரிகாச வார்த்தைகளைக் கேட்டதும் மனசில் பழைய தீ மூண்டது. பட்டுப்போன உள்ளத்தைப் போர்த்திவைத்து எத்தனை நாள் இந்தச் சூனிய நாடகத்தை நடிப்பது என்று ஏங்கிப்போனேன். இன்னும் ஒரு வாரத்தில் போய்ச் சகுந்தலாவை அழைத்துவர வேண்டுமே. அதற்குள் எப்படியாவது நான் விடுதலை பெற்றுவிட வேண்டும். உண்மையை உள்ளபடி தெரிந்துகொள்ள வேண்டும். எல்லாவற்றையும் உதறித் தள்ளி, எங்கேயாவது கண் காணாத சீமைக்குப் போய்ச் சுயேச்சையாக இருக்க வேண்டும். அப்போது எனக்கு அழுகை வந்தாலும் சரி, சிரிப்பு வந்தாலும் சரி, பிறர் என்ன நினைப்பார்களோ என்ற பயம் இல்லாமல் மனசு போனபிரகாரம் பாக்கி நாளை நான் கழிக்க வேண்டும். அப்படி ஒரு வெறி என்னை இன்று பிடித்துக் கொண்டது.

சாயந்திரம் கிளப்பிற்குப் புறப்படுமுன் அவரை மாடியிலேயே பார்த்து ஒரு வார்த்தை கேட்டுவிடவேண்டும் என்பது நான் செய்துகொண்ட முடிவு. எப்படிப் பேச்சை ஆரம்பிக்கலாம் என்று யோசித்துக்கொண்டிருந்தேன், கதவை யாரோ தட்டினார்கள். மணி நாலுதான். கதவைத் திறந்தேன்.

"ரங்கநாதன் பாங்கிலிருந்து வந்ததும் நான் வந்துபோனதாகச் சொல்லுங்கள். சிவஸ்வாமி என்றால் தெரியும். உங்களுக்கும் தெரிந்திருக்கலாமே. ரங்கநாதனுடைய பழைய சிநேகிதன் நான். அவசரமாக ஒரு பஸ்ஸில் வந்து அடுத்த பஸ்ஸில் ஊருக்குப் போகிறேன். அடுத்ததடவை வரும்போது அவசியம் ஒரு நாள் தங்குகிறேன். இப்போது சற்று அவசரமாகப் போகவேண்டியிருக்கிறது. ரங்கநாதனிடம் சொல்லுங்கள்" என்றார்.

சற்று நாட்டுப்புறத்து மனிதர்மாதிரிதான் தோன்றியது. அவர்கூடவந்த ஒரு ஆள் வண்டியிலிருந்து ஒரு கூடை மாம்பழத்தை உள்ளே கொண்டுவந்து வைத்தான். அவர்கள் போனதும் நான் கதவைச் சாத்திக்கொண்டு உள்ளே போனேன். மாம்பழம் நல்ல ஜாதி என்று தெரிந்தது. அதன் மணமே அபாரமாய் இருந்தது.

ஐந்தரைக்கெல்லாம் அவர் வந்தார். வரும் நேரம் தெரியுமாகையால் காப்பி முதலானது அவர் மேஜையில் தயாராக வைத்திருந்தேன்.

"இன்றைக்குச் சற்று கழித்துக் கிளப்பிற்குப் போகலாமா?" என்றேன்.

"ஆஹா!"

"சற்றுமுன் சிவஸ்வாமி என்று ஒருவர் வந்திருந்தார்."

"யார்? சிவஸ்வாமியா? எங்கே அவன்?"

"அவசரமாக ஊருக்குப் போகிறார். அடுத்ததடவை வரும்போது தங்களுடன் ஒருநாள் தங்குவதாகச் சொன்னார்."

"உனக்குச் சிவஸ்வாமியை நினைவில் லையா?"

"இல்லை, யார் அவர்? ஒரு கூடை ஒட்டு மாம்பழம் உங்களுக்கென்று கொடுத்து விட்டுப்போனார்."

"எங்கே, பார்ப்போம்? கீழே இருக்கிறதா?"

"ஆமாம்."

கீழேயிறங்கிவந்தார். கூடையைப் பிரித்துப் பழத்தைக் கையிலெடுத்துப் பார்த்தார். "பலே! இதை நறுக்கிக்கொண்டு வரச் சொல்" என்றார். நானே நறுக்கித் தந்தேன்.

"நீயும் சாப்பிட்டுப் பார்! நன்றாயில்லை?"

"நன்றாய்த்தான் இருக்கிறது; அருமையான பழம்!"

"சொந்தத்தில் ஒட்டுக்கன்றுகள் வைப்பதாக எழுதியிருந்தான். பிறகு நாலைந்து வருஷமாகப் பேச்சு மூச்சேயில்லை. உயர்ந்த ஜாதி ஆரஞ்சு மரங்களும் வைத்துப் பயிர் செய்யப்போவதாகச் சொன்னான். இந்த வருஷம் நன்றாகக் காய்க்க ஆரம்பிக்கும் என்றான். ஆனால் அதற்கு இன்னும் 'சீசன்' ஆரமபிக்க வில்லையே! மாம்பழம்தான் காய்த்ததும் கொண்டுவந்திருக்கிறான். இது அவன் சொந்தத் தோட்டத்துப் பழம்......ஆள் இப்போது எப்படியிருக்கிறான்?"

"எப்படியா? நீங்கள் நிஜாரும் தொப்பியும் போட்டுக்கொள்வதற்கு முன் எப்படியிருந்தீர்களோ அப்படியிருக்கிறார்."

"அதாவது?"

"சற்று கர்நாடகப்பேர்வழி."

"சிவஸ்வாமியை நினைவில்லை உனக்கு? நிச்சயமாகவா? அவனே நம் வீட்டிற்கு முதலில் அதிகம் வந்தவனல்ல. நானும் அவனைப் பிறகு வீட்டிற்குக் கூப்பிடவில்லை. அவனுக்கு விருந்து முதலானது வெளியில் நடத்திவிட்டேன்......சகுந்தலா கல்யாணத்தில் பார்த்திருக்கலாமே நீ. கல்யாணத்துக்கு நாலு நாள் முன்னாடி வந்து, சகுந்தலாவை அழைத்துக் கொண்டுபோய் ஒரு மோதிரம் அளவு பார்த்து எடுத்து அனுப்பவில்லை? 'டாய்லெட் செட்' வாங்கிக் கொடுத்ததும் அவன்தான்."

கல்யாண வெகுமதிகளுக்குள் வைரக் கல் மோதிரமும் வெள்ளியில் நடுநடுவே பொன் வேலைப்பாடோடு கூடின பெரிய 'டாய்லட் செட்' ஒன்றும்தான் ரொம்ப வசீகரம். அவருடைய சினேகிதர் ஒருவர் அளித்தது என்றுமாத்திரம் தெரியுமே தவிர அந்தச் சினேகிதரின் பெயரை நான் விசாரிக்கவும் இல்லை, நினைவு வைத்துக் கொள்ளவும் இல்லை.

"அவனுக்கு முதலில் நான், நல்லது செய்யப் போய்த்தான் நீ என்னோடு மனஸ்தாபம் பாராட்டினது, ஆனால் அவன் உன்னை மறக்கவில்லை. பணம் கொடுத்ததெல்லாம் உன்னுடைய ஏற்பாடு என்று நான் சொன்னதில் தேவதா விசுவாசம் உன்னிடத்தில் அவனுக்கு. ஆனால் நீ என்ன நினைத்துக்கொள்வாயோ என்று நான் அவனைப் பிறகு இங்கே அழைத்து வரவில்லை. இன்னொரு பழத்தை நறுக்கச் சொல். அவள் எங்கே, யோகாம்பாள்?"

"பெண்ணைப் போய்ப் பார்த்துவர வேண்டும் என்றாள். எட்டு மணிக்குள் வந்துவிடுவதாகச் சொன்னாள். அப்புறம் ஏதாவது பத்தியமாகச் சீக்கிரம் சமையல் செய்துகொள்ளலாம் என்று போகச் சொல்லிவிட்டேன்."

"நவநீதம்?"

"அவள் நாளைக்குத்தான் வருவாள் சாயந்திரம் வரமாட்டாள் இன்றைக்கு."

"சின்னையன் வந்தானா?"

"வந்தான். 'இப்போது ஒன்றும் தேவையில்லை; காலையில் மார்க்கெட்டுக்குப் போய் வந்தால் போதும்' என்று சொல்லி அனுப்பிவிட்டேன்."

"பிரேமாக்குட்டி தூங்குகிறதா?" என்றார். தொட்டிலின் பக்கத்தில் ஒரு 'ஸ்டூலை' இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தார்.

நான் கீழே உட்கார்ந்தேன். "இப்போதுதான் குழந்தை கண்ணை மூடினாள்" என்றேன்.

"அபூர்வமான மனிதன்! அவனைப் போலச் சாமர்த்தியசாலி கிடையாது; குணம் உள்ளவனும் கிடையாது!"

"குழந்தை குட்டிகள் எத்தனை?"

"கல்யாணமே செய்துகொள்ளவில்லை! என்னோடு படித்த காலத்திலேயே, 'சொத்து கையில் இருந்துவிட்டால் கல்யாணத்திற்கு எத்தனை நேரமடா பிடிக்கும்?' என்று அடிக்கடி சொல்வான். 'ஷேர்' வியாபாரிகளிடம் வேலை பார்த்தான். அவர்களுடைய மோசடி, யோக்கியப் பொறுப்பு, எல்லாம் இன்னின்னதென்று தெரிந்துகொண்டான. சொந்தத்தில் ஒரு கம்பெனிவைக்க ஆசைப்பட்டான். கையிலிருந்த பணம் போதவில்லை. ஆரம்பச் செலவிற்குத்தான் இன்னும் ஐந்நூறுவது வேண்டும் என்றான். உன் நகைகளை அடகுவைத்துப் பணம் வாங்கித் தந்தேன்."

"கம்பெனி என்ன ஆயிற்று?"

"தொழில் தெரிந்தவனுகையால் கச்சிதமான விளம்பரத்தோடு நிறுத்திக்கொண்டான். முன்பு அறிமுகமான பெரிய மனிதர்களுடைய தொடர்பை விடாமல் பிரயோஜனப் படுத்திக்கொண்டு யோக்கியமாகத் தொழில் செய்தான். 'இந்த 'பிஸினஸ்ஸில்' உண்மையோடும் நடந்துகொண்டு, நல்லபேரும் எடுக்கப் போகிறேன், பார்!' என்றான். அப்படியே செய்து காட்டினான்."

"அப்புறம்?"

"அது தானே அவனிடத்தில் விசித்திரம்! ஏழெட்டு வருஷத்துக்குள் ஷேர் மார்க்கெட்டில் அவன் வைத்தது சட்டமாக இருந்தது. படுத்துப் போகும் கம்பெனிகளை வாங்கி, எஸ்டேட்டோ தொழிற்சாலையோ, நிர்வாகத்தை மாற்றி, லாபம் காண்பித்து, உயிரூட்டிக் கொடுத்தான். அவனோடு கூட்டாளிகளாகச் சேரப் பலர் ஆசைப்பட்டார்கள். கடைசியில் அவர்களிடமே தன் கம்பெனியை ஒப்பித்துவிட்டு, நாற்பது ஐம்பது ரூபாயோடு வேலையை விட்டு விலகிக்கொண்டான்."

"இப்போது?"

"நல்ல நஞ்சை நிலமாகக் கொஞ்சம் வாங்கினான். வேறிடத்தில் கட்டாந்தரைப் பிரதேசத்தில் பத்துப் பதினைந்து ஏகரா வாங்கி மாமரம், ஆரஞ்சுமரம், பலாமரம் இவையெல்லாம் வைத்துப் பயிர் செய்தான். கல்யாணத்தைப்பற்றி நினைவூட்டினால், 'மாமரம் பழுத்ததும் கல்யாணம்!' என்பான். அதனால்தான் இந்த வருஷம் அவனைப் பார்க்கவேண்டும் என்று எனக்கு ஒரு விறுவிறுப்பு."

"வயசு நாற்பது இருக்குமே!"

"இருக்கும். என் வயசுதான் கிட்டத்தட்ட. இருந்தால் என்ன? அவனைப் போல ஆரோக்கியசாலிகள் யார் இந்த நாளில்?....முன்பெல்லாம் 'மோகனரங்கம் கம்பெனி' என்று காலண்டர்கள் மாட்டியிருக்குமே நம் வீடெல்லாம். அவன் கம்பெனிதான் அது. பெயர் எப்படி வைத்தான் என்கிறாய்?"

"இப்போது நீங்கள் சொல்லவிட்டுத்தான் தெரிகிறது; அப்போது கவனிக்கவில்லை." மெள்ள நான் நகர்ந்துபோய் அவருடைய காலைக் கட்டிக் கொண்டேன். "அந்தக் கம்பெனி இன்னும் நடந்து வருகிறதா?" என்று கேட்டேன்.

"சுமாராய் நடந்து வருகிறது."

"நிஜமாகவே அந்தக் கம்பெனி ஆரம்பித்து வைக்கத்தான் பணம் தந்தீர்களா?"

"ஆமாம்; அதிலென்ன சந்தேகம் உனக்கு?"

"இன்னொன்று கேட்கிறேன். கோபிக்காதீர்கள்? அப்போது அதற்கேற்றாற் போல ராத்திரியெல்லாம் ரொம்பநேரம் கழித்து வருவீர்களே, அது ஏன்?"

"சிவஸ்வாமி சொந்தப் பொறுப்பில் தொழில் ஆரம்பித்ததும் ஷேர் மார்க்கெட்டில் ஏகப்பரபரப்பு. பலபேர் தங்களுடைய பிஸினஸை அவனிடம் அப்படியே மாற்றினார்கள். தரகு மாத்திரம என்று இல்லாமல், சொந்தமாகக் கம்பெனிகள் ஸ்தாபனம் செய்தான். நிர்வாகத்தையும் ஏற்றுக் கொண்டான். ஐந்தாறு குமாஸ்தாக்கள் இருந்தும் போதவில்லை. நம்பிக்கையாக மேல்பார்வைக்கு உதவி ஆசாமி கிடைக்கும் வரை நான் கூட இருந்து, அன்றாடம்

கணக்கைச் சரிகட்டி விட்டுத்தான் வீட்டுக்கு வருவேன். இல்லாவிட்டால் மறு நாள் காலையில் ஒறே குழப்பமாகப் போய் விடும். நான் இருந்து வந்த இடத்தை விட்டு விட்டுப் பாங்கில் சேரும்வரை அவனோடு வேலை செய்தேன். அந்தச் சமயம் அவனிடம் இருபது பேருக்குமேல் வேலைக்குச் சேர்ந்து விட்டார்கள். மனிதர்களிடம் முழுநம்பிக்கை வைத்து, நன்றாக வேலை வாங்கிச் சம்பளத்தையும் அள்ளிக் கொடுப்பவர்கள் யார் அவனைப்போல? அவனுடைய ஜீவசக்தியைக் காந்தம் என்று சொல்லலாம், மின்சாரம் என்றும் சொல்லலாம். அவனில்லாவிட்டால் பாங்க் கூட ஆரம்பித்திருக்கமுடியாது. அதற்கு ஷேர் சேர்த்து, அதை ரிஜிஸ்தர் செய்து கொடுத்து, ஆள்களைப் பிடித்துப் பாங்க் வேலையை ஆரம்பித்து வைத்தவனும் அவனேதான்............இந்தா! இதோ, என்னைப்பார்! ஏன் விசித்து விசித்து அழுகிறாய்? எழுந்திரு. விஷயத்தைச் சொல்.''

தொட்டிலை மெதுவாக ஆட்டிக்கொண்டிருந்தவர் ஒரு கையால் என்னைத் தூக்கி உட்கார வைத்துக்கொண்டார். 'கோ'வென்று எனக்கு அழுகை வந்தது. சமாளித்து அடக்க முடியவில்லை.

"சற்று நிதானப்படுத்திக்கொள். விஷயம் என்னவென்று அப்புறம் சொல்லிக் கொள்ளலாம். அவசரம் இல்லை. தேகத்தை வீணாக அலட்டிக் கொள்ளாதே. குழந்தைகூட அப்புறம் விழித்துக் கொண்டுவிடும்!"

எழுந்திருந்து அவரை அப்படியேகட்டிக் கொள்வதா, அல்லது அவர் காலைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அவருடைய மன்னிப்பைக் கோருவதா என்று தெரியவில்லை. இரண்டும் செய்ய வேண்டும் போல் தோன்றியது என் நிலைமையில். அவருடைய முகவாய்க்கட்டையைப் பிடித்துக்கொண்டு, 'என்னை மன்னிப்பீர்களா?' என்று கெஞ்சவேண்டும் போலும் இருந்தது.

"என்......ஜன்மத்தை...நானே...நானே...பாழாக்கிக் கொண்டுவிட்டேன்......உங்களுக்கும் சௌக்கியம் இல்லாமல் செய்து விட்டேன்" என்று கொஞ்சங் கொஞ்சமாக ஏதோ வார்த்தைகள் என்னையறியாமல் வெளிவந்தன.

"எப்படி? நிதானமாய்ச் சொல். இந்தா, கண்ணைத் துடைத்துக்கொள். இப்போது சொல் தைரியமாக. இதோ, இங்கே உட்கார். இப்படித்தான்!''

"உங்களுக்குத் தகாத சினேகம் ஏற்பட்டு விட்டதென்றும் அதனால்தான் பணம் செலவு செய்துவிட்டுத் தாறுமாறாகக் கடன் வாங்கினீர்கள் என்றும் நினைத்தேன். அதனாலேயே ராத்திரியில் கால்காலத்தில் வீடு வருவதும் கிடையாது என்று நம்பினேன்."

"அப்படி உனக்கு யார் சொன்னார்கள்?"

"யார் சொன்னால் என்ன? என் கெட்ட புத்தியைத்தான் நான் நொந்து கொள்ள வேணும்!"

"என்பேரில் உனக்குச் சந்தேகம் வந்ததே கிடையாதே. அப்படியிருக்க உன்னைப் போய்ப் பொய்யும் புளுகும் சொல்லிக் கலைத்து விட்டது யார்?"

"விட புருஷர்களைக் கேட்டால், 'உன்னைத்தவிர வேறு எந்த ஸ்திரீயையும் நான் தீண்டினவன் அல்ல' என்றுதான் அந்தந்த ஸ்திரீயிடத்தில் அவ்வப்போது அவர்கள் பிரமாணம் செய்வார்கள். அதைக் கேட்டு அல்ப புத்தியும் சபலசித்தமும் உள்ள ஸ்திரீகள் அதை நம்பி ஏமாந்து போகிறார்களே!—என்று நான் அடிக்கடி கேள்விப்பட்டிருந்தேன். அதனால் உங்களிடம் எனக்கு அப்போது நம்பிக்கையில்லாமல் போயிற்று. உங்களையே நேரில் ஒருநாள் கேட்டுவிடுவது என்ற யோசனையையும் அதனால்தான் கைவிட்டுவிட்டேன்."

"இப்போதாவது——சரி, நான் அப்படிக் கேட்கவில்லை. வேறு ஏதாவது பேசுவோம்."

"எனக்குத் தெரியாமலா இருக்கிறது! நான் செய்த பாபத்திற்குப் பரிகாரம் தேடத்தான் எனக்குச் சக்தியில்லை!"

"எவ்வளவு நீடித்த குற்றமாயிருந்தாலும் இந்த ஒரு நிமிஷமே அதற்கெல்லாம் உபசாந்தி! அது கிடக்கட்டும். இவ்வளவு

கோவையாகச் சூழ்ச்சிசெய்து உன் இளம் மனசை மாற்றிவிட்ட பேர்வழியார்? அதை எனக்குச் சொல்லவில்லையே."



"யாராயிருந்தால் என்ன? எல்லோரும் தான் என்று வைத்துக்கொள்ளுங்களேன். மாசில்லாத ஒரு மகானிடத்தில் களங்கம் ஆரோபித்த என் ஆத்மா வைத்தான் நான் தண்டிக்க வேணும்."

"எல்லோரும் என்று சொல்ல முடியுமா? இது நாலுபேர் பகிரங்கமாகப் பேசக்கூடிய மாதிரி இல்லையே."

"அப்படியானல் சொல்கிறேன். எதிர்த்த வீட்டு யமுனுதான் என்னிடம் தினம் அப்படிச் சொன்னுள். ஊரில் எல்லோருக்கும் தெரிந்த விஷயம் என்ருள்."

நான் யமுனு பேரைச் சொன்னதுதான் தாமதம். என்னைக் கீழே மெதுவாக இறக்கிவிட்டு, "அட தெய்வமே" என்ருர். எழுந்திருந்து தலையில் அடித்துக்கொள்ளாத குறை; சாய்வு நாற்காலியில் 'தொப்' பென்று விழுந்தார். நான் பயந்துபோனேன். எனக்காகப் பாக்கி வைத்திருந்த காப்பியையும் வற்புறுத்திக் குடிக்கச் செய்தேன். ஸ்டூலைப் பக்கத்தில் இழுத்துப் போட்டுக் கொண்டு, ஜன்னலையும் திறந்துவிட்டுச் சற்று விசிறினேன். அவருக்குச் சற்று ஆசுவாசம் ஆனதும் அவர் சொன்ன விருத்தாந்தத்தை அப்படியே, ஆனல் சுருக்கமாக, இங்கே சொல்கிறேன்:—

இது இப்படி யாகலாம் என்று எனக்கு முன்பே தெரியாமல் போயிற்றே! உன்மீது குற்றமே இல்லை. விஷயத்தை மறைத்து வைத்த என்மேல் தான் தப்பு. என்ன இருந்தாலும் நீ சிறிசு. உன் மனசிற்குச் சஞ்சலம் வேண்டாம் என்று நினைத்தேன். அது

என் புத்திப் பிசகு. ஆனால் அவள் இப்படி ஒன்று ஜோடித்து நம்மிருவரின் வாழ்க்கையை அவளால் பாழாக்கிவிட முடியும் என்று என் கற்பனைக்கு அப்போது எட்டவேயில்லையே! ஈசுவரா!

அதையெல்லாம் இப்போது நினைப்பதற்கே எனக்கு வேப்பங்காயாயிருக்கிறது. இருந்தாலும் கேள். நீ சொல்வதை அப்புறம் சொல்லு. சரிதானே? என் மனசிலுள்ள பளுவும் இன்றோடு நீங்கிவிடட்டும்.

யமுனாவா அவள் பெயர்? சரி. அப்படியே யிருக்கட்டும். அவளிடத்தில் ஒரு அபூர்வ அம்சம் பார்த்தாயா? இருபது வருஷத்திற்கு முன்பு அவள் எப்படியிருந்தாளோ அப்படியே யிருக்கிறாள் இன்றைக்கும்! உடம்பு வேண்டுமானால் ஒரு சுற்றுப் பருமனாயிருக்கிறது. அவ்வளவுதான். காது ஓரத்தில் கொஞ்சம் நரை தெரிகிறது. ஆனால் அதே உருண்டை முகம்; தளதளப்பான தேகக்கட்டு; மிதந்த கண்கள்; சிரித்த சுபாவம். நகையும் நாணயமுமாகக் குலுங்கக்குலுங்க அவள் நடந்து வருவதே கண்ணுக்குக் குளிர்ச்சி. ஏது, இப்படியெல்லாம் வர்ணிக்கிறேனே என்று எண்ணாதே. நீ நினைப்பது தெரிகிறது; சரி. கண்ணில் படும்போது நானும் பார்க்கிறவன்தான். பார்க்காததுபோல் பாசாங்கு செய்யப்பட்டவனல்ல. உன் மற்ற சிநேகிதிகளைப்பற்றி அடிநாளில் உன்னோடு எவ்வளவு பேசியிருப்பேன்! அதுபோகட்டும். மனசில் கபடம் இருந்தால்தானே எதையும் நான் ஒளிக்கவேண்டும்?

சகுந்தலாவுக்கு ஆண்டு நிறைவு ஆனதும் உன் அப்பாவுக்கு உடம்பு சரியில்லை என்று ஒரு பத்து நாள் நீ ஊருக்குப் போயிருந்தாய் அல்லவா? அப்போது இது சின்ன வீடாயிருந்தது. ரேழி காமிரா வில் நமக்குப் படுக்கை. மாடி கட்டியாகவில்லை அப்போது. ஒரு நாள் நான் ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு வந்தேன். ராத்திரி. இருட்டாயிருந்தது. பூட்டியிருந்த வாசல் கதவைத் திறந்தேன். திண்ணையில் யாரோ இருந்தாற்போல் இருந்தது. ரேழியில் இருந்த ஸ்விட்சைப் போட்டேன்.

கையில் ஒரு டம்ளர் பாலுடன் இவளும் ரேழிக்குள் வந்தாள். "உங்களுக்குப் பால் ராத்திரி சாப்பிட்டுப் பழக்கமாமே. காய்ச்சி வைத்திருக்கிறேன். மோகனா கொடுக்கச் சொன்னாள்'' என்றாள்.

எனக்குப் 'பகீர்' என்றது. எனக்குத் தனிப் பாலாகப் பிடிக்காது என்பது



உனக்கு நன்ருகத் தெரிந்த விஷயம்! இதில் ஏதோ சூது இருக்கிறது என்று நினைத்துப் பதில் பேசாமல் பாத்திரத்தைத் திண்ணையில் கொண்டுபோய் வைத்தேன். அவள் போவதற்காகக் காத்திருக்கும் பாவனையாய் நின்றேன். "ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டு அதற்குள் இளைத்துப் போனீர்களானல் மோகனு என்னைத்தான் கோபித்துக் கொள்வாள்!" என்று சொல்லிக் 'களுக்'கென்று சிரித்துக் கொண்டே அன்றைக்குப் போய்விட்டாள்.

ஒரு நாள் குளிர்ந்த சால் தீர்த்தம். ஒரு நாள் ஏதோ பக்ஷணம். இப்படி இந்த நாடகம் இரண்டு மூன்று நாள் நடந்தது. இதைக் கவனிக்கிறவர்கள் இவள் வீட்டில் இல்லையா என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

நான் எதையும் பெற்றுக்கொள்ளவில்லை. அப்புறம் 'டார்ச் லைட்' ஒன்று என்னுடன் எடுத்துக்கொண்டு போய், ஹோட்டலிலிருந்து வரும்போது திண்ணையில் நன்ருகப் பார்த்துவிட்டு, அப்புறம் தான் கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனேன்.

பிறகு ஒரு நாள் படுக்கையைப் போட்டேன். உள்ளே போய்த் தாகத்திற்குச் சாப்பிட்டு விட்டு வந்தேன். வாசல் கதவைச் சாத்திவிட்டுப் படுத்துக் கொள்வதற்காக விளக்கை நிறுத்தினேன். யாரோ என் கையைப் பிடித்ததுபோல் இருந்தது. விளக்கின் 'ஸ்விட்சை'ப் போடுவதற்கும் விடவில்லை. முடியவில்லை. அவள் சிரித்தாள். எப்போது எப்படி உள்ளே வந்தாள் என்று யோசித்த வண்ணம் திமிறிக்கொண்டு கதவைத்திறந்து வெளியே போனேன். பரிகாசமாக அவள் சிரித்த அந்த விளையாட்டுச் சிரிப்பு இன்னும் என் காதில் ஒலித்துக்கொண்டிருக்கிறது.

அவள் கையால் பிடித்த இடம் ஜிலீர் என்று இருந்தபோதிலும் (ஏதோ ஜலத்தைத் தொட்ட கை என்று நினைக்கிறேன்) எனக்கு, என்னவோ, நெருப்புச்சுட்ட மாதிரி இருந்தது. போய் நடுத்தெருவில் நின்றுகொண்டேன். கால் மணி இருக்கும். எனக்குப் பொழுதே விடிந்துவிடும் போல் தோன்றிற்று. பொழுது விடிந்து விட்டாலும் தேவலை என்று இருந்தது. பிறகு அவளாக 'ஸ்விட்சைப் போட்டுச் சற்று நேரம் காத்திருந்து பார்த்தாள். பிறகு நிதானமாக, ஏதோ பாடிக்கொண்டே அவள் வீட்டிற்குள் போய்ச் சேர்ந்தாள். ரொம்ப சகஜமாக இருந்தது அவளுடைய கோபமும் நடையும். அவள் தெருவைத் தாண்டிப் போனபிறகுதான் ஒரே எட்டில் இங்கேவந்து கதவைத் தாழிட்டுக்கொண்டேன்.

மறுநாள் நான் ஆபீசுக்குப் புறப்பட்டபோது எதிரில்தான நின்றுகொண்டிருந்தாள். எனக்கு ஒரே பதற்றமாயிருந்தது. அவளோ ஆனல் சாவதானமாக என்னை ஏறிட்டே பார்த்தாள். அலட்சியமோ பரிகாசமோ மனத்தாங்கலோ அந்தப் பார்வையில் இல்லை. குழந்தையின் தெளிந்த அன்னியோன்னியமான பார்வைதான் அது.

அவளுக்காகப் பயந்து வீட்டைக் காலி செய்து விடலாமா, அல்லது நீ திரும்பி வரும்வரை வேறெங்காவது படுத்துக் கொள்ளப் போய்விடலாமா, என்றெல்லாம் எனக்கு யோசனை ஓடிற்று. நல்ல வேளையாக அன்று சாயந்திரமே நீ திரும்பி வந்தாய் எனக்கு உயிர் வந்தது. இந்த வீடோ எனக்குப் பழக்கமாய்ப் போய்விட்டது. அதனல்தான் உன்னைப் பிறந்தகத்திற்குக் கூப்பிட்டபோதுகூட உன்னை இங்கேயே வந்து பார்த்துப் போகும்படி பதில் எழுதினேன்.

அதிலிருந்து நான் உன்னைப் பிரிந்ததில்லை, மோகனம்!

(அதோ, குழந்தை எழுந்துவிட்டது, எடுத்துக்கொள்.)

எதற்காகச் சொல்லவந்தேன் என்ருல்—அன்றைக்கே உன்னிடம் நான் இதை முழுதும் சொல்லியிருக்கலாம். (குழந்தை மறுபடியும் தூங்கிவிடுமா? சரி அப்போது இன்னும் கொஞ்சம் ஆட்டு.) என்ன நினைத்தேன் என்ருல், நீ என்மேல் சந்தேகப்படுவாய் என்ற எண்ணமே கிடையாது எனக்கு. இந்தவிதம் ஒரு காரியம் மறுபடி நடப்பதற்கு இனிமேல் இடம் கொடுப்பதில்லை என்று நான் தீர்மானித்துவிட்டதால், உன் மனசில் உள்ள நிம்மதியைக் கெடுப்பானேன் என்றுதான் கடைசியில் பேசாமல் விட்டுவிட்டேன். இது சாதா

ரணமாக ஒருவரிடம் சொல்லிக்கொள்ளக் கூடிய விஷயம் இல்லே, பார்!

சகுந்தலாவைக் கொண்டுவிட்டு, அழைத்து வரும்போது, நானும் கூடவே லீவு எடுத்துக்கொண்டு உன்னேடு வந்த தெல்லாம் நினேவிருக்கிறதா? நீகூட இருந்தமட்டும் எல்லாவிதத்திலும் எனக் குத் தைரியம்தான்.

ஆனல் உன்னிடம் இதைச் சொல்லா தது தப்பு என்று இப்போது தெரிகிறது. நான் உன்னிடம் சொல்லமாட்டேன் என்ற நிச்சயத்தால்தான் அவள் அப்படி விஷத் தைப் புகட்டிவிட்டாள் உனக்கு.

உன் நகைகளே வாங்கிக்கொண்டுபோன கோபத்தால்தான் நீ பிறகு மனஸ்தாபப் பட்டுக்கொண்டிருக்கிருய் என்றே நான் நினேத்தேன்.

உன் நடத்தை எனக்கு விசித்திரமாக இருந்தது. நானுக வலியப் பேசினேனு ஞல், கேவலம் காமுகன் என்று என்னே எண்ணிக்கொண்டு விடுவாய் அல்லவா என்று தோன்றியது எனக்கு. இவ்வளவு பிடிவாதமாக நீ இருக்கும்போது, கோபம் தணியட்டும், ஒரு நாளாவது தணியாதா, என்று எண்ணி யெண்ணி ஏங்கினேன். உன் மனசிலிருந்த தப்பபிப்பிராயத்தை அறிந்தேனு அப்போது?

ஆனல் இன்று சொல்கிறேன், மோகனு! ராமச்சந்திரமூர்த்தி வனவாசம் போனுர். பத்து வருஷத்துக்குமேல் ரம்மியமாக சீதையோடு அரண்யத்தில் வசித்தார். ஆனல் இரண்டொரு மாசம் அவளேப் பிரிந்திருந்ததற்குள் அலறிவிட்டார். எல் லாவற்றிற்கும்மேல் ஒரு உண்மையை அவர் வாய்விட்டுச் சொன்னுர். 'ஐயோ! நம் இளமை எல்லாம் வீணுகக் கழிகிறதே!' என்ருராம் அப்போது.

நான் என் மனசு அறிய ஒருவருக்கும் துரோகம் செய்யவில்லே. ஏதோ பூர்வ ஜன்ம சாபம் நம்மை இப்படி விசித்திரமா கப் பிரித்துவிட்டது. அதைப்போய் இனிச் சொல்வதில் பிரயோஜனம் என்ன?

உன் மனசிலுள்ள சந்தேகம் இன்ன தென்று தெரியாமலே நான் காலத்தைக் கழித்துவிட்டேன். போனது போகட்டும். இதோ, என் கைகள் எப்படியெல்லாம் ஏங்கும், தெரியுமா? உன்னுடைய உணர்ச் சியும் அதுதான். எனக்குத் தெரிகிறது. இன்னெரு விஷயம் (அதோ, பார். யோகாம்பாள் வந்துவிட்டாள். சீக்கிர மாகவே வந்துவிட்டதாகத் தெரிகிறது, பிறகு பாக்கியைப் பேசிக்கொள்வோம். குழந்தையும் எழுந்திருந்து உட்கார்ந்து விட்டது. நீ மேற்கொண்டு ஆகவேண் டியதைப்பார். இனிமேல் நான் வெளி யில் போகவில்லே. மாடியில் போய்ச் சற்று உட்கார்ந்துகொள்கிறேன். ஏதாவது சட் டென்று பலகாரமாகச் செய்யச்சொல்லிக் காரியங்களேச் சீக்கிரம் முடித்துவிடு. போ, சமையல் கட்டிற்குப்போய் முதலில் அவ ளிடம் சொல்லிவிட்டு வா. பிரேமா குட் டியையும் எடுத்துக்கொண்டு போ......... எங்கே? என்னிடம்தான் வருவாயா, கண்ணே? வா, இப்படி; மாடிக்குப் போவோம்) இன்னென்று: நாளேக்கு இதைச் சொல்லி அந்தப் பேர்வழியிடம் போய்ச் சண்டைப் போட்டுக்கொள் ளாதே! என்ன, காதில் விழுந்ததா?"

"ஆஹா! இதைப்போய்ச் சொல் வேணு? எவ்வளவு அருமையாக அவ ளிடம் நான் நடந்துகொள்கிறேன்.—நீங் களே இருந்து, வேணுமானல் பாருங்கள்!"

"என் தம்பி இங்கே வந்திருந்தபோது 'வீட்டைக் காட்டுகிறேன், வா' என்று அவன் கையைப்பிடித்து அழைத்துக் கொண்டு போனுளே, மகாராஜி! இப் போது நினேவு வருகிறது. அதற்குள் என்ன நடந்திருக்குமோ? சீனுவுக்கு வயசு பதினேந்து இருக்குமா? அப் போது? என்ன வயசாயிருந்தால்தான் என்ன? அவளுக்கு எல்லாம் சரிதான்!

"உங்களோடு பேசிக்கொண்டே பாதி மாடி ஏறிவிட்டேன். இருங்கள், குழந்தைக் குப் போய் பால் கொண்டுவந்துவிடுகி றேன்" என்றேன்.

என் கடுங்காவல் அன்ருேடு நீங்கியது.

வாழ்க்கை மீண்டும் ஆரம்பித்தது.




*தொடர் கதை*

கே. எம். முன்ஷி — ஸுரேந்திரநாத் சாஸ்திரி

மொழி பெயர்ப்பு — கிழையூர் தி. சேஷாத்திரி

## அத்தியாயம்—9

## கோகா பாபாவின் ஆவி

1

அர்ஜுனன்—அவன் கோட்டைக் காவலாளி—திறந்த வெளியில் கட்டிலின் மேல் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். அந்தக்கிழவனுடைய மூக்குத் துவாரங்களிலிருந்து அமைதியாய், கிரமப்படி வந்துகொண்டிருந்த குறட்டை, கோட்டையில் இருந்தவர்களுக்கு அவன் கோட்டைக்குள் இருந்ததை அறிவித்துக்கொண்டிருந்தது. நடு இரவு கழிந்துவிட்டது. கோட்டையிலுள்ள சிறிய எண்ணிக்கையுள்ள ஸ்திரீ புருஷர்கள் தூங்கிக் கொண்டிருந்தனர்.

நீலக் கோட்டைக்கு எதிரே பட்டண் பிரபுவினுடைய ராஜ்யத்தின் எல்லை முடிகிறது. அதற்கும் மேல் மூன்று கிராமங்கள் ஒரே காடு. அவைகளில் இருந்து வீசும் காற்று அநேகர் சேர்ந்து அழும் குரல்போல் அலறி அடித்துக்கொண்டிருந்தது.

'கட் கட்'...கட் கஹட்,' கோட்டையதிகாரி கோட்டையின்மேல் ஏறிப் பார்க்கத் தொடங்கினான். நக்ஷத்திரங்களும் எவ்வளவோ முயன்றன அவன் கண்களுக்கு உதவி செய்ய. ஆனால் ஒன்றும் சரியாகத் தென்படவில்லை. ஆனால் ஒட்டகங்கள் வரும் தொனி மட்டும் அதிகமாகக் கேட்டுக்கொண்டே வந்தது, கண் கொட்டாமல் கண்ணை வருத்தி அவன் பார்க்கத் தொடங்கினான். ஆனால் அப்பார்வை இருட்டினுள் நுழைய இயலவில்லை.

சற்று நேரம் சென்ற பிறகு மூன்று உருவங்கள் வருவது தெரிந்தது. சேய்மையிலிருந்து அண்மையில் வந்துகொண்டிருந்தனர். அவை மயானத்திலிருக்கும் ஒட்டகங்களின் உருவங்களோ? கோட்டை அதிகாரி நடுங்கி எழுந்தான்; சப்தம் கொடுத்துத் தன் ஆட்களை எழுப்பினான். இந்த லோகத்தது அல்லாதது போல் தோன்றிய அந்த ஒட்டகங்கள் மிகவும் நெருங்கி வந்துவிட்டன. அந்தச் சமயம் கோட்டையின் மேலும் எட்டு வில்வீரர்கள் தங்கள் அம்புகளை வில்லில் பூட்டித் தயாராக அமர்ந்துவிட்டனர். ஆனால் அவர்கள் கைகள் என்னவோ உதறுவதில் நிற்கவில்லை.

"யார் நீ?"

"நான் பிரபாஸிபாட்டண் போகிறேன். அவசியமான ஒரு வேலை." இதைச் சொன்ன குரல் மிகவும் கனத்தொலித்தது,

"பெயர் என்ன?"

"சௌஹான். கோட்டையைத் திற. எனக்குப் புது ஒட்டகங்கள் கொடு." சொல்பவன் குரல் கம்பீரமாயிருந்தாலும் அவசரம் காட்டிற்று. உடனேயே கோட்டை வாயில் திறக்கப்பட்டது. முதல் மனிதன் ஒட்டகத்திலிருந்து இறங்கிக் கீழே வந்தான். கோட்டையதிகாரிக்கு இருந்த பயத்தில் இன்னமும் ஒட்டகங்கள் ஆவிகள் எனவேதான் தோற்றம் அளித்தன!

'இந்த நேரத்தில் ஏன் இவ்வளவு அவசரம்?' என்று அர்ஜுனன் கேட்டான். ஆனால் அத்துடன் நின்றுகொண்டான். அவனுடைய மயிர்க்காம்புகள் விறைத்து நின்றன. எதிரே நின்ற இளைஞன் காய்ந்து கருகியிருந்தான். சிதையிலிருந்து எழுந்து ஓடிவந்த பிரேதம் போலவே காணப்பட்டான். அவனுடைய கண்கள் பயத்தைக் கக்கிக்கொண்டிருந்தன.

"மூன்று நல்ல ஒட்டகங்கள் கொடு. எனக்கு உடனே பிரபாஸிபட்டண் போக வேண்டும். எல்லோரும் கோட்டையைவிட்டு உடனே போய்விடுங்கள்."

"சிறுசே!" என்றாரம்பித்த அர்ஜுனன் குரலில் திரஸ்காரம் தொனித்தது. "நாங்கள் கோட்டைக்காவலாளிகள், தெரியுமா? நாங்கள் பயப்படுகிறவர்கள் அல்ல" என்றான்.

இளைஞன் ஒரு சிரிப்புச் சிரித்தான். வறண்ட அந்தச் சிரிப்பு ஒரு கணம் அந்தக் கிழவனையே அலறவைத்துவிட்டது.

"அடே நானா பயங்காளி!" இளைஞன் மீண்டும் அட்டஹாசம் செய்தான். "அட, கோகாபாபாவின் பெயரைக் கேள்விப்பட்டிருக்கிறாயா?"

அர்ஜுனன் கோகபாபாவின் பரம பக்தன். பாலைவனத்தின் எல்லையில் வசிக்கும் இவனைப் போன்ற காவலாளிகள் எல்லாம் அந்தப் பாலைவன அரசனைப்பற்றிக் கதைகள் கேட்டே வாழ்க்கையைக் கழித்தவர்கள். அநேக வருஷங்களுக்குமுன் அதாவது மூலராஜன் காலத்திலும் அவன் அவரைப் பார்த்தும் இருக்கிறான். ஆகவே அவனுக்கா கோகாபாபாவைத் தெரியாது? பெயர் கேட்பது என்ன? நேரடியாகவே அறிவானே! உடனே அந்தக் கிழக் காவலாளியின் மனதில் பழைய ஓர் உருவம் ஒளித்து நின்றது. ஐம்பது வருஷங்களுக்கு முன் பார்த்த அந்தக் கோகாபாபாதான் இதோ எதிரே நிற்கிறார்! அதே நெற்றி, அதே கண்கள், அதே மீசை—இது என்ன கோகாபாபாவின் ஆவியா?

உதறும் உடலுடன் பதறும் மனமும் கொண்டு அர்ஜுனன் வெகுநேரம் அப்படியே பார்த்துக்கொண்டு நின்றான்—இளைஞன் தன் நண்பர்களுடன் சென்றுகொண்டிருப்பதை.

அந்தச் சமயம் அவனை நெருங்கிய அவன் பையன் அவன் கையைப் பிடித்து அசக்கி, "அப்பா, இது யார்?" என்று கேட்டான்.

"குழந்தாய்! கோகாபாபா வந்திருந்தார்."

"கோகாபாபாவா?!"

"ஆம், ஐம்பது வருஷத்துக்கு முந்தி இருந்தது போலவே இன்றும் வந்திருந்தார்."

பையன், "இது என்ன? அப்பாவுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?" என்று எண்ண ஆரம்பித்தான்.

அர்ஜுனன் அதை அறிந்து கொண்டான்.

"ஆமாம் அப்பா, யமன் அவரைத் திருப்பி அனுப்பியிருக்கிறான். அது போகட்டும் போ. ஸோமநாததேவர் நமக்கு இந்த விஷயத்தை முன் கூட்டியே தெரிவித்தாரே!" என்றான்.

2

மார்வாரிலிருந்து பட்டண் செல்லும் வழியிலுள்ள கிராமங்களில் எல்லாம் இந்தச் செய்தி பரவிவிட்டது. கஜினி அமீர் வருகிறான் என்ற செய்திக்கு இறக்கை முளைத்து வெகுநாளாகவே பறந்து பரவிக்கொண்டிருந்தது. கஜினி சேனையின் அளவும் அவர்களுடைய கற்பனையுடன்கூட விரிந்துபோய்க் கொண்டேயிருந்தது. இதைக் கேட்ட பலர் பரிகாசமும் செய்தனர். ஸோமநாதருடைய ஆலயத்தை உடைக்க என்ன அவனுக்குப் பைத்தியமா? அல்லது இரண்டு தலையா? என்று கேட்பவரும் உண்டு, இப்பொழுது

இன்னும் சில விஷயங்கள் கால் முளைத்து நடந்து பாய ஆரம்பித்துவிட்டன. கோகா பாபா கஜினி கையினால் இறந்துவிட்டார். அவர் பிறகு பூதமாகி அர்ஜுனனுக்கு எச்சரிக்கை செய்தார். பிறகு ஒட்டகத்தின்மேல் ஏறிக்கொண்டு ஸோமநாதரைக் காப்பாற்றப் போயிருக்கிறார் என்ற இந்த விஷயம் கேட்ட ஒவ்வொருவரையும் திகைக்க வைத்தது.

மற்றக் கிராமத்தவர்களும் இதைச் சுலபமாக நம்பினார்கள். முந்தாநாள் இரவு ஒட்டகங்கள் பறந்து செல்வதை அந்தக் கிராமத் தலைவரும் பார்த்தனர்! அவைகள் அவருடைய வீட்டு வாசல் வழியேதான் பறந்து சென்றன. முன்னால் இருந்த ஒட்டகத்தின்மேல்தான் கோகா பாபா இருந்தார். அவருடைய கண்கள் பார்க்கப் பயங்கரமாக இருந்தன. அவருடைய குரலோ பாதாளத்திலிருந்து பேசுவதுபோல் இருந்தது! அவரும் இவர்களிடம் சொன்னார். "போ, கிராமத்து ஜனங்களைக் காட்டுக்குள் அழைத்துச் செல். கஜினி அமீர் வருகிறான்" என்றார். நேரே சண்டையிடுவது கஷ்டம். பிறகு தைரியமிருந்தால் பின்னாலிருந்து ஒடுக்கலாம்! என்றும் புத்திமதி சொன்னார்.

மற்றும் ஒரு கிராமத்தில் ஒரு பெண் தண்ணீர்க் குடம் தாங்கி வந்துகொண்டிருந்தாள். வழியிலேயே கோகாபாபாவைப் பார்த்தாள். அவர் பெண்ணிடம் தண்ணீர் கேட்டார். பெண் பயந்துபோனாள். இமை அசையாத கண்கள் அவள் உள்ளத்தைத் துடிக்க வைத்தன. கண்களில் இமை இருந்தாலல்லவா அசையும்? ஆவியின் இமைகள் அசைவதுண்டா? பெண் தண்ணீர் கொடுத்தாள். ஆனால் அவர் தாகம் அடங்குவதாகக் காணோம். எப்படித்தான் அடங்கும்? மிலேச்சனல்லவா அவரைக் கொன்றிருக்கிறான். அவருடைய ஆத்மாவுக்குத் திருப்தி ஏற்படுமா? குடம் தண்ணீரும் குடித்துவிட்டார். அப்பொழுதும் அவருக்குத் தாகம் தணியவில்லை. பிறகு கோகாபாபா சொன்னார். "அம்மா உன்னுடைய கிராமத்துக்குச் சென்று எல்லாரையும் காட்டுக்குள் சென்று ஒளிந்துகொள்ளச் சொல். கஜினி அமீர் படையெடுத்து வருகிறான்."

3

பிரபாசிபட்டணில் கங்க சர்வக்ஞர் பூஜை முடித்துவிட்டுத் தம்முடைய இடத்திலிருந்து ஸோமநாதருக்கு வில்வ பத்திரம் கொண்டு அர்ச்சிக்க எழுந்தருளிக் கொண்டிருந்தார். அவருடைய முகம் எப்போதும்போல் தேஜஸும் சாந்தமும் கொண்டு பொலிந்தது. பிரபாசி க்ஷேத்திரத்திலும் கஜினி படை எடுப்

பின் கதைகள் பரவ ஆரம்பித்திருந்தன. என்றாலும் ஜனங்கள் பயப்படும் அவ்வளவு பரவ ஆரம்பிக்கவில்லை. சில வீரர்கள் சரடுவிட்டுக் கொண்டிருந்தனர். மூல்தானிலேயே மிலேச்சன் மரித்துவிட்டான் என்றனர். பாலைவனத்தில் பொசுங்கிவிட்டான் என்றும் திரித்தனர், ஸோமநாதர் இருக்கும்வரை ஸௌராஷ்டிரத்தில் கால்வைக்க யாருக்குத்தான் தைரியம் வரும்? பீமதேவன் மிலேச்சனைத் துண்டாடத் தயாராயிருக்கும்போது பிறகு என்ன கவலை? தாமோதரன் வார்த்தையைக் கேட்டதும் கங்க சர்வக்ஞரின் இதயத்தில் கொஞ்சம் சஞ்சலம் ஏற்பட்டது உண்மைதான். ஆனால் பிறகு குறிப்பிட்ட ஒரு செய்தியும் கிடைக்காததனால் அவர் அதைப்பற்றிச் சிரத்தை கொள்ளவில்லை. மிலேச்சனுடைய சேனை பாலைவனத்தில் வெயில் தாங்காமல் உலர்ந்துவிட்டது என்ற ஒரு கதையும் நடமாட ஆரம்பித்தது. கடவுளுடனே கைகலக்க முற்படுபவனுக்கு வேறு என்னதான் நடக்கும்?

கோயிலில் எல்லாம் வழக்கம்போல் நடந்து கொண்டிருந்தது. பகவானுக்கு அருகில் ஆதியும் அந்தமும் அற்ற ஒரு அமைதிகொண்ட சூழ்நிலை வழக்கம்போல் இருந்துவந்தது. சிருஷ்டி காலத்தில் உரு எடுத்த இந்த உலகம் பிரளய காலத்தில்தான் அழியும். அதற்கு நடுவே ஒரு மிலேச்சனுடைய சற்றுநேர விளையாட்டு என்ன மாறுதலை ஏற்படுத்திவிடப் போகிறது? பூஜை நடந்தது; ருத்ரபாடம் நடந்தது. நர்த்தகிகள் நர்த்தனம் அதன் பாட்டில் நடந்துகொண்டிருந்தது. ஆரத்தியில் ஒன்றும் குறைவில்லை. பக்தர்கள் பக்தி செலுத்திக்கொண்டிருந்தனர். சூரியனும் வழக்கம்போல் உதித்தான்; அஸ்தமித்தான். ஸோமநாதர் கொடியும் காற்றுடன் ஆட்டம் போட்டுக்கொண்டிருந்தது.

கோயிலுக்குப்போக எண்ணிய கங்க சர்வக்ஞர் காலில் பாதுகைகளை மாட்டிக்கொண்டார் ஒரு காலைத் தூக்கியும் வைத்தார். அந்தச் சமயம் ஒரு சிஷ்யன் ஓடோடியும் வந்து 'குரு தேவா! யாரோ வந்திருக்கிறார்' என்றான்.

கங்க சர்வக்ஞர் அனுமதி கொடுப்பதற்குள்ளேயே அந்த மனிதன் வேகமாக உள்ளேவந்து விட்டான். அவன் முகம் பொலிவற்ற தோற்றம் அளித்தது. அவனுடைய விசால



மான கண்கள் ஒளி நீங்கிப் பயங்கரமாகக் காணப்பட்டன. அவன் கங்க சர்வக்ஞருடைய கால்களில் விழுந்து புரண்டு-நமசிவாய என்று வணக்கம் தெரிவித்தான்.

"சிவாய நம:" என்று பதில் சொல்லி, கங்க சர்வக்ஞர் "எழுந்திரு அப்பா, என்ன சமாசாரம்?" என்று கேட்டார். எழுந்து நின்ற அவனுடைய நெற்றியில் கோடுகள் பயம் காட்டி எழுதி நின்றன.

"குருதேவா! என்னை அறியவில்லையா?" என்ற அவனுடைய மூச்சிலேயே கண்ணீர் கலந்து வந்தது. கங்க சர்வக்ஞர் அவனை அறிந்துகொண்டார். உடனே வில்வபத்திரத்தையும் ஜல பாத்திரத்தையும் தம் சிஷ்யனிடம் தந்தார்.

"யாரப்பா? ஸஜ்ஜனனுடைய புத்திரனு? இப்படி எங்கே வந்தாய்? குழந்தாய்! ஸஜ்ஜனன் எங்கே? கோகா ராணு எங்கே? நீ ஏன் திரும்பி வந்துவிட்டாய்?" என்று ஆவலுடன் கேள்விகளைச் சரமாரியாகத் தொடுத்தார்.

சாமந்தனும் ஆவலுக்கும் களைப்புக்கும் இடையே போராடித் தவிக்கும் வார்த்தைகளால் தன் செய்தியைத் தெரிவிக்க ஆரம்பித்தான்.

"குருதேவா தாங்கள் உத்தரவிட்டீர்களல்லவா? கோகாராணுவின் வமிசத்தில் யாராவது உயிருடன் இருக்கும்வரையில் ஸோமநாத தேவரின் விரோதியை இங்கேவிடக்கூடாது என்று. என்னைத் தவிர எல்லோரும் இந்த உத்தரவை... [சாமந்தன் அழுதான்].....நிறைவேற்றிவிட்டார்கள்" என்ற வார்த்தைகள் கண்ணீரிலேயே நீந்தி வந்தன.

கங்க சர்வக்ஞர் கலங்கினர். அது எப்படி? என்று துடித்தார். "கோகாபாபாவும் அவருடைய பரிவாரமும் ஒரு குஞ்சுவிடாமல் கோகா துர்க்கத்துக்கெதிரிலேயே உயிரைத் தத்தம் செய்துவிட்டனர். என் தந்தையும் ஆயிரம் மிலேச்ச வீரர்களைப் பாலைவனத்தில் வறுத்துப் பறக்கவிட்டுக் கைலாயத்தை அடைந்துவிட்டார்." சாமந்தன் ஆட ஆரம்பித்தான். கங்க சர்வக்ஞர் எழுந்து அவனை அணைத்துக்கொண்டார். அவன் தலையைத் தம் விசாலமான மார்பில் தாங்கி ஏந்திக்கொண்டார்.

"குழந்தாய், அழாதே. பகவானுடைய கட்டளையைத் தலைமேல் ஏந்திச் செல்கிறவர்களுக்குக் கைலாயத்தில் இடம் நிச்சயம் உண்டு. அது சரி பிறகு! நீ எப்படி வந்தாய்?"

"பிறகு நான் கஜினியின் உயிரைக் குடிக்க அவனுடைய கூடாரத்தில் சென்றேன். ஆனால் அவன்மேல் பாயும் தருணம் ஆட்கள் என்னைப் பிடித்துக்கொண்டார்கள். தேவரீருடைய கட்டளையை நிறைவேற்ற இயலாமல் போய்விட்டது. நான் மிகவும் சீரழிந்தவன். என் குடும்பத்திலேயே நான்தான் பாக்கியம் கெட்டவன். உயிருடன் இருக்கிறேன். மிலேச்சன் என் உயிரையும் வாங்காமல் விட்டுவிட்டான்."

"குழந்தாய், திரிசூலதாரி உன்னைக் காக்கும் வரையில் எந்த மிலேச்சனுக்குத் தைரியம் வரும் உன் உயிரை வாங்க? அமைதியாயிரு. கலக்கமடையாதே, தாக சாந்தி செய்துகொள்."

சாமந்தன் எப்படியோ அழுகையை நிறுத்தித் தன் கதையை முழுவதும் விடாமல் சொல்லி முடித்தான். கங்க சர்வக்ஞரும் ஓம் நமசிவாய என்று பெருமூச்சுவிட்டுக்கொண்டே கேட்டுக்கொண்டிருந்தார்.

"இப்பொழுது கஜினி அமீர் எதுவரை வந்திருப்பான்?"

"குருதேவா! ஐந்து அல்லது ஏழு நாட்களில் ஆபூ பக்கம் வந்துவிடுவான். அல்லது இன்னும் ஐந்து பத்து நாட்கள் ஆனாலும் ஆகலாம்."

சர்வக்ஞர் தமக்குப் பேசிக்கொள்வது போலவே, ஸோலங்கி வீரன் பீமதேவன் பட்டணிலிருந்து அவன் வழிபார்க்கிறான். பீமதேவனைத் தோற்கடிப்பது என்பது எளிதல்ல."

"குருதேவா, இது அசட்டுத்தனம்"

"எது?"

"கஜினியை எதிர்த்து நிற்பது......!"

"பிறகு......"

"குருதேவா, யாருக்கும் கஜினி அமீரின் சக்தியைப் பற்றிய சரியான கற்பனைகூடக் கிடையாது. அவன் அரக்கனாயிருந்தபோதிலும் மனிதரை வசப்படுத்தும் ஓர் அற்புத சக்தியைக் கொண்டு உதித்திருக்கிறான். அவன் கார்த்திகேயனைப் போன்ற யுத்த சாமர்த்தியத்தைப் பெற்றிருக்கிறான். அவன் சேனையோ கடலைப் போன்று அகன்று இருக்கின்றது. பட்டண் அவன் எதிரே தானே விழுந்து குவியலாகிவிடும்."

"அட பையா! உனக்குப் பினாகபாணியின் வலிவில் நம்பிக்கை உண்டா?"

"ஆம் உண்டு." ஆனால் உங்களுடைய இந்த வீரர்களுடைய புத்தியில் எனக்கு நம்பிக்கை இல்லை. கஜினியின் படை எடுப்பைப்பற்றி முதன் முதல் கேள்விப்பட்டபோது இவர்கள் என்ன நினைத்தார்கள்? விரல் நொடிக்கும் நேரத்தில் அவனை அழித்துவிடலாம் என்று தானே! வாக்பதியரசனும் அவ்விதம்தான்

எண்ணியிருந்தார். கோகா பாபாவும் அப்படியேதான் நம்பியிருந்தார். அதனுல்தான் அவர் அழிந்தார். சௌஹான் வீரன் வாமல தேவனும் அப்படித்தான் எண்ணியிருந்தார். அவரும் சண்டையில் கசக்கிப் பிழியப்பட்டுவிட்டார். நான் கஜினி சேனையிலேயே அலைந்திருக்கிறேன். நான் அவனுடனே பேசியும் வந்திருக்கிறேன். நான் அவனுடைய புயவலியை என் கண்ணுல் பார்த்தேன். அவனுடைய தூண்டுதல் சக்தியையும் அளந்து கண்டேன். அவன் அப்படியே திரிபுராசுரனுடைய அவதாரம்."

"அப்படியானுல் சரி. சங்கரன் அவனை முடித்துவிடுகிருர்."

"சங்கரன் முடிப்பார் என்பது வாஸ்தவம் தான். ஆனுல் பீமதேவனைக் கொண்டல்ல என்பது மட்டும் திண்ணம்."

"அப்படியானுல்உன் அபிப்பிராயம் என்ன?"

நான் வழியில் எல்லோரிடமும் சொல்லிவந்திருக்கிறேன். அதையே தங்களிடமும் சொல்கிறேன், கஜினி வந்தால் பேசாமல் வழிவிட்டு விடவேண்டியதுதான். பட்டண்விட்டுச் சௌராஷ்டிரம் வரட்டும். பிறகு பின்னுல் இருந்து தாளிட்டுக்கொள்வோம்; களைப்படைந்த சைனியத்துடன் திரும்பிவரும் அவனை அழித்துக் கட்டுங்கள். இதைவிட்டால் வேறு ஒரு வழியும் கிடையாது."

"ஆனுல் அவன் இங்கே வந்து சேர்ந்துவிட்டால்...?"

"அதற்காகத்தானே நான் இங்கே வந்திருக்கிறேன். குருதேவா, நீங்கள் பிரபாசியைவிட்டு எங்கேயாவது சென்றுவிடுங்கள், கஜினி இஷ்டப்பட்டபோது வரட்டும். வந்து ஒன்றுமில்லாத பிரபாசியைத் தரிசனம் செய்துவிட்டுப் போகட்டும்,"

கங்கசர்வக்ஞர் இதைத் கேட்டுக் கண்களை மூடிக்கொண்டு சற்றுநேரம் அமர்ந்திருந்தார்.

"குழந்தாய், கஜினியை நேரில் எதிர்ப்பது சரியல்ல. அவன் வரட்டும். பின்னுல் இருந்து பெட்டியை மூடி மூச்சுத் திணறவைக்கலாம் என்றுதானே சொல்கிருய்! சுக்ராசாரியாருடைய உருவம் தாங்கி ஸ்ரீ கிருஷ்ணன் தைத்யர்களைச் செய்ததுபோல!"

"ஆம், அதுதான் என் தாழ்ந்த அபிப்பிராயம்."

"அப்படியானுல்...கங்கசர்வக்ஞர் ஆழ்ந்த யோசனையுடன் தாடியைத் தடவிக்கொண்டே சொல்ல ஆரம்பித்தார்: "நான் பிரபாசிவிட்டு ஓடிவிட்டால் என் பகவானை என்ன செய்வது? அவரையும் எங்கேயாவது எடுத்துப்போய் விடுவதா?"

"ஆம். அதுதான் சரி."

"அப்பா சகல உலகத்தையும் காப்பாற்றும் பகவான் ஸோமநாதரை மிலேச்சர்களிடம் பயந்துகொண்டு ஒளித்துவிடுவதா?" கங்கசர்வக்ஞர் இதைக் கேட்டபோது அவர் தூங்குகிருரா அல்லது ஆழ்ந்த யோசனையில் தம்மை மறந்து இருக்கிருரா? என்பதே புரியாமல் இருந்தது.

"ஆம் வேறு ஒரு வழியும் கிடையாது"

"அப்பா, ஆக்கலின் முதலில் உண்டாகி. நூற்றுக்கணக்கான ஒளிக் கற்றைகளால் விளங்கும் இந்தப் பிரளய சமுத்திரத்தின் உக்கிரத்தையும், அக்னிக் கூட்டத்தின் சேர்ந்த ஒளியையும் கொண்ட ஆதி அந்தமற்ற ஜோதிலிங்கத்தை இடம் மாற்றுவதா?" கங்க சர்வக்ஞரும் சிவபுராணம் சொல்வதுபோல் சொல்லிச் சென்ருர். சாமந்தனும் அந்த எண்ணக் கோணங்களை அறியமாட்டாதவன் போலவே பார்த்துக்கொண்டிருந்தான்.

"நான், சங்கரருடைய அவதாரமான லகுலேசருடைய மதத்தை ஸ்தாபித்தவனுகிய நான், சங்கரனுடைய பரந்த கருணையின் பலம் கொண்டு புத்தி தெளிந்த நான், சந்திரன் கையாலேயே கட்டிமுடிந்த இந்தக் கோயிலை விட்டு அவரை வெளியேற்றுவதா?"

"குருதேவரே!"

கங்க சர்வக்ஞர் தம் ஆள்காட்டி விரலைத் தூக்கி நிறுத்தி அவனைப் பேசவொண்ணுமல் தடுத்தார். பிறகு கொஞ்ச நேரம் கண்களை மூடி அவ்வாறே அமர்ந்திருந்தார். சாமந்தனும் அப்படியே அவரைப் பார்த்தபடியே அமர்ந்திருந்தான்.

கங்க சர்வக்ஞர் கண்களைத் திறந்தார். அவர் கண்கள் மலர்ந்தன. அவைகளில் ஒளி தேங்கி நின்றது.

'குழந்தாய், பகவானுடைய ஜோதிலிங்கம் பிரளய காலத்தில் கூட இடம் பெயர இயலாது. அது எங்கேயோ அங்கேதான் நானும். மிலேச்சன் ஆனதைச் செய்து கொள்ளட்டும்." சாமந்தன் நடுங்க ஆரம்பித்தான்.

சாமந்தன் என்ன செய்வான்? ஒளியின் பிழம்பான இந்த யோகீசுவரரிடம் அவன் என்னதான் சொல்வான்?

"சரி, பீமதேவனுடைய சேனையைத்தான் இங்கு வரவழைத்துவிடுங்கள். அவன்

தனித்து நின்று பட்டணில் துவைக்கப்பட்டு விடுவான்."

"யுத்தத்துக்கு அணிவகுக்கும் வேலை என்னுடையதல்ல. நான் ஒரு கடிதம் தருகிறேன். பட்டணுக்கு நீயே எடுத்துக்கொண்டு செல். பீமதேவன், தாமோதர மேதாவுடன் பேசிப் பார். அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்று தெரிந்துகொள்."

"சரி, இன்று இரவு இங்கே களைப் பாறிவிட்டு நாளைக் காலையில் செல்கிறேன்."

"அப்படியே செய். மறுபடியும் போகும் போது ஒருமுறை பார்த்துவிட்டுச் செல்.

நான் மறுபடியும் ஸ்நானம் செய்துவிட்டு, கோவிலுக்கு அபிஷேகம் செய்யப்போகிறேன்"

கடந்த நான்கு மாத நிகழ்ச்சிகள் சாமந்தன் தலையில் ஒரு பெரிய மலைபோல இறங்கியிருந்தன. அவனுடைய பெரியவர்கள், அண்ணன் மார்கள், அண்ணி, சகோதரிமார்கள் எல்லோரும் இறந்து கழுகுக்குணவாகி அல்லது எரிந்து காற்றாகிவிட்டனர். அவன் தந்தை தேவர்களுக்கும் கிட்டாத ஓர் மரண தேவதையுடன் ஆலிங்கனம் செய்துகொண்டார். அகன்ற உலகில் பரந்த புகழ்கொண்ட கோகா குலத்தில் இன்று அவன் ஒருவன்தான் பேர் சொல்ல உயிர்த்திருந்தான். வீடா, வாசலா, உற்றாரா உறவினரா ஒருவரும் இல்லை. பகவான் ஸோமநாதருடைய கட்டளையை நிறைவேற்றவே அவன் உயிருடன் இருந்தான். மிலேச்சனுடைய தலையை அவனுடைய உடலிலிருந்து துணித்தல் தவிர அவனுக்கு இந்த வாழ்நாளில் வேறு வேலை கிடையாது. இல்லாவிடில் எல்லோரையும் மாய்த்து ஸோமநாதன் அவனை மட்டும் ஏன் உயிருடன் வைத்திருக்கவேண்டும்?

சர்வக்ஞரின் சந்நிதானத்தைவிட்டுப் புறப்பட்டது முதல் அவன் இதையே எண்ணிக் கொண்டிருந்தான். சர்வக்ஞரின் தன்னம்பிக்கையும் அவருடைய அருள் மொழிகளும் அவனுக்கு உதவியளித்தன. ஆபூ, பிரபாசி இரண்டிற்கும் இடையே என்ன நடக்குமோ? அல்லது என்னதான் நடக்காது? அல்லது வருங்காலம் கழிந்தகாலம் இரண்டையும் அறியக்கூடிய இந்தப் புண்ணியவானின் வாக்குத்தான் பலிக்கக்கூடாது என்று எப்படிச் சொல்ல முடியும்?

அவன் கோயில் பக்கம் திரும்பினான். அப்பொழுது அவனுடைய உள்ளத்தில் 'மானுட இளைஞன்' உயிர்த்தெழுந்தான். அவனுடைய தெய்வம், அவனுடைய தந்தை, பிறகு அந்த யுவதி—'வெற்றியுடன் திரும்பிவா!' என்றாளே அந்த யுவதி இவர்கள் ஞாபகம் மற்ற எண்ணங்களை மறைத்தெழுந்தது. ஆகா, அந்தப்பெண்! தன் தந்தைக்கு விபூதிப் பொட்டிட்டாளே, அந்த அணங்கு. அவளுடைய முறுவல், அவளுடைய சொற்கள், அவனுடைய உயிருடன் பொருந்தி நின்றன. அவன் போய்விடுவான். மிலேச்சனுடைய உயிரை வாங்கவேண்டிய முக்கியமான வேலை அவனை அழைத்துக் கொண்டிருந்தது. மறுபடியும் கோவிலுக்கு வருவானோ இல்லையோ, யார் கண்டார்கள்? விதி அவனை அழைத்து வந்து விட்டிருக்கிறதே! இதை ஏன் அவன் பயன்படுத்திக்கொள்ளக் கூடாது? வறண்ட வாழ்க்கையில் ஓர் இனிய தேன் சொட்டை நாக்கு நுனியில் வைத்து ருசி பார்க்கக்கூடாது?

அவன் மெதுவாக அலைந்து திரிந்து கோயில் பக்கம் வந்தான். நாலு பக்கங்களிலும் ஆசை விரியப் பார்வைகளைச் செலுத்தினான். அவன் அங்கு எங்காவது அந்த முகத்தை, அந்தக் கண்களை, அந்த விரல்களின் அழகைக் காணலாம் என்று ஏங்கினான். ஆனால் அந்த ஆசை பயனைக் காண இயலவில்லை. அவன் பளுக் கொண்ட இதயத்துடன் கடவுளை வணங்கினான். வில்வ இலைகளை எடுத்துக் கடவுள் பாதங்களில் போட்டான். நீரிருக்கும் கண்களுடன் கடவுளைத் துதித்தான். இவ்வளவு நாளாக அவன் அனுபவித்த துயர்கள் இன்று அவன்மேல் தம் இயற்கையைக் காட்ட ஆரம்பித்தன. சில நாட்கள் அவன் பயங்கொண்ட நடைப்பிணம்போல் சுற்றி யலைந்திருந்தான். அந்தக் காட்சி!—அவன் தனியே ஆதரவற்றுப் பயத்தால் கசக்கப்பட்டு அலைந்த அந்தக் காட்சி! அவன் உயிர் அசைய மறுத்தது. சபா மண்டபத்தின் ஒரு மூலையில்போய் அமர்ந்து கொண்டான். தலையைக் கால்களில் சார்த்தி உள்ளத்தை உருக்கும் வண்ணம் அழ ஆரம்பித்தான்.

ஒருவர் பின் ஒருவராய்த் தன் அன்பர்களை எல்லாம் எண்ணி எண்ணி அழுதான். கோகா பாபா—வீரன், அநேக அதிசயக் கதைகளின் விக்ரமாதித்தன்; தன்னுடைய தந்தை—கஜினி அமீரைத் தனித்திருந்து கண்ணில் விரல் கொடுத்து ஆட்டியவன், மங்கையர்க்கரசியான அவன் தாய்—வானுறை பெருந்தேவி—பாதி எரிந்த தன் கையை அடையாளம் காட்டி விட்டுச்சென்ற அந்த மாதர் திலகம்; அவனுடைய தங்கை—நான்கு வயதும் நிரம்பாத அந்த இளம் குழந்தை; அதனுடைய பாதி எரியாத காலையும் பார்த்திருந்தான்—சாமந்தன். இன்னம் மற்றவர்;—எல்லோரும் ஒருவர்பின் ஒருவராயும் கூடியும் வந்து அவன் மனக்கண் முன் நின்று வாட்டி வதைக்க ஆரம்பித்தனர். அவன் கண்களிலிருந்து நெருப்புத் துளிகளன்ன நீர்த் துளிகள் பாய்ந்து ஓட ஆரம்பித்தன.



எவ்வளவு நேரம்வரை அழுதிருந்தானோ அந்தப் பாலகன்! ஒரு பெண்ணின் தீங்குரல் அவனை எழுப்பிற்று. இருபத்தைந்து வருஷங்கள் நிரம்பிய ஓர் நர்த்தகியின் மது நிறைந்த கண்கள் மயக்கும் ஒரு ரஹஸ்யத்தை அவன்மேல் ஊற்றிக் கொண்டிருந்தன.

"நாயக்! ஏன்? அழுகிறாய்? சங்கரன் திரு உளப்படியே தானே எல்லாம் நடக்கும்!"

சாமந்தனுக்கு அந்த அழகியின் முகம் ஓர் கசையடியே தந்தது. அவள் நர்த்தகி. அதே நர்த்தகிதான். ஆனால் அந்தக் கண்கள்? மைதீட்டி மையல் க்காட்டும் — அதை மறைக்கும் மாய விழிகள்! ஆனால் அவன் கற்பனையை மாசு மறுவற்ற அந்த மருள் விழிகள், பிள்ளை விழிகள்தான் சூழ்ந்து நின்றிருந்தன.

"நாயக்! அழுவதால் என்ன லாபம்? வா, என்னுடன். உனக்கு இன்பம் ஊட்டுகிறேன்." என்றாள் அந்த உலகறிந்த மங்கை.

"என் அழுகையை மாற்றுவாயா? அடி, பெண்ணே! உலகில் என் கண் துடைக்க யாராலும் ஆகாது அக்கா!"

"நீங்கள் எண்ணுவது தப்பிதம்." என்று அவள் வாய் சொல்லிக்கொண்டிருக்கும் போதே அவளுடைய கண்கள் கடைவிழி விழித்து அவனை வலைவீசி இழுக்க முயன்றன. திரிபுர சுந்தரியின் கிருபை உள்ள இடத்தில் தண்ணீர் கேட்டால்கூட வராது. வா கூட என்னுடன்."

சாமந்தன் எழுந்தான். 'எங்கே?' என்று கேட்டுக் கொண்டே. சர்வக்ஞருடைய ஆட்கள் அவனைத் தேடிக் கொண்டிருப்பர். என்றாலும் இந்த மனச்சுமையைச் சற்று நேரமாவது அவிழ்த்து வைக்க இடம் வேண்டுமே.

அவள் கீழே குனிந்து சொன்னாள். "இன்று திரிபுரசுந்தரிக்கு உற்சவ நாள். என்னுடன்

ஒருவரும் இல்லை. வா. பலநாள் பாவம் கழிந்துபோகும்."

அவனுக்கு அதன் பொருள் விளங்காமலேயே, திரிபுரசுந்தரியின் உற்சவமா? என்று கேட்டான். அவனுக்குக் கோயிலின் ஒரு மூலையில் சங்கரனின் பாதி யுடலாளுக்குப் பூஜை நடக்குமிடம் இருக்கிறது என்று தெரியும்; கேள்விப்பட்டிருந்தான். அந்த உற்சவத்தைப் பரம்பரை பரம்பரையாகப் பெண்களும் ஆண்களும் மிகவும் பயங்கரமான விதிகளுடன் கொண்டாடிவந்தனர் என்றுமட்டும் அதற்கு அதிர்ஷ்டம் கொண்டவர்களே அறிவர். அவைகளை அறியச் சாமந்தன் உள்ளத்திலும் ஓர் ஆசை எழும்பிற்று. "ஆம், நானெப்படி வருவது?—நான் தீக்ஷை பெற்றவனல்லவே" என்று கேட்டான்.

"இல்லை. நீங்கள் தீக்ஷை பெற்றவர்கள் தான். நேற்று இரவு மகா சக்தியே என் கனவில் வந்து சொல்லியிருக்கிறாள்."

சாமந்தன் இதயம் எழுந்து கூத்தாட ஆரம்பித்தது. என்ன இவள் சொல்வது உண்மையா? பார்வதியம்மன் தன்னைக் கைதூக்கி விட அருள் புரிவாளா? மிலேச்சனைக் கொல்லும் பாக்கியம் கிட்டப் போகிறதா? தனக்கு அந்தப் பெருமை கிட்டப் போகிறதா?

"நீ யார்"

"நான் குண்டலா. தேவதாஸி. நடவும்."

நர்த்தகியைத் தொடர்ந்த சாமந்தன் அங்குள்ள ஒரு வாயில் வழியே சென்று நர்த்தகிகளின் குழுவில் இடையே சென்றடைந்தான். இந்தப் புதிய சூழ்நிலையில் சென்றடைந்ததும் அவனுடைய உணர்வுக் கண்கள் தாமே மூடிநின்றன. மஹா சக்தி திரிபுரசுந்தரியின் ரஹஸியக் கோயிலில் உலகின் தாய் மஹா மாயாவின் உத்தரவு கொண்டு வந்து நிற்கிறான் என்ற எண்ணம் அவனை மற்றதை மறக்கச் செய்துவிட்டது. முன்னால் சென்ற குண்டலா ஒரு கதவின் சங்கிலியைத் தட்டினாள். உள்ளிருந்து யாரோ கதவைத் திறந்தனர்,

"யாரது?"

"நான்தான் குண்டலா."

"என்ன அவனும் வந்தானா?" என்று தன்னை மறந்து பாதிக் குரல் கேட்டது.

"ஓ." "சரி, அழைத்துவா"

அந்த மனிதன் கதவைத் திறந்தான். குண்டலாவும் சாமந்தனும் உள்ளே நுழைந்தனர். அங்கே ஓர் மேடையில் மூன்று சாதுக்கள் அமர்ந்திருந்தனர். அவர்கள் சாம்பலுருவாகவே தென்பட்டனர். அவர்கள் கண்கள் சிவந்திருந்தன. அவர்கள் ஏதோ மந்திரத்தை உச்சாடனம் செய்துகொண்டிருந்தனர்.



வாயில் திறந்த சாது ஒரு தீவட்டியைச் சுவரி லிருந்து எடுத்துச் சாமந்தன் எதிரே வைத்து நீ யார் எனக் கேட்டார்.

"நான் சென ஹான்."

"மஹா சக்தியின் பக்தனு?"

"நான் ஸோமநாதர், ஜகன்மாதா மஹா சக்தி இருவருக்குமே பக்தன்தான்" அதற்குள் குண்டலா, "இவன்தான் என் கனவில் வந்தவன்" என்ருள்.

"உனக்குத் தைரியம் உண்டா?" என்ருர் மற்ருெரு சாது;

"எதற்கு?" என்ருன் சாமந்தன்.

"உயிருடன் மஹா சக்தியின் தீக்ஷையைப் பெற்றுக்கொள்ள."

சாமந்தன் நாலு பக்கமும் பார்த்தான். குண்டலா அவனை விட்டு அகன்று வேறு வேலையில் ஈடுபட்டாள், அவள் தன் மேலே யிருந்த அதிகப்படியான துணிகளை அகற்றிக் கொண்டிருந்தாள். அசைந்து ஆடிக்கொண்டிருக்கும் தீவட்டியின் வெளிச்சத்தால் அலைக்கப்பட்ட இருட்டில் அவன் மேடையில் மறுபக்கத்தில் இருந்த ஒரு கதவின் வழியாகச் சில உருவங்கள் வெளியேறுவதைப் பார்த்தான். அவைகள் மனித உருவங்கள்தாம் என்று தோன்றின. !

திரிபுரசுந்தரியின் கோயிலில் எடுத்துக் கொள்ளப்படும் தீக்ஷைகளைப்பற்றிச் சாமந்தன் அனேக கதைகளைக் கேட்டிருந்தான். அவைகள் எல்லாம் மீண்டும் ஒரு முறை அவன் உள்ளத்தில் புதிதாக ஞாபகத்துக்கு வந்தன. என்ன அதற்காகத்தானு அவன் இங்கே அழைத்துவரப்பட்டிருக்கிருன் ? கஜினி இந்தக் கோயிலை உடைக்க வரும் இந்தச் சமயத்திலா, பட்டணுக்கு ஒட்டகத்தின் மேல் போய்க்கொண்டிருக்க வேண்டிய இந்த நேரத்திலா இங்கே இந்த அசட்டுத் தீக்ஷை ஏற்றுக் கொள்ள வந்து சேர்ந்தான் ?

"திரிபுரசுந்தரியின் விதிகளை ஏற்று நடப்பது என்பது என்ருல் இயலாத காரியம். நான் அதற்கு ஏற்றவனுமல்ல."

"பிறகு ஏன் இங்கு வந்தாய் ? பாபீ ! கடைப்பட்டவனே !" என்று சொல்லியவாறே ஒரு சாது சாமந்தன் கழுத்தைப் பிடித்தான். "மஹாமாயா கோபம் கொண்டால்......?"

"நான் என் இஷ்டப்படியா வந்தேன் ? குண்டலா அல்லவா என்னை இட்டுவந்தாள். இதோ நான் போகிறேன்."

"இதோ போகிருயா ? எங்கே போகிறது?" ஒரு சாது சாமந்தனுடைய கையைப் பிடித்துக் கொண்டான். "மஹாமாயையின் கோயிலை அபவித்ரமாக்கிவிட்டு நழுவிவிடுவது என்ற எண்ணமா?"

"விடும் என்னை !" சாமந்தன் அவனுடைய பிடியிலிருந்து விடுவித்துக்கொள்ள வீண் முயற்சிகள் செய்ய ஆரம்பித்தான், மற்றுமொரு சாதுவும் ஓடிவந்து அவனுடைய கைகளைப் பின்னுலிருந்து பிடித்துக்கொண்டார்.

"உன்னை விடுவதா? விடவேண்டியதுதான்." சாதுக்கள் பரிகாசம் கலந்து சிரிக்க ஆரம்பித்தனர்.

"விடுங்கள்.—குண்டலா ! இதற்குத்தான் என்னை இங்கே அழைத்துவந்தாயா ?" என்று சாமந்தன் அரற்ற ஆரம்பித்தான்.

குண்டலா இருட்டிலிருந்தே கத்தினுள், "அட பாவி ! என் கனவு இப்படிப் பாழகும் என்று நான் என்ன கண்டேன்? மஹாமாயா என்னிடம் அருள்கொண்டாள் என்றல்லவோ ஆவல் கொண்டேன். கடைசியில் நீ இவ்வளவு கர்வியாக முளைத்தாயே !" அவளும் ஒருமாதிரி குறை கூறினுள்.

"மஹாமாயையின் கோயிலை இழுக்கடையச் செய்து ஒருவரும் வெளியேற முடியாது."

சாதுக்கள் சாமந்தனை ஒரு தூணுடன் பிடித்துப் பிணைத்தனர். அவனும் விடுவிக்கும் முயற்சிகளை நிறுத்திக்கொண்டான். அவனுக்கு உயிருடனிருக்கவேண்டிய அவசியமும் தென்படவில்லை. அவன் சாதுக்களிடம் ஒரு வேண்டுகோள் விடுத்தான்.

"மஹாராஜ், என்னை மாய்க்கத்தான் வேண்டும் என்ருல் குருதேவர் சர்வக்ஞருக்கு ஒரு வார்த்தை சொல்லி அனுப்பிவிடுங்கள்."

சாது திடுக்கிட்டு ஒரு அடி பின்னடைந்தனர். "யார், கங்க சர்வக்ஞரா?"

"ஆம், அவர் என்னை எதிர் பார்த்துக்கொண்டிருப்பார்."

ஒரு சாது சாமந்தனை மிகவும் ஊன்றிக் கவனித்தார். "அப்படியா? சரிதான். அவர் உன் வழியைப் பார்த்துக்கொண்டே இருக்கட்டும்." என்று கொக்கரித்துவிட்டு அந்தச் சாது கீழே கிடந்த திரிசூலத்தைக் கையில் எடுத்தார்.

## பத்தாம் அத்தியாயம்

# மீண்டும் சந்திப்பு

### 1

**சா**மந்தன் முடிவு செய்துவிட்டான். இனி அவன் உயிருடன் இருக்க ஆவலும் கொள்ளவில்லை. அவன் கண்ணை மூடிக்கொண்டான். ஸோமநாதன் கோகாபாபா இருவரை

யும் எண்ணிக்கொண்டான். சரி, இன்னும் ஒரு நிமிஷத்தில் அவன் தன் தந்தை தாயுடன் சென்றடைவான்.

குண்டலா கத்தினுள். வீறிட்டாள். "கூடாது இன்று இங்கே ஆண் ரத்தம் ஒரு சொட்டுக்கூட விழக்கூடாது."

சாது கொஞ்சம் பின்னடைந்தார். அவள் தொடர்ந்தாள்: "மாகசக்தியின் கோயிலில் உற்சவ சமயத்தில் ஆண் ரத்தம் ஒரு சொட்டு விழுந்தால் உலகமே பாதாளத்தில் அமிழ்ந்து விடும்."

"சரி. ராசியிடம் கேள், என்ன செய்ய வேண்டும்?" என்று.

மூன்று சாதுக்களும் ஏதோ பேசிக்கொண்டனர். இரண்டு சாதுக்களும் குண்டலாவும் உள் வாயில் வழியாக எங்கோ சென்றனர். சாமந்தன் நிலை அரை விழிப்பு நிலையில் இருந்தது. இந்தக் கதவுக்குப்பின் திரிபுரசுந்தரியினுடைய என்னென்ன லீலைகள் நடக்கின்றனவோ? வெறுப்புத் தரக்கூடிய, பயம் ஊட்டக்கூடிய, உள்ளத்தைத் தூண்டி எரியவிடக்கூடிய எந்தெந்த விதிகள் இயற்றுகின்றனரோ? பாவம், இந்த அசடர்களுக்கு யமனைவிடப் பொல்லாதவனுன அந்தக் கஜினி அரக்கன் வருவது கொஞ்சம்கூடக் கவலையில்லை. யாருடைய கையில் அவனைக் கொல்லச் சாவி இருக்கிறதோ அவனை இந்த அசடர்கள் இங்கே கட்டிப் போட்டு விளையாடுகிருர்கள்! என்ன உலகம் பூராவுமே அதனதன் வழியில் யமன் வாயிலை நெருங்க ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறதா?

குண்டலாவுக்கு எல்லையற்ற துக்கம். அவள் நர்த்தகிகளுள் சிறந்த அழகி; மிகப் பெரிய பேராசையும் கொண்டவள். அவளும் ஒரு நாள் ஒரு புதிய குருவுக்குத் தாளுெரு கங்கா தேவியாக ஆகி, கோவிலை ஆள விரும்பியவள். மூன்று மாதங்களுக்கு ஒருமுறை இந்த மாதிரி உத்ஸவம் வரும்போது அவள் தானே மகாசக்தியைத் தாங்குபவளாக ஆகி எல்லோராலும் பூஜிக்கப்படவேண்டும் என்று கருத்துக்கொண்டவள். ஆனுல் கடந்த வருஷம் அவள் திரிபுரசுந்தரியை ஏற்கத்தக்கவளாக ஆகவில்லை. நேற்று அவள் இதற்குத் தகுதியுள்ளவளாக ஆகிவிட்டாள். மஹாமாயாவே அவள் கனவில் வந்து அதைத் தெரிவித்துவிட்டாள். கனவின்படி அவளுக்கு ஒரு இளைஞனும் கிட்டிவிட்டான். ஆனுல் எல்லாம் சரியாய்வந்து வெண்ணெய் திரளும் சமயத்தில் தாழி உடைகிறது!

அவளுக்கு மற்ருெரு ஆசையும் உண்டு. அவள் சிவராசியை வலைபோட எண்ணினுள். சர்வக்ஞருடைய சிஷ்யன், கொஞ்சகாலத்தில் குருவின் சிம்மாஸனத்தில் ஏறுவார். அவருடைய அருள் கிட்டிவிட்டால் பிறகு குண்டலா வைத்ததுதான் சட்டம். ஆனுல் அவரை வலையில் பிடிப்பதுகூட எளிதுதான். அவரை விடாமல் பிடித்துவைப்பதுதான் மிகவும் இயலாத காரியம். அவர் முற்றிலும் தம்மை அடக்கியவர் அல்ல, ஆனுல் அவருடைய மனது சௌளா தேவியிடம் அடைக்கலம் கொண்டிருந்தது. குண்டலாவின் மனதில் நம்பிக்கையின் ஒரு ஒளிக்கோடு இருந்தது. உற்சவநேரத்தில் மஹாசக்தி குண்டலாவை ஆட்கொண்டு அவள் மேல் இறங்கி அருளி, சிவராசியும் ஒருமுறை அவளுக்கு ஆரத்தி எடுக்க நேரிட்டால் அவர் மனது மாறலாம், திரிபுரசுந்தரியின் உற்சவமும் சாதாரண உற்சவம் அல்ல. மஹாசக்தி ஒரு பெண்ணின் உடலில் இறங்கி நிற்பது என்பது எளிதல்ல. தவிர அந்த நடனத்தில் அநேக அற்புத நிகழ்ச்சிகளும் நடந்தேறும். உற்சவ நேரம் நெருங்க நெருங்க, குண்டலாவின் மனம் அலைய ஆரம்பித்தது. கனவு பொய்த்தது, வீணுயிற்று. மஹாசக்தியாவது அவள்பேரில் வருவாளா? அதற்கேற்றபடி மூர்ச்சை வருகிறதா? அவள் அதற்கேற்ப மதுவும் அருந்திவிட்டாள். ஆனுல் ஒன்றும் பலனைக் காணுேமே. ஆகா, கடைசியில் கையில் வந்த சந்தர்ப்பமும் நழுவிவிடுமா?

இரண்டு சாதுக்களுடன் அவள் உள்ளே நுழைந்த அதே சமயத்தில் அவள் சாமந்தனை அழைத்துவந்த அந்த முன் கதவு மணிகள் அசையத் திறக்கப்பட்டது. சிவராசி வந்து கொண்டிருந்தான். அவள் திரும்பிப்பார்த்தாள். சிவராசியும் சித்தேசுவரரும் வந்துகொண்டிருந்தனர். அவள் தன்னையே மஹாமாயா என்று எண்ணிக்கொண்டு வீரிட்டாள். தலை சுற்றுகிறதாக எண்ணி, சாதுக்கள் அவளைத் தாங்குமுன் மயங்கிக் கீழே விழுந்தாள்.

திரிபுரசுந்தரி வந்துவிட்டாள் என்று நம்பிய சாதுக்கள் 'ஜகன்மாதா!' என்று கூவிக் கொண்டே குண்டலாவைத் தாங்க ஓடினர். சிவராசிக்குச் சினம் கனம் கொண்டது. அவன் வேகமாய் அறைக்குள் வந்தான். அவனுடன் அவன் நம்பிக்கைக்குப் பாத்திரனுன சித்தேசுவரனும் இருந்தான். சிவராசிக்குக் கோபம் தன் குருவினிடத்தில். தன் வாழ்விலேயே முதன் முறையாக அவன் தன் குருதேவரிடம் குறைகண்டு கடிந்துகொண்டான். இன்று காலை திரிபுரசுந்தரி சௌளாதேவியின்மேல் தான் வந்திருந்தாள். குருதேவர் அவளைப் பூஜைக்குப் போகக்கூடாது என்று உத்தரவு இட்டுவிட்டார். லகுலேச மதத்தின் ஸ்தாபனுச்சாரியார், ஞானக்கடல், ருத்திரமூர்த்தியின் மனித உருவான அவர் இன்று மதத்துக்குப் பெரிய தீங்கு இழைத்துவிட்டார். திரிபுரசுந்

தரியின் உத்ஸவத்துக்குச் செளளாதான் எல்லா விதத்திலும் தகுந்தவள். அப்படியும் குரு தேவர் அவளைத் தடுத்துவிட்டார்.

செளளா சிறுசு, ஒன்றும் அறியாதவள். திரிபுரசுந்தரிக்கேற்ற வாம மார்க்க விதிகளை அவள் வெறுத்தாள்; பயந்தாள். போன ஏகாதசி வரை அவளை இந்தக் கோயிலுக்கு அழைத்துவரப் பட்ட கஷ்டம் எல்லாம் அவள் தாயால் வீணாயிற்று. அவளே, என் மகள் சிறியவள். வேண்டாம். என்று சொல்லி வந்தாள். போன ஏகாதசியன்றுதான் அங்கே நடனமாட அவளுக்கு அனுமதி கிடைத்தது. இப்பொழுது அவள் சிறு பெண்ணல்ல. அவள் உடலில் மஹா மாயாவின் ஜோதியே இறங்கி நின்ற பிறகு அவள் பெண்ணுமல்ல, சிறுசுமல்ல. இந்தப் பேறடைய எல்லா நர்த்தகிகளும் உயிரை விடும்போது செளளாவுக்கு அது தானாகவே கிட்டியிருந்தது. காலையிலேயே அவள் தன் நிலை இழந்துவிட்டாள். அதுமுதல் கடவுளின் மறுபாதியான உமையைப் போலவே நடக்கவும் ஆரம்பித்திருந்தாள். அவள் எல்லா விதத்திலும் அதற்கு ஏற்றவளே. சிவராசியும் அவளே இன்று திரிபுர சுந்தரியின் பூஜையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்பினான்.

சிவராசிக்குச் செளளாவின் மனோநிலைமிகவும் புதியதொன்றாகக் காணப்பட்டது. போன ஏகாதசியன்று அவள் என்ன செளளாவாகவா இருந்தாள்? அவன் அவளைப் பார்க்கும் போதெல்லாம் அவள் தன்னை மறந்ததொரு நிலையில் உலவுவதைப் பார்த்தான். அவள் கண்கள் உலகத்தை மீறின ஏதோ ஒரு காட்சியைக் கண்டு மகிழ்வதுபோல் நிறைந்து நின்றன. அவள் குரலில், நடையுடையில் ஒரு தனிமை நடனமாடிக்கொண்டிருந்தது. மற்றப் பெண்களுடன் பழகுவதுபோல் சிவராசி அவளிடம் பழக இயலவில்லை. அந்த வலிவின்மை அதிகரிக்க அதிகரிக்க அவனுடைய மோகமும் அதிகரிக்க ஆரம்பித்தது. கங்காதேவியும் ஒன்றும் சொல்லவில்லை. அவள் சிவராசி செளளாவிடம் மனதைப் பறிகொடுப்பதில் விருப்பம் தான். ஆனால் உள்ளபடி பக்தியில் ஈடுபட்டு நிற்கும் அந்தப் பெண்கொடியைக் கசக்கி மடக்க அவள் தயாராயில்லை.

ஆனால் சிவராசி இரண்டு நாளாக இந்த நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். செளளா திரிபுரசுந்தரியானால் அவன் பூஜை செய்வான். பக்தன் என்ற முறையில் இடைவெளி நீங்கிவிடும் என்று எதிர்பார்த்தான். இந்த நம்பிக்கையும் மனதிலே எழுந்து மனதிலேயே அடங்கி நின்றது. குருதேவர் வழக்கமாக வந்த இந்த விதியை இன்று நிறுத்தி விட்டார். சிவராசி படித்தவன், பண்பாடடைந்தவன். குருவிடம் அசையாத பக்தி கொண்டவன். ஆனால் அவனிடம் கங்கசர்வக்ஞர் கொண்டிருந்த புத்தி விசாலம் கிடையாது. ஒரு நர்த்தகிக்காக இந்தத் தர்ம விரோதம் ஏற்பட்டது என்று எண்ண அவன் உள்ளம் தீயுண்டது. தான் பெற்ற தோல்வி அதில் நெய்யை ஊற்றியது. அவன் இங்கே வந்த பொழுதே கோபதேவி அவன்மேல் அமர்ந்திருந்தாள். அவன் புருவங்கள் ஏறி நின்றிருந்தன. குருவுக்குத் தர்மவிதியில் இடைப்பட என்ன அதிகாரம்? வேலிக்குப் பயிரை அழிக்க என்ன உரிமை? குருபக்தி என்றால் பொட்டை நம்பிக்கை கொள்ளமுடியுமா? இப்படி தர்ம விரோதமான கட்டளைகளை நிறைவேற்றி வைக்கலாமா? சாஸ்திரங்கள் எல்லாம் பொய்த்து, கங்க சர்வக்ஞர் மட்டும் உண்மையா? இந்த விதிக்கு ஆசார்யன் என்ற முறையில் சிவராசி என்ன செய்யவேண்டும்? என்று இவ்வாறெல்லாம் எண்ணி, சிவராசி உள்ளே வந்ததும் குண்டலாவைப் பற்றி அழைத்துக்கொண்டு இரண்டு சாதுக்களும் அவன் எதிரே வந்து சேர்ந்தனர்.

ஒரு சாது "ஆசாரியரே, குருதேவா! ஜகன் மாதா குண்டலாவின்மேல் இறங்கியிருக்கிறாள்!" என்று கத்தினான்.

சிவராசி பசிகொண்ட புலியைப்போல் சீறினான்: "விட்டுவிடுங்கள் இவளை. வேஷம் போடுகிறாள். முற்றிலும் வேஷம். மஹா மாயா செளளாவின்மேல் வந்திருக்கிறாள்."

குண்டலாவை அங்கேயே விட்டுச் சாதுக்கள் ராசியைச் சூழ்ந்துகொண்டனர்.

இவர்கள் இங்கே கத்திக்கொண்டிருக்கும் போதே சாமந்தன் உள் அறைப்பக்கம் பார்த்தான். அனேக மனித உருவங்கள் இவர்களை எதிர்நோக்கி அவசரம் காட்டிக் கொண்டிருந்தன. அவனுக்கு இவை என்ன கனவில் நடக்கின்றனவா என்ற சந்தேகம் எழுந்துகொண்டிருந்தது.

சிவராசியும் சினந்து நின்றான். "நானும் அதைத்தான் சொல்கிறேன். குண்டலா போடுவது வேஷம். உண்மைத் திரிபுரசுந்தரி, செளளாவைக் குரு தடுத்துவிட்டார்."

எல்லோரும் சற்று நின்று இதன் பொருளை அறிய முயன்றனர்.

கிழவன் வந்து ராசிக்கெதிரே கைகளைக் கூப்பினான். "ராசி அவர்களே! நீங்களும் விதியை நடக்க வொண்ணாமல் நிறுத்தினால் யார் செய்யமுடியும்? அனாதி காலமாக நடந்து வரும் ஓர் தர்மவிதியை இன்று நிறுத்தலாமா? இதை நான் பார்த்திருக்கமாட்டேன். எப்படியோ மகாமாயாவின் பூஜை நடந்தேற வேண்டும்."

சிவராசிக்கு நல்லதொரு வாய்ப்பு. இந்தச் சாதுக்களை வேண்டும்போது கங்க சர்வக்ஞர் காலைவாரிவிட்டால் சிவராசி என்றென்றும் குருவாயிருக்கலாம்.

சிவராசி ஒரு நிச்சயம் கொண்டான்.

2

சௌளாவுக்குச் சுயப்பிரக்கினை இல்லை. உற்சாகம் நிறைந்த அவள் கண்கள் கள்ளுணர்வு நிரம்பியிருந்தன. சற்று விலகியிருந்த அவள் ரோஜா உதடுகளிலிருந்து அடிக்கடி, 'என் சம்பு, என் நாதா!' என்ற சொற்கள் வந்துகொண்டிருந்தன. அந்தச் சமயம் அவளுக்கு அடிக்கடி மூர்ச்சை வந்து போய்க்கொண்டிருந்தது. அவள் வேடுவச்சி அல்லது பார்வதியினுடைய நிலைமையில் மாறி நின்று பகவான் சங்கரருடன் கைலாச பர்வதத்தின் மேல் அலைந்துகொண்டிருந்தாள். சௌளாவுக்குப் பைத்தியம்தான் பிடித்துவிட்டது என்று அவள் எண்ண ஆரம்பித்துவிட்டாள். ஆனால் கங்க சர்வக்ஞர் 'அப்படி எண்ணாதே, சிவபிரானுடைய பாதகமலத்தில் ஈடுபட இது சிறந்த தன்மையாகும்' என்று நம்பிக்கை கொடுத்தார்.

இந்த நிலைமையில் சித்தேசுவரனும் சிவராசியும் வெகு வேகமாக வந்து புகுந்தனர்.

கங்காதேவி திடுக்கிட்டாள். "ஏன், என்ன?" என்றாள்.

"சௌளா!" என்று சிவராசி பேச ஆரம்பித்தான். அதற்குள் தூரத்தில் இருந்து சங்கநாதம் முழங்கிற்று. அதைக்கேட்ட சௌளா விரிப்பில் எழுந்து அமர்ந்தாள், "என் நாதனுடைய சங்கநாதமல்லவா!" என்று தன்னை மறந்து கூவினாள்.

"அம்மா, என் கணவர் என்னை அழைக்கிறார். என்னை அழைத்துச் செல் அவரிடம். கடவுளே, சுவாமி, நாதா! இதோ வந்தேன்."

சிவராசி முகம் மலர்ந்தது.

"சித்தேசுவரா! கங்கையை இங்கேயே நிறுத்திவை. இவள் வந்து அங்கே என்ன செய்யப்போகிறாள்?" என்று சொல்லிவிட்டுச் சிவராசி சௌளாவை அழைத்துச் சென்றான். சித்தேசுவரன் கங்கையை வீட்டுக்குள் வைத்து வாயிற் கதவைச் சாத்தித் தாழிட்டான்.

சௌளா திரிபுரசுந்தரியின் கோயிலுள், ரகசிய அறை வழியாக உள்ளே வந்தாள். சாமந்தன் அதைப் பார்த்தான். அவன் அவள் சந்தோஷத்துடன் வரமாட்டாள் என்று எண்ணியிருந்தான். ஆனால் இது என்ன? அவள் நடையிலே, உதட்டிலே, உள்ளத்திலே எங்கும் ஒரே ஆனந்தம் அல்லவா வெள்ளம் எடுத்து ஓடுகிறது?

அந்தப் பேரொளி ஓட்டத்தில் அவன் கண்கள் முழுகி ஓர் கணநேரம் தன்னை மறந்து இருந்தான் சாமந்தன்.

'என் சம்பு இங்கிருக்கிறாரா? இந்தக் கோயிலா?'' என்று சௌளா கேட்டாள். அவள் கண்கள் அங்குமிங்கும் சுழன்றன. ஆனால்ஒளி சிதறிய அந்தக் கண்கள் ஒன்றையும் பார்க்கவில்லை.

சிவராசி 'ஆம். இங்கிருந்துதான் உன்னை எதிர் பார்க்கிறார்' என்றான்.

அவனுக்கும் இந்த அனுபவம் புதிதாய் இருந்தது. அவனும் விதிகளை மறந்துவிட்டான். 'ஜய் மஹாமாயா!' என்று சொல்லி அர்க்யம் அளித்தபிறகு அவன் அசந்து நின்றான். சிவராசி இந்த நேரத்தை உபயோகித்துக்கொள்ளத் தயங்கவில்லை. கங்கா சர்வக்ஞரைச் சிவனுடைய இடத்தில் வைத்துப் பூஜை செய்கிறாள்! ஏன் சௌளா சிவராசியைச் சிவனாக ஏற்கக்கூடாது? அவன் சௌளாவின் எதிரே திரிபுரசுந்தரியின் கர்ப்பத்துவாரத்தை மறைத்து வந்து நின்றுகொண்டான். அங்கே ஒரு திரிசூலம் இருந்தது. என்ன தைரியம் வந்ததோ அவன் அதையும் எடுத்துக் கையில் வைத்துக்கொண்டான்.

சௌளா கோயிலுக்குள் தெய்வத்திடம் சேர ஓடி வந்தவள் வழியில் சிவராசி குறுக்கிட்டு நிற்பதைப் பார்த்தாள். 'சிவராசி! இது என்ன இது? என் நாதன் எங்கே?' என்று கத்தினாள்.

''இதோ!'' என்று சிவராசி தன் கைகளை அகற்றிப் பிரித்தான். சௌளா அதன் பொருளைப் புரிந்துகொள்ளத் தயாராக இல்லை. அவள் சிவராசியை எட்டித் தள்ளினாள். ஓட ஆரம்பித்தாள். அங்கே சிவனுடைய கல்லுருவம் இருந்தது. அவள் அதனிடம் சென்று 'என் கடவுளே, சுவாமி, நாதா!' என்றெல்லாம் அரற்றிக்கொண்டு அதைக் கட்டிக்கொண்டாள். தன்னை மறந்து அதனுடன் காதல் வார்த்தையாட ஆரம்பித்தாள். பின்னால் நின்ற ஆண் பெண் அனைவரும் இப்படியும் நடக்குமா? என்று அதிசயப்பட்டுப் பார்த்துக் கொண்டு நின்றனர்.

சௌளா சற்றுநேரத்தில் மயக்கமடைந்து கீழே விழுந்துவிட்டாள். அப்பொழுதுதான் சௌளா விதிமுறை மீறி, சங்கரனுடைய மூர்த்தியைத் தொட்டுவிட்டாள் என்று எல்லோருக்கும் புரியவந்தது. அவள் பழைய விழுப்புத் துணியுடன் பூச்சு இல்லாமல் வந்திருந்தாள். மஹாமாயாவின் பிரதிரூபமாக அவளுக்குப் பூசையும் நடந்தேறவில்லை. விதிகள் எல்லாம் மறந்துவிட்டன. திரிபுரசுந்தரி பூஜைக்கேற்ற ரஹசிய விதிகளை எல்லாம் உதறித்தள்ளி, சௌளா வெறுக்கத்தக்க முறைகளுக்குப் பழகி நிற்கும் அந்தப் பக்தர்களை எல்லாம் சுத்தமான பக்தி பாவத்தின் தளத்துக்கு அழைத்து வந்திருந்தாள். ஆனால் அந்தப் பக்தியின் மந்திரப் பிணைப்பு அற்றவுடன் அந்த அசிங்கங்கள் மீண்டும் தங்களுடைய இடத்துக்குத் திரும்பிப்போகப் பிடிவாதம் காட்டத் தொடங்கின!

சிவராசிக்கும் ஒன்றும் புரியவில்லை, அவன் குருவினுடைய மரியாதை அவர் உத்தரவு இரண்டையும் மீறிவிட்டான். இனி என்ன செய்வது? என்று அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் மற்றப் பாபாக்கள் முணுமுணுக்க ஆரம்பித்தனர். விட்ட ''விதிகள் நிறைவேற்றப்பட்டாகவேண்டும். மஹாமாயையின் கோயிலை அசுத்தம் செய்யக்கூடாது.''

பலர் பலவாறு சொல்லினர். பரபரப்பு அர்களிடையே பரவி ஓடிற்று.

(தொடரும்)



# பெண்களுக்கு மட்டும்

ஷிபாலி செளத்ரி — சாரி

நல்ல ஆடை, அலங்கார வஸ்துக்களை முக்கிய தினங்களுக்கென்றுசேமித்து வைப்பவர் கோஷ்டியைச் சேர்ந்தவரோ நீங்கள்? உண்மையாக, ஒரு விசேஷ நாளை அல்லது சம்பவத்தைக் கொண்டாட மற்றச் சமயத்தில் வெளியில் எடுக்கப் படாத ஒரு நல்ல புடவை, கோட் இவைகளை உபயோகிப்பது உசிதமே. ஒரு உயர்ந்த விருந்தாளியை உபசரிக்க, தனி வெள்ளிச் சாமான், பீங்கான், கண்ணாடி, ஆடைகள் நம்மிடம் இருப்பது பெருமை தான் அளிக்கிறது. ஆனால் ஒரு ஆபத்தும் அதில் உண்டு! இம்மாதிரி விசேஷ சந்தர்ப்பங்கள் குறைவாக நேருவதால், நமது விசேஷ உடைகளும் சாமான்களும் வெளியே வரும் சமயங்களும் குறைந்து போகின்றன.

குழந்தைகள் நிறைந்த வீட்டில் உடையக்கூடியதும், அழுக்கேறிப் பாழாய்ப் போகக் கூடியதுமான பொருள்களைத் தினமும் உபயோகிப்பது உசிதமில்லை; வாஸ்தவமே. ஆனால் அழகான வஸ்துக்கள் உங்களிடம் இருந்தால் கெட்டுப்போகுமே என்கிற பயத்தினால் இவைகளை உள்ளேயே அடைத்துவிடுவதும் சரியில்லை தானே?

முக்கிய சந்தர்ப்பங்கள் உங்கள் வீட்டில் அடிக்கடி நேராவிட்டால், நண்பர்களும், சினேகிதர்களும் வரக்கூடிய தினங்களில் வெளியில் எடுங்கள்; நல்ல உடைகளை வருஷத்தில் ஒருநாள் நீங்கள் வெளியில் போனால், அப்பொழுது வெளியில் எடுத்தால் போதாது!

குழந்தைகளின் பிறந்த நாளில் அந்த அழகான புடவையை அணிந்து, கணவனும் குழந்தைகளும் பார்த்து மகிழ்ச்சி அடையச் செய்யுங்கள். 'கரையான் அரிக்கும்படி பொக்கிஷத்தைச் சேமித்தல்' என்கிற பைபிள் வாக்கியம் எவ்வளவோ சந்தர்ப்பங்களில் உண்மையாகிவிடுகிறது! விலைமதிக்கமுடியாத கம்பளமொன்று, தினமும் உபயோகிக்காததால் கெட்டுப்போகுமென்று பெட்டியில் பூட்டப் பட்டு, அந்துப் பூச்சிகளின் பசிக்கு இரையாகின்றது.

மேலும், உயர்ந்த பொருள்களை, 'அதி' பத்திரமான இடத்தில் வைத்துவிடுவதால் 'சந்தர்ப்பம்' நேரும்போதுகூட அவைகளை வெளிக்கிளப்புவது கஷ்டம் என்கிற எண்ணம் உண்டாகிவிடும்; அல்லது நேரம் இருப்பதில்லை. சில சமயம் எங்கே பத்திரப்படுத்தியுள்ளோம் என்பது மறந்தே போய்விடுகிறது.

அருமையான பண்டங்களைப் பத்திரமாய் எளிதில் எடுக்கக்கூடிய இடத்தில் வையுங்கள்; அவ்வப்போது எடுத்து உபயோகித்து மகிழ்ச்சி அடையுங்கள்; அப்பொழுதுதான் அவைகளினால் உங்களுக்குச் சந்தோஷம் கிட்டும்.

**அழகுக் குறிப்பு (1)** அழகிகளின் அழகை மிகைப்படுத்த பழ ரசத்தை உபயோகியுங்கள்.



தக்காளிப்பழச் சாற்றைக் கழுத்து, கைகளின்மீது பூசிக் குளிக்கவும். வெயிலில் போய் கறுத்துப்போகும் Sun-Tan சர்மத்தை வெளுக்க வைத்து, பளபளப்பாக்கும்! இதேபோல் எலுமிச்சம்பழ ரசமும் உதவும். ஆனால் அப்பட்டமான ரசத்தின் காரம் மெல்லிய சர்மத்திற்கு ஆகாது. இரண்டுக்கு ஒரு பங்கு ஜலம் சேர்த்து உபயோகியுங்கள்.

**அழகுக் குறிப்பு (2)** இடுப்பை மெல்லியதாக வைத்துக் கொள்ளுங்கள்!



1



2

படம் (1) கால்களைச் சிறிது தள்ளி முழங்கால்களைத் தளர்த்தாமல் நிற்கவும். கைகளை மேலே உயர்த்தி இடது பக்கமாய்க் கீழே இறக்கவும்; மறுபடி உயர்த்தி வலது பக்கமாய்க் கீழே தணிக்கவும். இடுப்புக்குக் கீழே உடம்பு சற்றும் அசையக் கூடாது. ஒவ்வொரு பக்கமும் 10 தடவை செய்யவும்.

படம் (2) மேலே சொன்னமாதிரி நிற்கவும். இப்பொழுது கைகளை வளையம் போல் சுற்றவும்; நிறுத்தக்கூடாது. முதலில் 3 வளையம் சுற்றினால் போதும். இவ்வாறு நிறுத்தாமல் 10 வளையம் சுற்றப் பழகவும். இந்தப் பயிற்சியிலும் இடுப்புக்குக் கீழே உடம்பு அசையக்கூடாது.

* * * *

## தையல் பகுதி



இந்த உல்லாசமான பூங்கொத்து டிசைனை, நாற்காலிக் கவர்கள், குழந்தைகளின் பிராக்குகள், TRAY CLOTH, படுக்கை விரிப்புக்களிலும் அழகிய நிறங்களில் தையுங்கள்.

வெளிர் மஞ்சள் அல்லது பிஸ்கெட் நிறத்தில் லினென் அல்லது கதர் வாங்கினால் பொருத்தமாயிருக்கும்.

பாப்பிப் பூக்களை Shaded பிங்க் நிறத்திலும், சிறிய

Forget-me-nots - பூக்களை Shaded வெளிர் நீலத்திலும், இலைகளை Shaded பச்சையிலும் தைக்கவும். பூக்களின் மத்தியில் உள்ள புள்ளிகள் கறுப்பு நூலில்.

பாப்பிப் பூ=ஸாடின் தையல்.
பர்கெட்-மி-நாட்=பிரெஞ்சு நாட் தையல்
இலைகள்=லாங்க் அண்டு ஷார்ட் தையல்.




## சமையல் பகுதி.

**பச்சைத் தக்காளி ஜாம்:**— தோட்டத்தில் டொமாடோ காய்க்கும்போது, சில காய்கள் பழுக்காமலே நின்றுவிடுவதைக் கவனிக்கலாம். அவைகளை உபயோகித்து ஜாம் செய்வோமே.

1-வீசை டொமாடோ காய்க்கு,
2½-பவுண்டு சர்க்கரை,
1-எலுமிச்சம் பழம்—தேவை

காய்களின் காம்புகளை நீக்கி மெலிதாக நறுக்கிக் கொள்ளவும். எலுமிச்சம் பழத்தைக் கொட்டைகள், சதை நீக்கி மெலிதாக நறுக்கிக்கொண்டு சர்க்கரை டொமாடோவுடன் கலந்து கொள்ளவும்.

அடுப்பில் ஏற்றி ஒரு மணிநேரம் கொதிக்கட்டும். காய்கள் நன்ருக வெந்துவிட்டனவாவென்று அடிக்கடி கவனித்து, ஒரு பிளேட்டில் சிறிது போட்டதும் இறுகினல், ஜாம் பக்குவமானதாய்த் தெரிந்து கொள்ளவும். ஆறின பிறகு சீசாவில் போட்டு மூடிவிடவும்.









**கோவா ஜெல்லி—எளிதான முறை:—**

25 கொய்யாப்பழம்
25 எலுமிச்சம்பழம்
1 வீசை சர்க்கரை
கலர் போட, சிறிது கொசச்நீல்.

பழத்தை மெல்லிய துண்டங்களாய் நறுக்கி, சிறிது ஜலம் சேர்த்து வேக விடவும். பிறகு அடுப்பில் இருந்து இறக்கி ஆறியபின், நன்றாக மசித்து ஜலத்தை மாத்திரம் வடிகட்டி எடுத்துக்கொள்ளவும். இதில் சர்க்கரை சேர்த்து அடுப்பில் வைத்து மறுபடி கொதிக்க விடவும். 10-நிமிஷம் கழித்து எலுமிச்சம்பழ ரசத்தைச் சேர்த்துக் கொதிக்க வைத்து இறுகியவுடன் இறக்கிவிடலாம். நிறம் போதாவிட்டால், கொச்சினீல் சேர்க்கவும்.

**வாழைப்பூ கோளா:**—இந்தக் கோளாக்கள் சூடாய்ச் சாப்பிட மிக்க ருசியாயிருக்கும். ஒரு வாழைப்பூவை ஆய்ந்து, நறுக்கிச் சற்று வேகவைத்து எடுத்து வைக்கவும்.

4 பெரிய வெங்காயம்-துண்டுகளாக்கியது.

4 மிளகாய் வற்றல்<br>
8 கிராம்பு, லவங்க பட்டை 1 இஞ்சு<br>
1 டீஸ்பூன் கடலைப் பருப்பு,<br>
} வறுத்துப் பொடி செய்து கொள்ளவும்.

கடலை மாவு ½ கப்.

எலுமிச்சம் பழம் 1.

உப்பு.

எண்ணெய் அல்லது வனஸ்பதி.

தயாரிக்கும் வகை:— வெந்த வாழைப்பூவை அம்மியில் அரைத்து விழுதாக்கிக் கொள்ளவும். பிறகு அதில் வெங்காயத் துண்டங்கள், மசாலைப் பொடி, உப்புஞ் சேர்த்து நன்றாய்ப் பிசைந்துகொள்ளவும். எலுமிச்சம் பழத்தைச் சாறு பிழிந்து சேர்த்து, கடலை மாவு போட்டு நன்றாய்க் கலந்து, ஒரு சிறிய எலுமிச்சம்பழ அளவு உருண்டைகள் ஆக்கிக் கொள்ளவும். எண்ணெய் நன்றாய்க் காய்ந்தவுடன் **கோளா**க்களைப் போட்டு வறுத்து எடுக்கவும். பார்வைக்குக் கறுப்பாக இருக்கும். ஆனால் உண்பதற்கு நல்ல ருசியுள்ளவை. இதை மசாலை இல்லாமலும் செய்யலாம்.

குறிப்புகள்:—

பழங்கள், வெங்காயம் நறுக்கினால் கையில் ஏற்படும் கறையைப் போக்க எலுமிச்சம்பழ மூடியினால் தேய்க்கவும். அல்லது ரொட்டியை (Vinegar) இல் நனைத்து, கையில் தேய்த்தால் கறை நீங்கிப் போகும்.

*முன் இதழ் தொடர்ச்சி*




# மணல் மேடு

மாரார்

**சுதரிசனம் ஐயங்கார்:** நேற்று மந்திரி ஒருவர் சட்ட சபையில், ஒரு போடு போட்டாரே, கவனித்தீர்களா? கோழிகளையும் அவைகளின் முட்டைகளையும் மனிதனின் உணவுக்கென்றே கடவுள் சிருஷ்டித்திருக்கிறார் என்பது என் அந்தரங்க அபிப்ராயம்" என்றார். கடவுளுக்கு மனுஷ்யனிடத்திலுள்ள அலாதியான பிரீதியைப் பாருங்கள். அவனுக்கென்று பிராணி வர்க்கங்களைச் சிருஷ்டித்து "என் அப்பனே, இக்கோழிகளையும் அவைகளின் முட்டைகளையும் உண்டு களித்துப் பூரிப்பாயாக" என்று ஆசீர்வதித்திருக்கிறாராம்.

**ஜாபாலிரத்னம் ஐயர்:** கோழியையும் முட்டையையும் சாப்பிடுவதில் ஒன்றும் தோஷம் இல்லை என்று சொன்னால் போதுமே. கடவுளை எதற்காக இழுக்கிறார்? மனுஷ்யன் தனக்காகவே சூரியனும் சந்திரனும் ஆகாயத்தில் சுற்றுகின்றன, தனக்காகவே கடலும் அதனுள் ஜீவிக்கும் ஜந்துக்களும் உண்டாக்கப்பட்டிருக்கின்றன, பழங்களைத் தரும் விருட்சங்களும் தனக்காகவே, இயற்கை முழுதும் தன் உபயோகத்துக்கென்றே என்ற கருவத்துடன் நினைக்கிறான். ஒரு பூகம்பமோ, வெள்ளமோ ஏற்பட்டுச் சேதமுண்டானால், அப்போதுதான், தனக்கும் மற்றப் பிராணிகளுக்கும் இயற்கை அன்னையின் திருவுள்ளத்தில் ஒரு பேதமும் இல்லை என்று அறிகிறான். ஒரே நிமிஷத்தில் மனுஷ்யன், யானை, மான், ஸர்ப்பம், மரங்கள் எல்லா ஸ்தாவர ஜங்கமமும் பட்சபாதம் இல்லாமல் நாசமடைகின்றன. அப்போதுதான் நாம் இயற்கையை அடக்கி ஆள்வோம் என்கிற கர்வம் பறந்துபோய் நமக்கும் ஈ, கொசுவுக்கும் பேதம் ஒன்றுமில்லை என்று அறிந்து கொள்ளுகிறான்.

**வியாஸாசார்:** பாம்பு, உலகத்திலுள்ள தவளைகளெல்லாம் தனக்காகவே கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன என்று எண்ணுகிறது. இல்லாவிட்டால் ஏன் இவ்வளவு உக்கிரமான விஷத்தைப் பாம்பின் பல்லில் கடவுள் வைக்க வேண்டும் என்று சொல்லலாமல்லவா? காலேஜில் பிராணி சாஸ்திரம் கற்றுக்கொள்ளும் பையன்கள் தவளைகள் தாங்கள் கத்தியினால் துணித்துச் சோதனை செய்து பிராணிகளின் உடலின் அமைப்பைக் கற்றுக்கொள்வதற்காகவே என்று நினைக்கிறார்களாம். ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு காலேஜிலும் 40, 50, தவளைகள் பிடிக்கப்பட்டுப் பையன்களுக்குப் பரிசோதனைக்குத் தரப்படுகின்றனவாம்.

**ஜாபாலி:** மூட்டைப் பூச்சிகள் ஒன்றுக்கொன்று இப்படிப் பேசிக்கொள்ளலாம்: "மனுஷன் நமக்காகவே கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றான். அவன் இரத்தமே நமக்குத் தக்க உணவாக நியமிக்கப்பட்டிருக்கிறது. நமக்கு வேறுவிதமான தீனி ஒன்றும் இல்லை. மனுஷியன் தூங்கும்போது ஊசிபோன்ற நம் நாவினால் சுறுக்கென்று அவன் தோலைக் குத்தி ஒரு சொட்டு இரத்தத்தை உறிஞ்சுகிறோம். இப்படியே தலைமுறை தலைமுறையாக நாமும் நம் குஞ்சுகளும் வாழ்ந்து வருகி

ரேும். நம் வாயில் இந்த ஊசியைப் படைத்த கடவுளுக்கு வேறு என்ன நோக்கம் இருக்க முடியும்? பேனும் ஈரும் இப்படியே மனிதன் தங்கள் உணவுக்காகவே ஜீவிக்கிருன் என்று எண்ணக்கூடும்.

**சுதரிசனம்:** மாமரம், பலாமரம் மற்றப் பழந்தரும் மரங்கள் மனிதனின் உபயோகத்திற்கென்று தோன்றவில்லையா?

**ஜாபாலி:** தாவர நூல் வாசிக்கும் ஹைஸ்கூல் பையன்கள்கூட உமக்குத் தக்க பதில் சொல்லமுடியும். மாமரம் தன் பழங்களையும் அவைகளின் ரஸத்தையும் உமக்காகத் தூக்கிக்கொண்டிருக்கிறது என்று நினைக்கிறீரோ? அது சுத்தத் தப்பு. பழங்கள் எல்லாம் மரத்தின் குழந்தை-குஞ்சுகள்; அவைகள் எல்லாம் தாய் மரத்தின் கீழேயே விழுந்தால் அவைகள் பூமிக்குள் முளைத்து வளருவது கஷ்டம். செடிகளுக்கு வேண்டிய உணவுப் பொருள் போதாது. அதற்காகப் பழத்தில் தித்திப்பான சதையையும் ரஸத்தையும் வைத்து மனுஷியனைத் தன்னிடம் ஆசைகாட்டி வஞ்சகமாக மரம் அழைக்கிறது. அவன் பழங்களை வீட்டுக்குக் கொண்டுபோய்த் தானும் தன் மனைவி மக்களும் தின்றுவிட்டுக் கொட்டைகளை வீசிக் கொல்லையில் எறிகிருன். ஒரே இடத்தில் விழாமல் பல இடங்களில் சிதறி விழுந்து அங்கங்கே முளைத்தால் அக் கன்றுகள் பிழைத்து வளருவதற்கு வசதி ஜாஸ்தி கிடைக்கிறதல்லவா?

**சுதரிசனம்:** கனம் மந்திரி அவர்கள் ஆடு, மான், மீன், புரு எல்லாம் மனிதனுக்கு உணவாக வகுக்கப்பட்டிருக்கிறது என்று நேரிடையாகச் சொல்லவில்லை. ஆனல் அதுவும் அவர் அபிப்பிராயம் என்றே ஊகிக்கலாம்.

**ஜாபாலி:** புழுவையும் தானியங்களையும் கோழி கொத்தித் தின்னுகிறது. கோழியை மனுஷ்யன் அடித்துத் தின்னுகிருன். அவன் இரத்தத்தை மூட்டைப் பூச்சி, பேன், ஈ, கொசுகு, வயிற்றுக்குள்ளிருக்கும் புழுக்கள் இவைகள் உறிஞ்சிச் சில சமயங்களில் அவன் உயிருக்கே சேதமுண்டாக்குகின்றன. ஈசுவரனே, இயற்கையோ, அது எதுவாய் இருந்தாலும் சரி, இதையெல்லாம் ஓரவஞ்சனையில்லாமல் பார்த்துக்கொண்டு, ஒரு கட்சியிலும் சேராமலே இருக்கிறது. ஆலோசித்துப் பார்த்தால் மரம், செடி, புழு, பறவை, பாம்பு, மிருகம், மனிதன் முதலிய எல்லா ஜீவராசிகளும் தன் தன் சுயநலத்தையே கருதுகின்றன. பிறருக்கு உபகாரம் செய்வதுபோல் மேற்பார்வைக்குத் தோன்றினலும்ஊன்றி நோக்கும்போது, அதுவும் சுயநலத்திற்காகவே என்பது அறியலாம். மந்திரி அவர்கள் வேடிக்கையாகச் சொல்லியிருக்கலாம்.

**சுதரிசனம்:** நான் இருமுறை கவனித்து வாசித்தேன். விளையாட்டுக்குச் சொன்னதாகத் தெரியவில்லை. மெய்யென்றே எண்ணினதாகத் தெரிகிறது.

**குருதாஸ்நாயுடு:** இந்தப் பேச்செல்லாம் கோவில்களில், கோழி, ஆடு, எருமை—பலி கொடுப்பதைத் தடுப்பதற்காகச் சட்டம் ஒன்று திட்டமாக்க வேண்டும் என்ற சந்தர்ப்பத்தில் நடந்தது. சில கோவில்களுக்குள் ஜனங்கள் வேண்டுதலையைத் தீர்ப்பதற்காகப் பலி இட்டு வருகிருர்கள். மக்கள் அவரவர்கள் வழக்கப்படி பலி கொடுத்தோ, கொடுக்காமலோ, தங்கள் ஸம்பிரதாயத்தை அனுசரித்துத் தேவதைகளுக்கு வழிபடுவதை நம் குடியரசுப் புதிய அரசியல் திட்டம் தடுக்கக்கூடாது என்று சொல்லியிருக்கும்போது, இப்படி மதராஸில் ஒரு மசோதா கொண்டுவரலாமா?

**ஜாபாலி:** நாயுடு! நீர் சொல்வதைப் பார்த்தால் நரபலி கொடுப்பது எங்கள் ஸம்பிரதாயம் என்று சொல்லிக்கொண்டு ஒரு இனத்தார் நரபலி கொடுக்க வந்தால் சர்க்கார் அதைத் தடுக்கக்கூடாது என்று சொல்வது போலிருக்கிறது.

**குருதாஸ்:** கோழி பலி, ஆடு பலியை ஏன் தடுக்கவேண்டும் என்றுல் நரபலியை ஏன் தடுக்க வேண்டும் என்கிறீர். அரசியல் திட்டம் கோழிக்காகவும் ஆட்டுக்காகவும் ஏற்படவில்லை. மக்களுடைய நலனுக்கேயொழிய வேறில்லை. அப்படியானல் கோழிகளையும் ஆடுகளையும் அடித்து அவைகளின் மாமிசத்தை உண்பவர்களையும் தண்டிக்கச் சட்டம் வேண்டும். அப்படி ஒருநாட்டிலாவது சட்டம் இருப்பதாகத் தெரியவில்லையே.

**வியாஸாசார்:** நாயுடு சொல்வதில் ஒரு விஷயம் இருக்கிறது. நான் இன்று மணல் மேட்டுக்கு வரும்போது வழியில் பேட்

டைப்பள்ளி ரோட்டில் ஒருவன் 40—50 ஆடுகளை ஓட்டிக்கொண்டு போவதைப் பார்த்தேன். அவை எவ்விடம் போயின என்று சொல்லவேண்டியதில்லை. நாளைக் காலையில் அவைகளின் மாமிசம் கசாப்புக் கடைகளுக்கு வியாபாரத்துக்குப் போய்ச் சேரும். இப்படி ஒவ்வொரு நாளும் மக்களின் உணவுக்காக ஒவ்வொரு பட்டணத்திலும் நூற்றுக்கணக்கான ஆடுகளும், கோழிகளும் கொலையுண்கின்றன. சட்டம் அதற்கு இடம் கொடுக்கிறது. கோவிலில் வருஷத்துக்கு இரண்டொருதடவை ஒன்றிரண்டு பிராணிகளைத் தேவதைக்கென்று பலி கொடுப்பதை மாத்திரம் ஏன் தடுக்கவேண்டும்?

**ஜாபாலி :** நீரும் சேர்ந்துகொண்டீரா? என்னையா—கடவுளுக்கு ஆட்டு மாமிசமோ, கோழி மாமிசமோ வேண்டுமா? அவருக்காக என்று இவைகளைக் கொல்வது மூடத்தனமல்லவா? அவைகளின் இரத்தத்தைக் கோவிலிற்குள் சிந்துவதால் கோவில் அசுத்தமாகாதோ? இவ்விதமான மூட நம்பிக்கையையும் அதனால் ஏற்படும் பலியையும் சர்க்கார் ஏன் தடுக்கப்படாது? வேண்டுதலை என்கிறார்களே அதென்ன? என் குழந்தைக்கு ஜ்வரம் நீங்கிப் பிழைத்தால் ஒரு கோழியைக் காளியம்மன் கோவிலுக்குக் காவு கொடுக்கிறேன் என்று சொல்வது தானே. அதாவது கடவுளுக்குக் கோழி மாமிசத்தை லஞ்சம் கொடுத்துக் குழந்தையின் வியாதியைப் போக்கலாம் என்று எண்ணுகிறார்கள். இது கடவுளை லஞ்சம் வாங்கும் உத்தியோகஸ்தர்களின் படிக்கு இறக்குவதல்லவா?

**வியாஸாசார் :** மூட நம்பிக்கையைக் குறைக்க வேண்டியது அவசியம்தான். ஆனால் சர்க்கார் தண்டனை விதித்துத் தடுப்பது தகுமோ? உங்களைப்போன்ற புத்திமான்கள் பாமர ஜனங்களுக்கு இது தப்பு, கடவுளின் மகிமையையும் கௌரவத்தையும் குறைக்கிறது என்று பிரசாரம் செய்யவேண்டும். சட்டத்தைக்கொண்டு தண்டிப்போம் என்று பயமுறுத்தாமல், நாளடைவில் கல்வி, பிரசாரம், பத்திரிகைகள் மூலமாக மக்களின் மனப்பான்மையை மாற்றுவதே சரி. மேலும் காளிகோவிலில் ஆடு, கோழி பலியாகின்றன. சிவன் கோவில் விஷ்ணு கொவில்களில் பிராணிகளைப் பலியிடுவதில்லை. ஆனால் சுவாமிக்குத் திருப்தி என்று சர்க்கரைப் பொங்கல் புளியோதரை, தோசை, வடை முதலியன சமைத்து நிவேதனம் செய்கிறார்கள். இதைத் தடுக்க வேண்டுமா, வேண்டாமா? கடவுளுக்குத் தோசை, வடை வேண்டுமா? அவருக்குப் பசி உண்டா? உண்டென்று நினைப்பது அவர் மகிமையைக் குறைப்பதல்லவா? என் மகனுக்குப் பரீட்சையில் பாஸாகட்டும், அநுமாருக்கு வடைமாலை செய்து சாத்துகிறேன் என்று வேண்டிக் கொள்ளுகிறான். இதுவும் ஒரு லஞ்சம் அல்லவா? சிவன் கோவில்களில் விக்ரகத்துக்கு அன்னாபிஷேகம் செய்கிறார்கள். என்னைப்போன்ற மாத்துவர்களுக்கு இது வெறுப்பாகத் தோன்றுகிறது. பத்து என்றாலே எங்களுக்கு நடுக்கம். அதனால் விஷ்ணுவாலயங்களில் போனால் எங்கே புளியோதரைப் பருக்கை கீழே கிடக்குமோ என்ற பயம் எங்களுக்கு ஜாஸ்தி. அதை அசுத்தம் என்று நாங்கள் எண்ணுகிறோம். கோவிலுக்குள் சோறு பத்து சம்பந்தத்தையும் தடுக்க வேண்டாமா?

**சுதரிசனம் :** இந்த விஷயத்தில் காளி கோவிலுக்கும் விஷ்ணு கோவிலுக்கும் வித்தியாசம் அதிகம் இல்லை. வழிபடுபவர்கள் எந்த உணவைப் புஜிக்கிறார்களோ அதையே தங்கள கடவுளுக்கும் உகந்தது என்று எண்ணுகிறார்கள். ஆடு, கோழி பலி கொடுக்கிறவர்களுக்கு அவை ஆகாரமானதால், கோவிலில் அவைகளைக் கொல்வதில் ஒரு விதமான வெறுப்பும் அவர்களுக்கு உண்டாவதில்லை. ராயர் சொன்னபடி சர்க்கார் இந்த விஷயங்களில் ஏன் தலையிட வேண்டும்? மக்களுக்கு அவசியமான, கல்வியை ஊட்டி அவர்கள் புத்தியைப் பெருக்கினால், மூடநம்பிக்கையும், கோரமான வழக்கங்களும் தாமாகவே மறந்துவிடும்.

**ஜாபாலி :** தாமாக மறைவதற்கு வெகு காலமாகும். சட்டத்தை ஏற்படுத்தி விரோதமான சடங்குகள் செய்பவர்களைத் தண்டித்தால் சீக்கிரமே இந்த அசட்டு வழக்கங்கள் ஒழியும்.

**குருதாஸ் :** வியாதி வருவது தேவதைகளின் கோபத்தினால்தான். அதனால் அந்தத் தேவதைகளுக்குக் காணிக்கை செலுத்தி, பலிகொடுத்துத் திருப்தி செய்வித்தால் வியாதி சொஸ்தமாகும் என்று மக்களில் பலர் நம்புகிறார்கள்.

**ஜாபாலி:** தேவதைகளாவது கோபித்துக் கொள்வதாவது? இதென்ன பத்தாம் பஸலிப்பேச்சு. பீஹாரில் பூகம்பம் வந்து ஐந்து நிமிஷத்தில் லட்சக்கணக்கான ஜனங்கள் மாண்டனர். அப்போது அறிவாளிகள் சிலர் கூட மனிதர்கள் செய்த பாவத்தினல் கடவுளுக்குக் கோபம் மிகுந்துவிட்டது, பூமியின் பாரத்தைக் குறைக்கப் பூகம்பம் ஒரு வழி என்று சொன்னர்கள். கடவுளுக்கும் நம்மைப் போல் கோபமும் தாபமும் உண்டோ?

**வியாஸாசார்:** உலகத்தில் கொடுமையும் பாவமும் அதிகமானல் நான் அவதாரம் செய்து கொடியவர்களை நாசம் செய்வேன் என்று ஈசுவரன் சொன்னதாக நம் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

**ஜாபாலி:** கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். பீஹாரில் செத்த லட்சம் மக்களில் எத்தனையோ கைக்குழந்தைகள், எத்தனையோ நோயாளிகள், கிழங்கள் இருந்திருப்பார்கள். எல்லோரும் மகாபாவிகள், அதனல் ஒரே நிமிஷத்தில் பகவான் அவர்கள் நாசம் அடையும்படி செய்தார் என்று நம்பமுடியுமா? கல்கத்தா, பம்பாய், மீதராஸ் முதலிய நகரங்களில் இருந்தவர்களைவிடப் பீஹாரில் இருந்தவர் கொடுமை மிகுந்தவர் என்று எப்படிச் சொல்லுகிறது?

**வியாஸாசார்:** ஈசுவரன் அவரவர் கருமத்துக்குத் தக்க பலனை அனுபவிக்கும்படி செய்கிறர்; அதனல் அவரிடம் வஞ்சனையோ, பட்சபாதமோ, குரூரத்தன்மையோ, இருக்கிறதென்று சொல்லலாகாது.

**ஜாபாலி:** தண்டனையை அனுபவிக்கிறவனுக்கு நான் முன் ஜன்மத்தில் இன்னவின்ன கருமம் செய்தேன், அதனல் கடவுள் என்னைத் தண்டித்திருக்கிறர் என்று தெரிந்தால்தானே அது நியாயம் என்று நினைப்பான். என்ன கருமம் செய்தான் என்று அவனுக்குத் தெரிவிக்காமல் அவனைத் தண்டிப்பது கொடுமையல்லவா? நம் கோர்ட்டுகளில்கூட அப்படிப்பட்ட அநியாயம் நடக்காதே. முன் ஜன்மத்தில் நான் இந்தப் பாவம் செய்தேன். அதனல் எனக்கு இந்தக் கஷ்டம் வந்திருக்கிறது என்று தெரிந்தால் பின்னர் கெட்ட கர்மத்தைச் செய்யத் துணியமாட்டான்.

**குருநாத்:** ஐயர்வாளுக்குக் கோபம் வந்துவிட்டது. இந்த விஷயத்தில் நமக்குள் ஏன் இவ்வளவு உஷ்ணமான பேச்சு? இருட்டிவிட்டது, பேச்சை நிறுத்திக் கொண்டு வீடு போவோம்.




இந்தியாவிலிருக்கும் பேப்பர் மில்களின் படம்

# காகிதத் தொழிலின் வளர்ச்சி

அ. வேணுகோபாலன்

**கா**கிதத்தின் அவசியம் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டு வரும் விஷயம் அனைவருக்குந் தெரிந்ததே. தற்காலத்தில்தான் காகிதத்தை உபயோகிக்கிறோம்; எனவே, தற்காலத்தவர்கள்தான் எழுதத் தெரிந்தவர்கள் என்று எண்ண வேண்டாம். காகிதம் இல்லாமலிருந்துங்கூட, முற்காலத்தவர்கள் தங்கள் மூளையை உபயோகித்து, காகிதத்திற்குப் பதிலாக வெவ்வேறு விதமாகத் தங்கள் நோக்கத்தைப் பூர்த்திசெய்து கொண்டிருக்கிறார்கள். காகிதம் கண்டுபிடிப்பதற்கு முன், நம்மிந்தியாவில் தென்னை ஓலையிலும், பனை ஓலையிலும் எழுதி வந்தது நம்மவர்களுக்குத் தெரிந்ததுதான்; எகிப்திய நாட்டில் சாதாரணமாக இலைகளிலும் முக்கியமான விஷயங்களைத் தோல்களிலும் எழுதி வந்துள்ளனர்; சீனர்கள் பட்டைகளைக் காகிதமாக உபயோகித்தனர்; பாபிலோனியர்கள் மேலே குறிப்பிட்ட விதமாகவில்லாமல், களிமண் பலகைகளை உபயோகித்து வந்ததாகத் தெரிய வருகிறது. ஆதலால், உலகத்தில் காகிதத்தைக் கண்டுபிடிப்பதற்கு முன்பு, பல விதங்களில் எழுதி வந்துள்ளனரெனத் தெரியவருகிறது.

இப்போது அமெரிக்கர்கள் விஞ்ஞான விஷயங்களில் பிரமாதமாக முன்னேறியிருக்கிறார்கள்; இம்மாதிரியாக முற்காலத்தில் சீனர்கள் முன்னேறியிருந்தனர். இந்தச் சீனர்கள் இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பே கையினால் காகிதம் தயாரிக்கக்கண்டுபிடித்திருந்தார்கள். ஒரு சமயம், மூர்ஜாதியினருடன் சண்டையேற்பட்டபோது சீனர்களை இவர்கள் கைதிகளாகப் பிடித்துக்கொண்டுபோய், சீனக் கைதிகளிடமிருந்து மூர்ஜாதியினர் காகிதம் தயாரிக்கும் முறையைக் கற்றுக் கொண்டார்கள். காகிதத்தின் பிறப்பிடமான சீனாவில் இது முன்னேறாமல், மூர்ஜாதியினர் இத்தொழிலைச் செவ்வனே நடத்தியதாகச் சரித்திர வாயிலாக அறிகிறோம்.

பிற்காலத்தில், பதின்மூன்றாம் நூற்றாண்டில் மூர்ஜாதி மக்களிடமிருந்து ஐரோப்பியர்கள் காகிதம் தயாரிக்கும் முறையை அறிந்து கொண்டார்கள்; இச்சமயத்தில்தான் இங்கிலாந்து வாசிகள் காகிதத்தொழிலைக் கற்றுக்கொண்டார்கள். நாளடைவில் இதைப்பற்றிச் சீராக ஆராய்ந்து, சுலபமாகக் காகிதத்தைத் தயாரிக்க யந்திரத்தைக் கண்டுபிடிக்க முயன்று வெற்றிபெற்றார்கள். உலகத்திலேயே, முதன் முதலாக யந்திரத்தினால் காகிதம் தயாரித்த பெருமை இங்கிலாந்திற்குத்தான் சேரும்.

படிப்படியாக, இது உலக முழுவதும் பரவியது. இம்மாதிரியாகப் பரவிய காகிதத் தொழில் பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான் அதிக முன்னேற்றமடைந்தது; இருபதாம் நூற்றாண்டில் மிகச் சிறந்த முறை

யில் காகிதங்களைத் தயாரிக்கின்றனர் சில நாட்டினர். இந்தியாவில் சுமார் 100 வருடங்களுக்கு முன்புதான் இத்தொழில் ஆரம்பிக்கப்பெற்றது. பாலியில் ஆரம்பித்த ராயல் பேப்பர் மில்ஸ்தான் இந்தியாவிலேயே அதிக அளவில் பேப்பரை உற்பத்திசெய்தது. 1892ல் டிடாகரில் ஆரம்பித்த காகித மில்காரர் ராயல்பேப்பர் மில்லையும் வாங்கிக்கொண்டு நடத்த ஆரம்பித்தார்.

நமக்கு வேண்டிய காகிதம் உற்பத்தியாகாததால், வெளிநாடுகளிலிருந்து காகிதத்தை இறக்குமதி செய்துவந்தனர். 1921-22ல் இறக்குமதியான காகிதத்தின் எடை 40,206 டன்; 1926ம் வருஷத்தில் இறக்குமதியின் எடை 1,00.400 டன்களாயிற்று. 1942ல் சுமார் 400 லக்ஷ ரூ. மதிப்புடைய காகிதத்தை இந்திய சர்க்கார் இறக்குமதி செய்தது; 1947-ம் வருடக் கணக்கின்படி 45,000 டன் காகிதம் இறக்குமதியாயிருக்கிறது.

ஐம்பது வருடங்களுக்கு முன் இங்கிலாந்தில் சராசரி ஒரு நபர் உபயோகித்த காகிதம் 10 பவுண்டு; இது நாளடைவில் பெருகி 75 பவுண்டுகளாயிற்று; தற்போது இங்கிலாந்தில் தலைக்கு 154 பவுண்டு காகிதம் செலவாகிறது! அமெரிக்காவில் தலைக்கு 150 பவுண்டு காகிதம் உபயோகித்து வந்தனர்; இப்போது 211 பவுண்டு காகிதம் செலவாகிறது. 1926ம் வருடத்தில் இந்தியாவில் சராசரி ஒரு நபர் உபயோகித்த காகிதத்தின் அளவு அரைப் பவுண்டு! இப்போது $1\frac{1}{2}$ (ஒன்றரை) பவுண்டுகள் செலவாகிறது.

இந்த விவரத்திலிருந்து இந்தியாவில் மிகவும் குறைவாகத்தான் காகிதம் உபயோகப்படுகிறதென்று தெரிகிறது. இதற்குக் காரணமென்ன? மக்கள் கல்வியின்மையால் உலக விஷயங்களை அறிய வழியில்லாமல் பாரதியார் கூறிச் சென்றபடி, ஊமைகளாகவும், குருடர்களாகவும், செவிடர்களாகவும் இருந்ததே இதற்குக் காரணம். ஆனால், இப்போது இந்நிலை சற்று மாறி மக்கள், பொது விஷயங்களிலும், அரசியல் விஷயங்களிலும் கவனம் செலுத்தி வருவதால், புதிய பத்திரிகைகளும் புத்தகங்களும் அதிகரித்திருக்கின்றன. இக் காரணத்தால், பத்திரிகைகள் பெருகுகின்றனவே தவிர, அதற்கு இன்றியமையாத காகிதத்தை நம் நாட்டிலேயே உற்பத்திச் செய்ய யாரும் சிரத்தை கொண்டிருப்பதாகத் தெரியவில்லை.

ஆதலால், காகிதத் தொழிலை அபிவிருத்தி செய்ய என்ன செய்யலாம் என்பதைச் சற்று ஆராயலாம். முன்பெல்லாம் இலைகள், பதமான தோல், மரப் பட்டைகள் போன்றவைகளைக் கொண்டு காகிதம் தயாரித்து வந்தனர். இதன் பிறகு கிழிந்த கந்தைத் துணிகளிலிருந்து மட்ட ரக காகிதங்களைத் தயாரிக்க ஆரம்பித்தனர். கிழிந்த துணி எவ்வளவுதான் கிடைக்கும்? எனவே, வேண்டிய கந்தைகள் கிடைக்காததினால் மரக்கூழ் தயாரித்து அதிலிருந்து காகிதம் தயாரிக்க வழி செய்தனர்.

இந்தியாவில் பல விதங்களில் காகிதம் தயாரித்து வந்தனர். 1914-ம் வருடத்தில் முதல் உலகயுத்தம் ஆரம்பித்ததும் இந்திய காகிதத் தொழில் பல்வேறு காரணங்களினால் விழுந்துவிட்டது. அப்போது, காகித உற்பத்தியாளர்களின் கோரிக்கைகளுக்கு இணங்கி, ஏற்றுமதி, இறக்குமதி போர்டாரின் சிபார்சுப்படி வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகும் காகிதத்திற்கு வரி விதித்தனர். இந்தப் பாதுகாப்பினால் இந்திய காகிதத் தொழில் தலைத்தூக்க ஆரம்பித்தது. கந்தல் துணி கிடைக்காததாலும் வெளி நாட்டிலிருந்து வரும் மரக்கூழ் அதிக விலையாயிருந்ததின் காரணமாகவும் அப்போதிலிருந்து இந்தியாவில் மூங்கில் பசையைக்கொண்டு காகிதம் தயாரிக்கவாரம்பித்தனர்.

இச் சமயத்தில் மேல் நாட்டாருக்கும் காகிதம் தயாரிக்கக் கந்தை துணிகள் கிடைக்காததினால், மரக் கூழைக்கொண்டு பேரளவில் சுலபமாகக் காகிதம் தயாரிக்க முற்பட்டனர். சுலபமாகக் காகிதம் தயாரானதினால் குறைந்த விலைக்கு அந்நியநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தனர். இக் காகிதம் இந்தியாவிலும் இறக்குமதியானதினால், விலை குறைவாயிருக்கும் அந்நிய நாட்டுக் காகிதத்திற்கு இங்கு நல்ல வரவேற்பிருந்தது. இதனால் இந்திய காகிதத் தொழிலுக்கு மறுபடியும் தலைவலி ஏற்பட ஆரம்பித்தது. எனவே, மறுபடி

யும் இந்திய அரசாங்கம் 1925-ம் வருடத்தில் இறக்குமதித் தீர்வையிட்டு, மூங்கில் உபயோகிக்கும் தொழிற்சாலைகளுக்கு ஊக்கமளித்தனர். இம்மாதிரியாக மூங்கிலால் காகிதம் தயாரிக்கும் தொழில் அபிவிருத்தியடைந்து முன்னேற்றமடைந்தது. 1936-37ல் 19,281 டன் மூங்கில் மாவு இந்திய காகிதத் தொழிலுக்கு உபயோகமாயிருக்கிறது. இந்த அளவு 1944-ல் 1,87,000 டன்களாக உயர்ந்துவிட்டது. வெறும் மூங்கிலை மட்டும் உபயோகிப்பதால், மூங்கில் தட்டு ஏற்படுமென்று புல்லையும் சேர்த்து உபயோகித்தனர்.

1932-ம் ஆண்டில் மீண்டும் நீடிக்கப்பட்ட இறக்குமதித் தீர்வையை 1947ல் இந்திய சர்க்கார் எடுத்துவிட்டனர். ஆதலால், இந்திய காகிதத் தொழில் அந்நிய நாட்டு காகிதத் தொழிலுடன் போட்டி போட வேண்டியிருக்கிறது. ஆகையால் மூங்கிலை மட்டும் எதிர்பாராமல் காஷ்மீர், கிழக்குப்பஞ்சாப் இன்னும் கிடைக்குமிடங்களிலிருந்தெல்லாம் மரங்களிலிருந்து கிடைக்கும் மரச் சக்கையையும் உபயோகிக்கத் திட்டமிட்டுள்ளனர்; மற்றும், மத்திய மாகாணத்திலுள்ள காட்டு மரங்களை உபயோகித்து "நியூஸ் பிரிண்ட்" தயாரிக்க நீபா மில்ஸ் ஏற்பாடு செய்துவருகிறது. (இதுவரை நியூஸ் பிரிண்டை கானடா, நார்வேயிலிருந்து இறக்குமதிசெய்துவந்தனர்.)

இந்திய காகிதத் தொழிலுக்கு ஒரு பெரிய உதவியிருக்கிறது. வெளிநாடுகளிலிருந்து வந்த மாவையும், மூங்கில் பசையையும் பரிசீலனை செய்து பார்த்ததில், வெளிநாட்டார் உபயோகிக்கும் மரங்கள் வளர 50 அல்லது 60 வருடங்கள் வேண்டும். இந்திய மூங்கில் வளர இரண்டிலிருந்து ஐந்து வருடங்கள் வேண்டியிருக்கிறது. எனவே, மூங்கிலால் தயாரிக்கும் காகிதத்திற்கு வேண்டிய மூலப் பொருளான மூங்கிலைச் சீக்கிரமாகவும், ஏராளமாகவும் பெறமுடியும்.

உலகிலே உண்டாக்கப் பெறும் காகிதத்தில் 100க்கு 80 அல்லது 85 பங்கு மரத்தினின்றே தயாரிக்கப் பெறுகிறது. ஒரு வருட காகிதத் தொழிலுக்குச் சராசரி 50 கோடி மரங்கள் தேவை. ஆதலால், இவ்விஷயத்தில் நாம் மிக ஜாக்ரதையாக இருக்க வேண்டும். காட்டு வளத்தை ஒரேயடியாக அழித்துவிடாமல் பார்த்துக் கொள்ளவேண்டியது மிக முக்கியம்.

இப்போது இந்தியாவில் உற்பத்தியாகும் காகிதம் லக்ஷம் டன்தான். 1955ம் வருடத்தில், மாதத்திற்குச் சராசரி 450 டனை காகிதந்தான் உற்பத்தியாகிக்கொண்டிருந்தது; அச்சமயத்தில் ஐக்கிய அமெரிக்காவில் மட்டும் 1,25,000 டன் உற்பத்தியாகியிருக்கிறது. நாம் எவ்வளவு மோசமான நிலையிலிருந்திருக்கிறோம்? இப்போது பரவாயில்லை; மாதத்திற்கு ஏறக்குறைய 8 ஆயிரம் டன்னுக்கு மேல் உற்பத்தியாகிறது. இந்த அளவுகூட போதாது. இன்னும் அதிகரிக்க வேண்டும். 1951ம வருடத்திற்குள் 1,89,000 டன் காகிதம் வேண்டியிருக்கும் நமக்கு; அறிஞர்களின் கணக்குப்படி காகிதத் தேவை அதிகரித்துக்கொண்டே போவதால், 1956ம் ஆண்டிற்குள் 3,42,000 டன் வேண்டியிருக்குமெனத் தெரிகிறது.

இத்தொழில் லாபந்தரக்கூடியது; ஆகவே, நாட்டுக்கு அவசியமான இந்தொழிலை நடத்தினால் நாட்டின் முன்னேற்றத்திற்கு உதவியதுபோலவுமிருக்கும்; வேலையில்லாதவர்களுக்கு வேலை கொடுத்தது போலவுமிருக்கும். முடிவாக, காகிதம் வாங்க நாம் கொடுக்கும் பணம் நம் நாட்டைவிட்டு வெளியேறுததோடு நடத்துபவருக்கும் லாபங்கிடைக்கும். இதை விளக்கக் கடைசியாக வெளியிடப்பட்ட பங்கு மார்க்கெட்டின் ரிபோர்ட் கீழே தரப்படுகிறது.

| கம்பெனி | கடைசி புள்ளி | கொடுத்த பங்கு | கொடுத்த முதல் | வட்டி கொடுக்கப்பட்டது 1943 | 1944 | 1945 | 1946 |
|---|---|---|---|---|---|---|---|
| பெங்கால் பேப்பர் மில்ஸ் | 208 | 25 | 9,00,000 | 45 | 45 | 45 | 45 |
| ஓரியண்டல் பேப்பர் மில்ஸ் | 29½ | 10 | 20,97,500 | 15 | 15 | 15 | 7½ (6மாதம்) |
| மைசூர் பேப்பர் மில்ஸ் | 17⅗ | 10 | 25,00,000 | 12½ | 5 (9மாதம்) | 6¼ | 7½ (,,) |
| இந்தியா பேப்பர் மில்ஸ் | 210 | 100 | 30,00,000 | 12 | 12 | 12 | 12 (,,) |
| ஸ்ரீ கோபால் பேப்பர் மில்ஸ் | 14 | 10 | 50,04,167 | 15 | 12½ | 12½ | 10 |
| டிடாகர் பேப்பர் மில்ஸ் | 51⅛ | 2½ | 4,37,50,000 | 10 | 10 | 10 | 5 (6மோதம் |
| | 44⅝ | A 10 | 17,50,000 | 30 | 30 | 30 | 12½ ,,)) |
| | 45⅝ | B 10 | 70,03,000 | | | | |

இம்மாதிரியான லாபம் இன்னும் குறைந்தது 10 முதல் 15 வருடங்கள்வரை நீடிக்குமெனத் தெரிகிறது. ஆகையால், தனிப்பட்டவர்களும் கூட்டுறவு முயற்சியில் ஆரம்பித்து நடத்தலாம்; அல்லது ஆரம்பமாகும் கம்பெனிகளில் பணம் போடலாம்.

அரசாங்கமும் காகித உற்பத்தியதிகரிக்க முடியுமளவு உதவி செய்து வருகிறது. தற்போதைய நிலையில் பாபநாசத்தினருகில் கிடைக்கும் ஒருவித நாணல் செடியையும் ராயல சீமையில் கிடைக்கும் போதர் புல்லையும், விசாகை வயநாடு முதலிய இடங்களில் கிடைக்கும் காட்டு மூங்கிலையும் பயன்படுத்தி 4 அல்லது 5 காகித மில்களை நடத்தவியலும். இது தவிர, வயநாட்டில் நியூஸ் பிரிண்ட் பேக்டரி ஒன்றைத் தயாரிக்கவும் அரசாங்கம் ஆரம்பிக்க ஏற்பாடு செய்து வருகிறது.

புதிதாக, "காவேரி பேப்பர் மில்ஸ்" ஒன்றைக் குடகில் ஆரம்பிக்க முயற்சித்து ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கின்றனர். காகிதத்திற்கு வேண்டிய மூலப்பொருள்கள் குடகில் ஏராளமாய்க் கிடைக்கின்றன. சராசரி, வருடத்திற்கு 60,000 டன் மூங்கிலும், 20,000 டன் புல்லுமாகச் சுமார் 30வருடங்களுக்குக் கிடைக்கும் என்று தெரிகிறது. இதுவுந்தவிர, குடகில் நெல் ஏராளமாக விளைவதினால் வைக்கோலும் காட்டுப்புல்லையுங்கூட உபயோகிக்க முடியும். இங்கு 10,000 டன் காகிதம் தயாரிக்க முடியும்; அதாவது, 8 ஆயிரம் டன் காகிதமும், 2 ஆயிர டன் அட்டையும் உற்பத்தியாகும். இதுவுந்தவிர இங்கே சந்தன எண்ணெயும் தயாரிக்கப் போகிறார்களாம். ஆகவே, உபபொருள்வேறு தயாராவதால், காகித விலையுங் குறைவாகவிருக்கக் கூடும். காகித விலை குறைவாயிருந்தால், பெரிய அளவில் காகிதம் விற்பனையாகும். எனவே, லாபம் கிடைப்பதில் சந்தேகம் வேண்டியதில்லை. இந்தியாவைத் தவிர அந்நிய நாட்டிலும் சந்தன எண்ணெயை விற்க முடியுமாதலால், அந்நிய நாட்டிலே கூட இதற்கு வரவேற்பிருக்கும்.

இந்திய சர்க்காரின் கீழிருக்கும் டேராடூன் ஆராய்ச்சிக் கழகம் சுலபமாகக் கிடைக்கும் பொருள்களினால் காகிதம் தயாரிக்க முடியுமாவென ஆராய்ந்து கொண்டிருந்தது. இதன் ஆராய்ச்சியினால் பனைமட்டையிலிருந்து காகிதம் தயாரிக்க முடியும் எனக் கண்டு பிடித்துள்ளனர். இது, சமீபத்தில் பிரசுரிக்கப்பட்ட ஒரு வெளியீட்டில் (ஐ. என். எல் 116) விளக்கியிருக்கிறார்கள்.

சோழ மண்டல கடற்கரை, கர்னாடகம், கொங்கணம், பீகார் பிரதேசங்களில் ஏராளமாய் பனை மரங்கள் விளைகின்றன. இவை ஏராளமாய்க் கிடைப்பதால், பனை மட்டைகளைக் காகிதக் குழம்பு செய்வதற்கும், காகிதம் தயாரிப்பதற்கும் உபயோகிக்க முடியுமாவென இக்கழகம் பரிசோதனை நடத்தியதில், எழுத்து வேலை அச்சுவேலை ஆகியவைகளுக்கு நடுத்தரக் காகிதங்களைத் தயாரிப்பதற்குப் பனை மட்டை யேற்றதாயிருக்குமெனக் கண்டறியப்பட்டது. இது முழுவெற்றியடைந்தால், அனாவசியமாக்கப்படும் இந்தப் பனை மட்டையை வேலைக்கு உபயோகப் படுத்த முடியும்.

**Edited & Published by N. R. Ramanujan & Printed by S. Rangaswami at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.**

# ஸ்டாண்டர்ட்
## வான்கார்ட்



## குடும்பத்திற்கேற்ற, எங்கும் பிரசித்திப்பெற்ற கார்

**கீழ்க்குறித்த குணம்சங்களை கவனியுங்கள்:**

- சுருள் ஸ்பிரிங்குகளும் மெத்தையும் கூடிய சௌகரியம்
- ஆறு பேர் தாராளமாக உட்காரலாம்
- 17·8 H. P என்ஜின்
- 8'' க்ளியரன்ஸ் — நாட்டுப்புற ரஸ்தாக்களுக்கு இணையற்றது
- மிகச் சிக்கனமான பெட்ரோல் செலவு
- மோட்டார் சவாரியில் மிக நவீன வசதியனைத்தும் உடையது

## யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) லிமிடெட்,

**மதராஸ் — பெங்களூர் — உதகமண்டலம்**

### எங்கள் டீலர்கள்

திருச்சி & புதுக்கோட்டை — G. N. சக்ரபாணி செட்டி & ஸன்ஸ் லிமிடெட், திருச்சிராப்பள்ளி.

மதுரை ராமனாதபுரம் — G N. சக்ரபாணி செட்டி & ஸன்ஸ், மதுரை.

திருநெல்வேலி ஜில்லா — G. N சக்ரபாணி செட்டி & ஸன்ஸ், திருநெல்வேலி.

திருவாங்கூர் — தி குயிலான் ஆட்டோமோபயில்ஸ், குயிலான்.

கொச்சி & கோயம்பத்தூர் — தி அஸ்ஸோஸியேடெட் ஆட்டோமோபயில்ஸ் லிமிடெட், கோயம்பத்தூர்.

தென் கன்னடம், மலபார் & குடகு — தி ஸென்ட்ரல் இன்ஜினீயரிங் ஒர்க்ஸ், மங்களூர்.

நீலகிரி — யூனியன் & Co., (மோட்டார்ஸ்) லிமிடெட், உதகமண்டலம்.

மைசூர் ஸ்டேட் — தி யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) லிமிடெட், பெங்களூர்,

சேலம் ஜில்லா — ஸ்ரீ P. N. சுப்பாராவ், சேலம்.

நெல்லூர் ஜில்லா — தி ஸ்டேன்டர்ட் ஆட்டோமோபயில்ஸ், நெல்லூர்.

குண்டூர், கிருஷ்ணா, மே. கோதாவரி—ஸ்ரீ பிரகாசா ஆட்டோமோபயில்ஸ், விஜயவாடா.

விசாகப்பட்டினம் & கி. கோதாவரி — தி வைஸாக் ஏஜன்ஸீஸ், (ஆட்டோமோபயில்ஸ்) விசாகப்பட்டினம்.

ஸீடட் டிஸ்டிரிக்ட் — தி பெல்லாரி காரேஜ்.

No. M 4405




The Cauveri Colour Press, Kumbakonam.